# சூளாமணி

(வசனம்)

கடலூர் டவுன் ஹைஸ்கூல்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
ந. பலராம ஐயர்
இயற்றியது.

சென்னை
கணேஷ் கம்பெனி
1918

விலை ரூ 1.

# முகவுரை

இவ்வசன நூலுக்கு முதனூலாகிய சூளாமணிக் காவ்யம் தோலாமொழித் தேவர் என்னும் பெயர்கொண்ட கவிஞர் பெருமானால் இயற்றப்பட்டது. அவர் ஜைன மதத்தைச் சார்ந்தவர். தற்காலத்தில் சித்தூர் ஜில்லாவைச் சேர்ந்த கார்வேட்டு நகரில் முன்பு சிற்றரசனாயிருந்த விஜயராஜன் காலத்திலிருந்தவரென்பது நூற் சிறப்புப் பாயிரத்தால் விளங்குகிறது. ஆனால் எக்காலத்திலிருந்த விசயனென்பது சரித்திரத்தால் விளங்கவில்லை, எனினும் ஜைனமதம் பிரபலமாயிருந்த கி. பி. ஆறாம் நூற்றாண்டில் இவர் இருந்திருக்கலாமென்று ஒருவாறு ஊகமாய்ச் சொல்லலாம்.

நூலாசிரியரையும் உரையாசிரியரையும் அவர்தம் இயற்பெயர்கொண் டழைக்காது மற்றொரு காரணம் பற்றிய பெயரால் அழைப்பது முற்காலத்திய வழக்கமாயிருந்தது. உதாரணமாக, திருக்கோவையார் உரையாசிரியர், பேராசிரியர் (மஹோபாத்தியாயர்) என்றே வழங்கப்படுவார். அதுபோலவே, "இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கிணங்க, தொன்மையாகிய பழங்கதை மேலதாய் இழுமென்னுமினிய மென்சொல்லாலியன்று விழுமிய பொருட்டொடர் நிலைச்செய்யுளாகிய 'தோல்' என்பதனைக் கூறும் மொழியினை யுடையார் என்ற காரணப் பெயரிடப்பட்டு நமது ஆசிரியரும்

வழங்கப்பட்டனரென்றே தோன்றுகின்றது. இதுவே யுமன்றி, பழைய புலவர்களுக்கும் அவர்கள் நூல்களுக்கும் அவரவர்கள் செய்யுட்களிற்பிரயோகித்த ஒவ்வோர் அருமையான தொடர்மொழி காரணமாகப் பெயர் வழங்கி வந்ததாகவும் தெரிகிறது. 'மலைபடுகடாம்' என்ற அருந்தொடர் மொழியால் அத்தொடர் வந்துள்ள கூத்தராற்றுப் படையும் பிற்காலத்தில் வழங்கலாயிற்று. கல்பொரு சிறுநுரையார், தேய்புரி பழங் கயிற்றினார், மீனெறி தூண்டிலார் என்ற புலவர்கள் பெயரும் அவர்கள் உபயோகித்த அவ்வரும் தொடர் மொழிகளைக் கொண்டே வழங்கப்படலாயின. இங் ஙனமே, சூளாமணி நூலாசிரியரும், தோல்வி யடையாத என்ற பொருளில் 'தோலா' என்ற சொல்லைத் தமது காப்பியத்தில் அருமையாய்ப் பிரயோகஞ் செய்துள்ளார். "ஆர்க்குந் தோலாதாய்" (அரசியற் சருக்கம், 349) "தோலா நாவிற் சுச்சுதன் சொல்லும் பொருளெல்லாம்" (மந்திரசாலைச் சருக்கம், 70) என்ற இடங்களில் இவர் 'தோலா' என்ற மொழியை உபயோகித்த அருமையைக் கொண்டு புலவர்கள் இவரைத் தோலாமொழித் தேவர் என்று கூறினர், எனலும் பொருந்தும். ஆதலின் ஈண்டுக்கூறிய இரண்டு காரணங்களில் எதுபற்றியாயினும், இவர்க்கு வழங்கிய தோலாமொழித் தேவர் என்ற பெயர் இயற்பெயரன்றிக் காரணப் பெயரென்றே துணியப்படும். தேவர் என்ற பெயர்ப் பகுதியால் இவர் ஜைனரென்பது போதரும்.

சூளாமணிக் கதை ஆருகத மகாபுராணமாகிய ஸ்ரீ புராணத்தில் சிரேயஸ்வாமிகள் புராணத்தி னிறுதியிற்

றப்பட்டுள்ளது. அதன் கண், கதாநாயகனுன
திவிட்ட குமாரனுடைய முற்பிறப்பின் வரலாறு காணப்
படுகின்றது. அதனைப் பின் வருமாறு சுருக்கி வரை
கின்றோம் :—

“ மகதந்தேசத்தில் இராஜக்ருக நகரத்தில் விசுவபூதி
என்ற ஓரரசனிருந்தான்; அவன் மனைவி ஜைநீ. அவர்
களுக்கு விசுவநந்தி என்ற பெயருடையதோர் புதல்வ
னிருந்தான். விசுவபூதி அரசாண்டு வருகையில் ஒரு
நாள், திரண்டிருந்த சரத்கால மேகமெல்லாம் காற்றுற்
சிதறுண்டு நாசமடைந்ததைப் பார்த்து, உலக வாழ்க்
கையில் வெறுப்புக்கொண்டு, தனது தம்பியாகிய விசாக
பூதிக்கு முடிசூட்டுவித்துத் தன் புதல்வனாகிய விசுவநந்
தியை இளவரசாக அமைத்துத் தான் ஸ்ரீதர முனிவரி
டம் தீக்ஷைபெற்றுத் துறவியாயினன்.

விசுவநந்தி யுவராஜா அத்தியந்த விசுவாசத்தோடு
பரிபாலித்துவந்த மநோஹரமென்றதோர் உத்தியான
வனம் அதிக இரமணீயமாயிருந்தது. அதில் பற்பல
விதமான புஷ்பச்செடிகளும் அபூர்வ விருக்ஷங்களும்
செறிந்திருந்தன. ஒருநாள் விசாகபூதியின் புதல்வ
னாகிய விசாகநந்தி யென்பான் இந்த மநோஹரோத்தி
யான வனப்பினைக் கண்ணுற்று அச்சோலையைத் தன்
னதாகப் பெறவேண்டுமென்னும் பேராசை கொண்டது
மன்றி, அவன் உடனே தன் பிதாவினையடைந்து,
“ விசுவநந்தியால் கற்பிக்கப்பட்ட மநோஹரோத்தியான
வனத்தினை எனக்குத் தந்தருளவேண்டும். இன்றேல்
யான் தேசத்தைவிட்டு ஓடிப்போவேன் ” என்று நிர்ப்
பந்தித்தனன். அவனது உபத்திரவத்தினைப் பொறுக்க

முடியாத தந்தையும் அச்சோலையைத் தன் மைந்தனு க்கு உபாயத்தால் வாங்கிக்கொடுக்க நினைத்துத் தனது ஜேஷ்ட ப்ராதாவின் குமாரனாகிய விசுவநந்தியை யழை த்து, "குமாரனே, நமது சத்துருக்கள் மிக்க பலத்தை யடைந்தவராய்ச் சதுரங்க சைனியமும் கூட்டி நம்மேற் போர்க்குவரச் சன்னத்தராயிருக்கின்றனர். அதற்கு முன் யானே அவர்மேற் படையெடுத்துச் சென்று அவரை வென்று மீளும் அளவும் நீ இராஜ்யரக்ஷணை பண்ணிவருவாயாக" என்று கூறினன். அதனைக் கேட்ட விசுவநந்தி அரசனைநோக்கி, "ஐய! இந்தச் சத்ரு பங்கமாகிய க்ஷாத்ரகாரியத்தில் யானே சமர்த்தன், ஆத லால் இக்காரியத்தில் அடியேனை அனுப்பியருளுங்கள்; யான் சென்று பகையைவென்று வருவேன்" என்று விண்ணப்பித்தனன். விசாகபூதி தன்கருத்து நிறைவே றியதால் மனங்களித்து, விசுவநந்திக்குப் பகைவர்மேற் போருக்குச்செல்ல அனுமதி யளித்தனன். அவனும் நால்வகைப் படையுடனும் கருதிய தேசத்தின்மேற் போருக்குச் சென்றனன்.

பிறகு விசாகபூதி மனோஹரோத்தியானத்தினைத் தன் புதல்வனுக்குக் கொடுப்ப, அவனும் அதனுள் இருந்து பலவித சுகபோகங்களை அனுபவித்து வந்தனன். போருக்குச் சென்ற விசுவநந்தி, தனது சிறிய தகப்பன் செய்த வஞ்சகத்தைத் தன் நண்பர் மூலமாய் அறிந்து அடங்காக் கோபங்கொண்டு மீண்டு இராஜக்ருக நகர மடைந்து விசாகநந்தியை எதிர்த்துப் போர் செய்த னன். பலமற்ற விசாகநந்தி அவ்வீரன் போருக்கு ஆற்றாது தோற்று ஓடி யொரு விளாமரத்தில் ஒதுங்கி

னன். விசுவநந்தி அம்மரத்தினை வேரோடு பெயர்த்து வீசியெறிதலும், அங்குநின்று விசாகநந்தி மீளவும் ஓடி யொரு பெருங்கற்றூணிலே மறைந்தனன். விசுவ நந்தி அக்கற்றூணையும் பிடுங்கிக் கரத்தாலடித்துச் சூர் ணமாக்கினன். மீளவும் அவ்விடம்விட்டு மிகப் பரிதாப மான நிலையுடன்ஓடும் விசாகநந்தியைக் கண்டு தன் கோபமாறி விசுவநந்தி அவனைக் கருணையோடு 'பயப் படேல்' என்று அபயாஸ்த மளித்ததுமன்றி அம் மநோஹரோத்தியாந வனத்தினையும் கொடுத்துவிட்டு, தான் சம்சாரத்தில் விரக்திபூண்டு, ஸ்வயங்க்ருதா பராதத்தால் யாவற்றையும் வெறுத்து நின்ற தன் சிற்றப்பனோடு ஸம்பூத குருவினையடைந்து அவர்பால் தருமோபதேசங் கேட்டுத் தீக்ஷைபெற்றுத் துறவு மேற்கொண்டனன்.

துர்ப்பலனாகிய விசாகநந்தி தான்செய்த தீவினைப் பய னால் இராஜ்ஜியத்தைத இழந்து பரதேசம் புகுந்து மற் றோர் அரசனுக்குத் தூதுவனாகி மதுராமாநகரை யடை ந்து ஓர் கணிகையின் வீட்டிலிருந்தனன். அவ்வமயம், பிக்ஷுணிக்கோலம்பூண்டு விசுவநந்தி விசாகபூதித் தபோ தனரிருவரும் அவ்வீதிவழியாய்ப் பிச்சையெடுத்துச் சென்றனர். உபவாச விரதத்தால் மிகவும் இளைத்துக் களைத்திருந்த விசுவநந்தியை ஒரு பசுமாடு முட்டித் தள்ள அவன் கீழேவீழ்ந்து மூர்ச்சை யாயினன். இதனைப் பார்த்துக்கொண்டிருந்த விசாகநந்தி சந்தோ ஷத்தை யடைந்தவனாய்ப் புன்னகைசெய்து விசுவநந் தியைநோக்கி, "முன்னர், சிலாஸ்தம்ப பங்கம் பண்ணிய பராக்ரமம் யாங்குப் போயிற்று?" என்று பரிகசித்

தான். இதனைக்கேட்ட விசுவநந்தி முனிவரன், அவனை நோக்கிக் குரோதாக்நியால் அவனைத் தஹிப்பான் போன்று பார்த்து, "இந்தப் பரிகாசத்தின் பலனை மற்றொரு பிறப்பிற் காட்டுவேன்" என்று கூறி உயிர்நீத்தனன். விசாகபூதியும் விசுவநந்தியும் இறுதியில் மகாசுக்ரகல்பத்தில் தேவராயினர்.

விசாகநந்தி நெடுங்காலம் சம்சாரசாகரத்தில் உழன்று, பிறகு விஜயார்த்த பருவதத்து உத்தரச்ரேணியில் அளகாபுரத்து வித்யாதரராஜா மயூரக்ரீவன், தேவி நீலாஞ்சனை இவர்களுடைய புதல்வன் அச்வக்ரீவன் என்பானாகிப் பிரதி வாஸுதேவனாயினன்.

இஃதிப்படியிருக்க ஸுரம்ய தேசத்தில் பௌதநபுரத்தில் பாகுபலி ஸந்ததியைச் சேர்ந்த பிரஜாபதியெனப் பெயரிய அரசனொருவனிருந்தான். அவனுக்கு ஜயவதி ம்ருகாவதி யெனப் பெயரிய மனைவியரிருவருளர். விசாகபூதியாகியதேவன் ஜயவதியின் குமாரனா யவதரித்து விஜயன் என்ற பெயருடன் பலதேவனாயினான்; விசுவநந்திதேவன் ம்ருகாபதி புத்திரனாகி, த்ரிப்ருஷ்டநாம வாஸுதேவனாயினன். இவ்விருவர்களும் நிறத்தாலும் குணத்தாலும் படைகளாலும் லீலைகளாலும் முறையே பலதேவ கிருஷ்ணவதார மூர்த்திகளை யொத்திருக்கின்றனர். பிரதி வாஸுதேவனாயுற்பவித்த அச்சுவகண்டன் ஒருவாறு சிசுபாலனை யொத்துமுளன். விஜயத்ரிவிட்ட ரிருவர்களின் ஐச்வரியங்களைப்பற்றி, ஸ்ரீ புராணத்திற் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது :—

"வாஸுதேவனுக்கு ஸ்வயம்ப்ரபை முதலிய

தேவிமார் பதினாறாயிரவர்; மகுடபத்தரும் அத்துணை யர்; மஹாராஷ்ட்ரங்களும் அத்துணைய. த்ரோணமுக ங்கள் ஒன்பதினாயிரத்துத் தொண்ணூற்றைம்பது. பட்ட ணங்கள் இருபத்தையாயிரம்; கர்வடங்கள் பன்னீராயி ரம்; மடம்பங்களும் அத்துணைய; கேடங்கள் எண்ணா யிரம்; அந்தரத்வீபங்கள் இருபத்தெட்டு; க்ராமங்கள் நாற்பத்தெட்டுகோடி; யானைகள் நாற்பத்திரண்டு நூறா யிரம்; ரதங்களும் அத்துணைய; குதிரைகள் ஒன்பது கோடி; காலாள் நாற்பத்திரண்டுகோடி; கணபத்ததே வர்கள் எண்ணாயிரவர். ப்ரத்யேகம் யக்ஷஸஹஸ்ர பரி பால்யமாகிய ரத்நங்கள் ஏழு; அவையாவன: ஸுதர் சநமென்பது சக்ரம்; கௌமோதகி யென்பது தடி, அமோகமென்பது வேல், ஸௌநந்தமென்பது வாள், சார்ங்கமென்பது வில், கௌஸ்துபமென்பது ரத்நம், பாஞ்சஜந்யமென்பது சங்கம்.

“பலதேவனுக்குத் தேவிமார் எண்ணாயிரவர், ப்ரத் யேகம் யக்ஷஸஹஸ்ரபரிபால்யமாகிய ரத்நங்கள் நாலு; அவையாவன: அபராஜிதமென்பது கலப்பை, கௌ முதியென்பது தடி, அமோகமென்பது முஸலம், ரத்நா வதம்ஸிகை யென்பது மாலை.”

ராமகேசவர்களாகிய இவர்களது தவள நீலவர்ணத்த தாகிய திவ்ய தேஹோத்ஸேதம், எண்பது வில்லு. இவ ர்கள் பரமாயுஷ்யம், எண்பத்துநான்கு நூறாயிரம் ஸம் வத்ஸரம்.

பலதேவ கிருஷ்ண சரிதங்களில் கிருஷ்ணனுக்கே பிராதான்யங்கொடுத்துக் கூறப்பட்டதுபோல, ஈண்டும்

இளையோனாகிய திவிட்டனுக்கே சிறப்புக் கூறப்பட்டுள்ளது.

வாஸுதேவர்கள் ஒன்பதின்மரென்றும், அவருள் திவிட்டன் முதல்வனென்றும், பலதேவர்கள் ஒன்பதின்மரென்றும, அவர் தம்முள் விஜயனே முதல்வனென்றும், வாஸுதேவர்களுக்குப் பகையாகிய பிரதி வாஸுதேவர்கள் ஒன்பதின்மரென்றும் அவர் தம்முள் ஹயக்ரீவன் (அச்சுவகண்டன்) முதல்வனென்றும் ஜைன நூல்கள் கூறும்.

திவிட்டன் கோடிக்குன்றத்தைப் பெயர்த்தெடுத்தது கண்ணபிரான் கோவர்த்தனகிரியைக் குடையாக ஏந்தியதையும், திவிட்டன் சிங்கத்தைப் பிளந்தது, கண்ணன் பல மிருகரூபமாய் வந்த அசுரர்களைக் கொன்றதையும், அச்சுவகண்டன் அனுப்பிய சண்டவேகையைத் திவிட்டன் தொலைத்தது, வாணன்போரில் ஜ்வரதேவதையைக் கண்ணன் தொலைத்ததையும் நிகர்க்கும். இவை பற்றியே ஜைனர்களும் இவனைத் திருமாலின் அம்சமாகக் கொண்டாடினரென்பது, 'பகுவாயரியேறு போழ்ந்த செங்கண் நெடியான்,' 'கொற்றங்கொண்டாழி நெடுமால் குணங்கூற' என்னும் பாயிர அடிப் பகுதிகளால் அறியக்கிடக்கும்.

கண்ணனுக்கு மாறாய்த்தோன்றி, திருமாலின் சின்னமாகிய சக்கிரம் முதலிய பஞ்சாயுதங்களைத் தரித்து மாயாகருடனொன்றை வாகனமாகக்கொண்டு விளங்கி, முடிவில் கண்ணன் கைச்சக்கிரத்தால் முடிந்த பௌண்டரிக வாசுதேவன் அச்சுவகண்டனை ஒருவாறு நிகர்ப்பன்.

இந்நூலிற் சொல்லியுள்ள விஞ்சையருலகு எனப் படும் வித்தியாதரலோகம் இமயமலையின் வடபுறச் சாரலில் ஸிந்து கங்கை பிரமபுத்திரியாகிய புண்ணிய நதிகள் உற்பவிக்கும் பிரதேசமா யிருக்கலாமென்று புலப்படுகிறது. அவ்வித்தியாதரவுலகம் உத்தரசேடி தக்ஷிண சேடியென்று இருபகுப்பினை யுடையதென்றும், அவ்விருசேடியார்க்கும பலதடவைகளிலும் போர் நிகழ்ந்துள்ளவென்றும், வித்தியாதரார் மாயவித்தையில் வல்லவராய் ஆகாயத்திற் பறக்குஞ் சக்தியுடைய வொருவகைத் தேவஜாதியரென்றும, அவர்க்கு மண்ணுலகத்தவர் அடங்கிக் கப்பங்கட்டி வந்தனரென்றும், இந்நூலின் கதை கூறுகின்றது. வித்தியாதரார்க்கும் மண்ணுலகினர்க்கும் மணவினைச்சம்பந்தம் இந்நூலுட் கூறப்பட்டுளதுபோலச் சிந்தாமணியென்னும சைன நூலிலும் வித்தியாதர மங்கையாகிய காந்தருவதத்தையினைச் சீவகன் மணம்புரிந்த வரலாறு கூறப்பட்டிருக்கிறது. இவற்றையாய்ந்து நோக்குமிடத்து மிக்க வலியுள்ளவர்களான இமயமலைச் சிகரவாசிகளுள் இவ்வித்தியாதரரு மொருவகுப்பினரோ என்று கருதுதற்கிடமுண்டு.

மாநுடர்க்குப் பின்னிகழும் சம்பவங்களை முன்னுணர்த்துவதன்பொருட்டுக் கனவுகள் நிகழுமென்பதும் அவற்றைச் சோதிடம் வல்ல நிமித்திகர்கள் நன்காராய்ந்து அக்கனவுகளின் இரகசியார்த்தங்களைத் தெரியப்படுத்துவரென்பதும், அந்நிமித்திகர்களை அரசர்கள் நன்குமதித்துப் பெருமையாகத் தமது ஸமஸ்தாநிகர்களுட் சேர்த்துவைத்தனரென்பதும், இந்நூலால் விளங்குகின்றன. இவ்வாறே, சிந்தாமணியிலும் சிலப்பதிகாரத்தி

ம், கனவுகள் கண்டதும் அவற்றிற்கேற்பப் பின்னிகழ்வன சம்பவித்தமையும் விரித்துக் கூறியுள்ள விவரம் இங்கே கவனிக்கத்தக்கது. நம்மவர்க்குக் கனவிலுள்ள நம்பிக்கை மிகவும் அதிகமென்பது இதனால் வெளியாகும். இராமாயணத்தில் திரிசடைகண்ட கனவும் அதன் பயனை விளக்கியதும் மேற்கூறியதனை வலியுறுத்தப்போதிய சான்றும்.

பெரும்பாலும் சமணநூல்கள் துறவினையும் முக்தியையும் இறுதியிற்கூறி முடிக்கும் வழக்கம்போல, இந்நூலுள்ளும் பயாபதி அரசன் தன் புதல்வரைப் பூமியாளவைத்து மனைவியருடன் துறந்து தவஞ்செய்து முத்திபெற்ற வரலாறு மிகவிரிவாய்க் கூறப்பட்டுள்ளது; மேலும் இதன்கண் சுவர்க்க நரகங்களைப் பற்றியும் அவற்றுட் புகுவோர் அனுபவிக்கும் இன்பதுன்பங்களைப் பற்றியும் அதிக விநோதமாய் வருணிக்கப்பட்டுள்ளன.

இந்நூலின் கதாநாயகனாகிய திவிட்டன் ஜைனஸ்வாமிகளாகிய இருபத்துநான்கு தீர்த்தங்கரருட் பதினோராமவரான சிரேயஸ்வாமிகள் காலத்தினனென்று சூளாமணிக்காவியப் பாயிரங்கூறும். ஸ்ரீபுராணத்திலும் "அதே, ஸ்ரீயஸ்ஸ்வாமி தீர்த்தஸந்தானகாலத்து ப்ரவித்த விஜயத்ரிப்ருஷ்ட அச்வக்ரீவ நாமப்ரதம ராமகேசவ ப்ரதிவாஸுதேவ சரிதம் ஆக்யாயதே" என்று ஆரம்பித்திருப்பது நோக்கத்தக்கது. ஜைனசமயத்தார் தீர்த்தங்கரர்களை அருகக்கடவுளென்றே கருதிக்கொண்டாடுவார்கள். தீர்த்தங்கரர்கள் உபதேசமில்லாமலே உண்மை ஞானம்பெற்று அசோகமரத்தின்கீழ் முக்

குடைநீழலில் சமவசரணமென்னும் ஜிநக்ருஹத்திலிரு ந்து ஞாநோபதேசம் செய்வர். அவர்பால் உபதேசம் பெற்றவர்கள் தமது கருமங்களையொழித்து வீட்டினை யடைவர். அக்கோயில் பூமிக்கு ஐயாயிரம் வில்லுய ரத்திற்குமேலே பன்னிரண்டு யோசனையுள்ளதாய்த் தேவரால் நிருமிக்கப்பட்டது. இவ்விவரங்கள் பலவும் சைன நூல்களுட் கண்டவை.

சூளாமணிக்காவியம் சொற்பொலிவு, பொருணயம், நடையழகு கற்பனையலங்காரம் கதைமுடிவு முதலியவற் றாற் சீவகசிந்தாமணியை யொக்கும். இக்காவியத்தின் சிறப்பினைநோக்கிக் குணசாகரர் முதலிய உரையாசிரி யர்கள் இந்நூலின் செய்யுட்களைப் பெரும்பாலும் உதா ரணமாக எடுத்துக் காட்டியுள்ளார்.

தமிழணங்கணியும் சிகாரத்தினம்போல விளங்கும் இக்காப்பியத்தைச் சுமார் முப்பது வருடங்கட்குமுன் கற்றவர்கண்டு களிகூர அச்சிட்டு வெளிப்படுத்திய மகான் காலஞ்சென்ற ஸ்ரீ சி. வை. தாமோதரம் பிள்ளை யவர்கள். பிள்ளையவர்கள் செந்தமிழ் நூல்களை யாய் வதே தமது பொழுதுபோக்காகக் கொண்டதுமன்றிப் பல அரிய தமிழிலக்கண இலக்கிய நூல்களை அச்சுவா கனமேற்றித் தமிழுலகில் நின்றுநிலாவி யுலாவச் செய் துள்ளார். அன்னோர் தமிழிற்குச்செய்த பேருதவி யினை யாவரு நன்கறிவர். மேலும் இவர், சூளாமணிக் காவியத்தைக் கற்கப்புகும் மாணவர் அதனை எளிதிலு ணரவும் ஏனையோரும் அக்காவியக் கதையினைப் படி த்து மனமகிழவும் கருதி, அந்நூற் சரித்திரத்தினை வசன நூலாகவும் செய்துள்ளார். அவ்வசன நூல் முதனூற்

செய்யுணடையையே பெரும்பாலுந் தழுவியதாய்த் திரிசொற்பிரயோகம் மிகுதியும் பெற்றுச் செந்தமிழ் பயில அவாவினை யுடையார்க்கேயன்றி ஏனையோர்க்குக் கடினமான நடையுடையதா யிருத்தலின், அக்கதையினை எளிய நடையிலெழுதினாற் பலர்க்கும் பயன்படக் கூடுமெனக் கருதி இவ்வசனநூல் எழுதப்பெற்றுள்ளது. இவ்வசனமும் முதனூலாகிய காவியத்தின் கதைப்போக்கையும் சொற்போக்கையுமே தழுவியுள்ளது ; எனினும் தமிழின் பாஷை நடை மேலுமேலுஞ் சிறப்பினையடையக் கருதவேண்டுவது ஒவ்வொருவர்க்கும் கடமையாமாதலின், இதன் கண்ணும் சிற்சில கடினமான சொற்களும் சொற்றொடர்களும் காணப்படும். அவற்றையுமெளிதிலுணர அரும்பதவுரை அகராதியொன்று இந்நூலினிறுதியிற் சேர்க்கப்பட்டுள்ளது.

வசனநூல் பல வேண்டுமென்று பெரிதும் விரும்பும் இக்காலத்தில் இந்நூல் வேண்டாததொன்றாகாது என்று கருதியே வரையலாயிற்று. இதன்கண் முக்குணவயத்தான் முறைபிறழ்ந் தெழுதிய பிழைகள் பல வுளவெனில், குற்றம் நீக்கிக் குணத்தை மேற்கொள்ளும் பெரியார் பலரையும், அவற்றிற்காக எம்மைப் பொறுத்தருள் புரிய வேண்டுகின்றனம்.

கடலூர்,
16-9-1918.

ந. ப.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சூளாமணி

## அத்தியாயம் 1

திருவளர்ந்தோங்கிய பரத கண்டத்தில் சுரமை என்னும் பெயர்கொண்ட புராதன நாடொன்றுண்டு. மேகங்கள் நாற்புறமும் தவழும் அழகிய கோடிக்குன்றமென்னு மலையைப் பெயர்த்தெடுத்தேந்திய திவிட்டகுமாரன் விருப்புடன் அரசு வீற்றிருந்தது அந்நாடென்ப. எல்லாச் செல்வத்திற்கும் இருப்பிடமென்னலாம்படி அந்நாடு நானிலவளங்களும் ஒருங்கே அமையப்பெற்றதாம். மலைகளிலெல்லாம், ஒருபுறம் அருவிகளின் ஆரவாரத்தோடு யானைக் கூட்டங்களின் பிளிற்றொலியும் குறவர்கள் முருகவேட்கு வெறியாட்டயரும் விழவொலியும் மலிந்திருக்கும்; மேகங்கள் இடிக்கும் பொழுதெல்லாம் நீலமணிபதித்த ஆலவட்டம்போன்ற தமது கலாபங்களை விரித்து மயிற் கூட்டங்கள் ஒருபுறம் ஆடிக்கொண்டிருக்கும்; மற்றொருபால், வேங்கை, காந்தள், நீலம் முதலிய மலர்களின் நறு

மணங்கமழாநிற்க, அலற்றினின்றும் ஒழுகிய தேன் பெருக்கெடுத்து அருவிபோல் ஓடும்; இன்னு மோர்பால், சந்தன மரங்களின் நீழலில் களிற்றினங்கள் தமது மதத்தை யுண்ணவரும் வண்டினங்களைப் பிடிகள் காந்தட் குலைகளால் ஓட்டாநிற்பப் பெருமகிழ்ச்சியோடும் உறங்கும். காடுகளெங்கும் இடையர்களின் புள்ளாங்குழலொலி பண்ணிறப் பறவைகளின் ஒலியினும் மிக்கொலிக்கும்; கொன்றை, குருந்து, முல்லை முதலிய மலர்களின் வாசனை வண்டினங்கள் வந்து தேனை யாசிக்கும்படி எங்கும் பரவி நிற்கும். மருத நிலங்கடோறும் நாட்டிய மகளிரின் மத்தள வொலியும் சங்கினங்களி னோசையும் மங்கல வாத்தியங்களின் கீத நாதமும், வயலில் உழவர்களின் ஆரவாரமும் மிகுந்திருக்கும்; தடாகங்களில் தாமரை ஆம்பல் முதலிய மலர்கள் அழகாய் மலர்ந்து திகழும்; ஒருபுறம் கருநிற எருமைகள் குவளைகண்மலர்ந்த பொய்கைகளில் விழுந்து உழக்கும் கண் கவர் வனப்பினை யுடையதாகும். கடற்கரை நிலங்களெங்கும், செம்படவர்களின் மீன் பிடிக்கும் ஓசையும் பரதமகளிரின் மீனுணக்கும் ஆரவாரமும் கடற் சிறுவர்களின் நீர் விளையாட்டின் ஒலியும் கடன் முழக்கினும் பதின்மடங்கு மிக்கொலிக்கும்; புன்னை, தாழை, நெய்தலாதிய மலர்களின் மணம் கடலின் புலவு நாற்றத்தையு நீக்கும். நீர்வள நிலவள முதலிய வளங்கள் பலவும் பொருந்திய இந்நாட்டினைத் திருமகளின் நடனசாலையாகக் கூறுவது மிகவும் பொருத்தமானதே.

நன்னீர்த் தடாகத்தின் நடுவே மலர்ந்த தாமரை

மலர்போல ரமணீயமான இந்நாட்டிற்குப் பேரணிகல னும் எல்லாச் சிறப்புக்களையு முடையதாய் பற்பலவித மதிலுறுப்புக்களையும் கோட்டை கொத்தளங்களையும் பெற்று இந்திரபுரியாகிய அமராவதியையும் அழகினால் வென்று விளங்குவது அதன் தலை நகராகிய போதனமா நகரம். இந்நகரின் மாடமாளிகை கூடகோபுரங்களின் பேரழகும் கடைவீதிகளின் விநோதக்காட்சியும் அந்த ணர் அரசர் வணிகர் சூத்திரர் என்னும் நால்வகை வருணத்தார்களின் இருக்கைகளின் ஒழுங்கும் இவற்றி னிடையே திவ்ய தேசோமயமாய் விளங்கும் தேவ கோட்டத்தின் எழிலும் வித்தியாதர வுலகம் இதுதானோ என்று யாவரும் மயங்கும்படிச் செய்யும். உலகிலுள்ள செல்வங்கள் யாவற்றையு மொருங்கே யோரிடத்திற் பார்க்க விரும்பினால் அந்நகரிலே அவற்றை யெளிதிற் காணலாம். இந்நகரின் மாட்சியைத் தோலா மொழி யையுடைய பெரும் புலவர்களாலும் வருணிக்கமுடி யாது; ஆயிரநாவுடைய ஆதிசேடனும் அதன் பெரு மையை யெடுத்துக்கூற ஆற்றலிலனாவான். இந் நகரம் பொன் மணி முதலியவற்றின் பிரகாசத்தால் இரவும் பகலும் வித்தியாசம் காணப்படாது இமைய வருலகே இறங்கிவந்து இம்மண்ணிடைத் தங்கியது போல விளங்கும்.

இந்நகரத்தில், மனுநெறி தவறாது மன்னுயிரைத் தன்னுயிர் போலப் பாதுகாக்கும் பயாபதி என்னும் பெயருடைய அரசனொருவன் அரசுபுரிந்து வந்தனன். அவன் அரசாளுகையில் குடிகளுக்குத் துன்பம் என் பதன் பெயரே தெரியாது. அவன் சுத்தவீர சிகாமணி

யாதலால் அவனுக்குப் பகைவரேயில்லை. அவன் ஆட்சியின் பெருமையால் அகமகிழ்ந்த ஜனங்கள் தாமாகவே ஆறிலொருகடமை வலியக் கொடுத்துவந்தனரேயன்றி, அரசன் அவர்களை வருத்தித் திறையென்று ஒரு சிறிதும் வாங்கும் வழக்கமில்லாதவன். இவனது சௌரிய பராக்கிரமங்களை யறிந்த மற்றுநில மன்னர்கள் இவன் நட்பினைப் பெறும்பொருட்டுத் தாமே கப்பங் கட்டி வருவார்கள். பிரஜைகளைப் பாலிக்கும் தன்மையில் தலைமைபூண்டு விளங்கிய காரணத்தினால், பிரஜாபதி என்னும் பெயர் அவனுக்குக் காரணப் பெயராகவே அமைந்ததென்று சொல்லலாம்.

இம்மன்னன் உத்தம ராஜவம்சத்திற் றோன்றிய மங்கையர் பலரை மணந்துள்ளானாயினும் அவனுக்குப் பட்ட மகிஷியர் இருவர் உளர்; மூத்தவள் அழகின் மிக்க மிகாபதி என்னும் பெயருடையவள்; அவள் தங்கை சசிதேவியினும் பேரழகுடைய சசி என்னும் நங்கையர் திலகம் இரண்டாவது மனைவி. வசந்தகாலத்தில் மாங்கொழுந்து அசோகந்தளிராகிய இரண்டுமே நந்தவனத்தை அழகுபெறச் செய்வது; அதுபோல இவ்விரு தேவியரும் அழகிய இரத்தின குண்டலமணிந்த மங்கையர்க்கெல்லாம் பொன்மலர் விளங்கும் பூங்கொம்புபோலவும் அவர்களுக்குள் திலகம் போலவும் திகழ்ந்தனர். பெண்களும் பேரவாக்கொள்ளும் பேரழகாற்றிருமகளே போலவும் நாடோறும் கேட்பினும் புதுமையோடு திகழும் மழலைச் சொற்களால் நாமகளே போலவும் இருவரும் மன்னனுடைய மனமாகிய தாமரையிற் குடிகொண்டு உறைந்தனர். அரசனுக்கு அவர்

கள் ஆவியாயினர்; அவர்களுக்கு அரசன் உயிராயினன். அரசன் உலகங்காக்குந் தொழிலைப் புறத்தே செய்து கொண்டு அவ்விருமங்கையரின் அகத்தே பிணிக்கப் பட்டிருந்தனன். அவனும் அம்மகளிரும் கற்பகமும் கொழுந்தும் காமவல்லிக்கொடியும்போல வாழ்க்கைச் சிறப்புற்றனர்.

அப்படி வாழும்நாளில், அவர்கள் இயற்றிய தவப்ப யனாய் இம்மண்ணுலகம் சிறப்படையும் வண்ணம் அம ரர்கள் வாழும் கற்பலோகத்தை அரசாண்ட தேவர் களுள் ஒருவன் மிகாபதிதேவி வயிற்றிலும் மற்றொரு வன் சசிதேவியின் கருப்பத்திலும் பொருந்தி அவதரித்த னர். மூத்தவனாகிய மிகாபதிதேவியின் புதல்வன் தண்ணிலாவுமிழும் வெண்மதிக்கடவுளின் வண்ண முடையனாய்ப் பலபத்திரனைப்போல விளங்கினன். இளையனாகிய சசியின் குமாரனோ அன்றலர்ந்த காயா மலரினை வென்று திகழுந் திருமேனியுடையான். ஒப்பு யர்வற்ற இந்திரநீலக்கல்லின் ஒளியும் நீருண்ட காள மேகத்தின் கருமையும் நறுமணம்வீசும் நீலோற்பலத் தின் மென்மையு முடையது அவன் மேனியழகு.

"பூவையம் புதுமலர் புரையுமேனியன்
தூவிரி தாமரை தொலைத்த கண்ணினன்
தீவிரி யாம்பலிற் சிவந்த வாயினன்
மாவிரி திருமறு வணிந்த மார்பினன்."

சங்கரேகை சக்கிரரேகை பதுமரேகை மத்ஸ்யரேகை முதலிய ரேகைகள் பல அமைந்த செங்கையன் இன்னன உத்தமவிலக்கணங்களோடு கண்ணபிரானைப் போல விளங்கினான் இளையனாகிய சசிகுமாரன். இவர்

கள் பிறந்த நாளில் நற்சகுனம் பல வுலகில் நிகழ்ந்தன. தேவதுந்துமியும் மங்கல வாத்தியங்களும் முழங்கின: எங்கும் நறுமணம் வீசியது; தேவர்கள் மலர் மழை பொழிந்தனர்; பட்டமரங்களும் தளிர்விட்டுப் பூத்துந் திகழ்ந்தன.

நாளும் கோளும் வலியுற நல்லமுகூர்த்தங்களிற பிறந்த இவ்விரு புதல்வரும் மூத்தவனுக்கு விசயன் என்றும் இளையவனுக்குத் திவிட்டன் என்றும் பெயரிடப் பெற்றனர். இவர்கள் நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாய் வளர்ந்து சுக்கிலபக்ஷத்துச் சந்திரனைப் பதியை வெல்லுந் தோற்றத்தினராய் விளங்கினர்; உரியபருவத்திற் சௌளம் உபநயனம் முதலிய சடங்குகள் செய்யப்பெற்று நல்லாசிரியன்பாற் பலகலையுங் கற்றனர். அரசர்க்குரிய அஸ்திர சஸ்திரப் பயிற்சியிலும் தரும சாஸ்திரங்களிலும் ஒப்பாரும் மிக்காருமின்றித் தாமேசிறந்து விளங்கினர். காளைப்பருவமடைந்து வேனில்வேளினும் மிக்க வனப்புடையராய்த் தங்களைக் கண்ட மங்கையருடைய கண்ணும் மனமும் தம்மாட்டுப் பிணிப்புண்ணச்செய்யும் அச்செல்வக் குமரரைக்கண்ட அரசன் ஆனந்தமாக்கடலுள் அழுந்தித் திளைப்பானாயினான்.

ஒருநாள் பயாபதி அரசன் துயிலுணர்ந்தெழுந்து புண்ணியநீரில் முழுகி ஆடை யாபரணாலங்கிருதனாய்ப் புனைவன புனைந்து சினகரம் புகுந்து கடவுளை வழிபட்டுத் தன் புதல்வர் இருவரும் இருபுறம்வர அட்டமங்கலமும் முன்னடப்ப அரச பரிவாரத்துடன் தனது ஆஸ்தான மண்டபத்தை அடைந்தனன். அம்மண்

டபம், சந்திரகாந்தப் பளிங்குக் கற்களால் பரப்பப் பெற்றுப் பொன் மணிகளாற் பொலிவுபெறப் புனையப் பெற்று மேகமண்டல மளாவி விளங்கும் உயர்வுடைய தாய் இலங்கியது. அந்த மண்டபம் புகுந்த அரசன், தன்னொடுவந்த அமைச்சர் புரோகிதன் முதலியோர்க்கு அவ்வவர்க் கமைந்த ஆதனமருளி ஆண்டு நடுநாயகமாய் இடப்பெற்ற இரத்தின சிம்மாசன மொன்றின் மேலேறி வீற்றிருந்தனன். அரசன் புதல்வர் இருவரும் தந்தையின் இருபுறத்திலும் அருகாசனத்தினரா யமர்ந்தனர். இங்ஙனம் கொலுவீற்றிருக்கும் அரசனாகிய கற்பகவிருக்ஷம் மலர்ந்தகாட்சியைக் கண்ட நாவலரும் பாவலருமாகிய வண்டுகள் இன்னிசை பயின்றுபாடத் தொடங்கின. அப்பொழுது அரசன் தனது வாயில் காப்போனை நோக்கி, "ஏழு நாழிகையளவும் எத்தகையரேனும் ஈண்டு வருவாராகில் அவரை உள்ளேவர விடுக்குதி" என்று ஆஜ்ஞாபித்தனன்.

அவ்வமயத்தில், அளவுகடந்த சோதிடநூலைக் கரை கண்டவனும் முக்காலமும் முற்றுணர வல்லவனுமான அங்கதன் என்னும் பெயரிய நிமித்திகனொருவன் ஆஸ்தான மண்டபத்தின் வாயிலையணுகிக் காவலாளனை நோக்கி, "ஐய! உட்சென்று அரசனைக் காண்டற்கு அமயம் நல்லதோ?" என்று வினாவ, அதற்குக் கடைகாப்போன் அரசன் கட்டளைப்படி அன்னோனை உள்ளே புகவிடுத்தனன். அரசன் நிமித்திகற்குத் தன் வெண்டாமரை யேந்திய வலக்கரத்தாற் குறிப்பிட்டு ஓராசனங்காட்ட அவன் அதில் வீற்றிருந்து சமய முணர்ந்து, தான் கரைகண்ட சோதிடநூலின் பெரு

மையை எடுத்துக்காட்ட எண்ணி மூன்றுகாலமும் முழுது மாராய்ந்து அரசனை நோக்கிப் பின்வருமாறு கூறத் தொடங்கினான்.

"அரசரேறே! நேற்றிரவு நீ யோர் கனவு கண்டுளாய். அச்சொப்பனத்தில், ஆகாயமார்க்கமாய் ஆண்யானை யொன்றிழிந்துவந்து உனது இளைய குமாரனாகிய கடணிறவண்ணனுக்கோர் வெண்டாமரை மாலையைச்சூட்டித் தன்னிடஞ் சென்றதாகத் தோற்றங் கண்டனை. இக்கனவின் பயன் யாதெனிற் கூறுகின்றேன், அமைதியாய்க்கேட்டி: ஒரு வித்தியாதர ராஜன் தன் அருமைத் திருமகளை ஈண்டுக் கொணர்ந்து தங்கள் இளைய குமாரன் திவிட்டராசனுக்கு மணஞ்செய்து கொடுத்துப் போவான் என்பதே. இதற்காக, இன்று முதல் எழுதினம் அகலுமுன் ஒரு விஞ்சையதூதன் திருமுகமொன்று கொண்டுவந்து உனது நந்தனவனமாகிய புட்பமாகாண்டம் என்னுஞ் சோலையில் இருந்து வான். அதனை நீ கண்டு தெளிவாயாக" என்று கூறினன்.

தான் கனவு கண்ட உண்மையை யுணர்ந்து அதன் பயனையும் எடுத்துக் கூறியதைக்கேட்ட அரசன் பெரு வியப்படைந்து அந்தநிமித்திகற்கு வஸ்திராபரண பூஷணங்கள் பலவும் நல்கிச் சிறப்புச்செய்து கொண்டாடினான். சபையிலுள்ளாரும் மன்னனை நோக்கி, "அரசே! தங்கள் இளையகுமாரன் அத்திரத்தனே பாம். அவன் மூவுலகையும் ஒரு குடை நீழலில் அரசாளுபவன் என்பதற் கையமில்லை" என்று போற்றினர். இவ்விதம் நாழிகை யொன்று நடந்தது;

அதனை யுணர்த்த நாழிகை முரசமொன்று அடிக்கப் பட்டது. காலங்கழிவதை யுணர்ந்த காவலன் தன் முகக்குறிப்பால் சபையோர் அனைவருக்கும் செல்ல விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் தான் தனது அமைச்சருடன் மந்திரசாலை யடைந்து நிமித்திகன் கூறிய விஷயத்தைப்பற்றி ஆலோசிக்கலாயினன். மந்திரிகள் அரசனை நோக்கி, "எம்பெருமானே! தமது இளைய குமாரன் திவிட்டன் கடலாற் சூழப்பட்ட இந்நிலவுலக முழுவதும் ஏகசக்கிராதிபனாய் அரசாள்வான் என்று முன் அவன் பிறந்தபொழுதே சோதிடர் சொல்ல நாங்கள் கேள்விப்பட்டிருக்கிறோம். அதுவேயுமன்றி அவ்வையன் கரத்தில் சங்கரேகையும் சக்கிரரேகையும் பொருந்தியுள்ளன. ஆதலால் அவன் சங்கபாணிய னாகிய திருமாலி னவதாரமாவான். இனிச் சக்கிரத்தை யும் ஏந்துவானென்பதற்கும் சங்கையில்லை. அங்கத நிமித்திகன் ஈண்டு எடுத்துக்கூறியவாறே விஞ்சையர் மன்னன் தன் புதல்வியைக் கொண்டுவந்து விவாகஞ் செய்து கொடுப்பானாயின் அதுபோன்ற சம்பவம் உலகில் வேறொன்றுமின்று. மூவுலகமும் திவிட்டராசன் தன்னடிச் சாரும் என்பது திண்ணமே. இப்பொழுது நாம் அவன் கூறிய புட்பமாகாண்டப் பொழிலிடத்தில் உள்ள பளிக்கு மண்டபத்தைப் புனைந்து குறித்த ஏழு நாளளவும் விஞ்சையதூதன் வரவினை எதிர்பார்க்க அப் பொழிலிடைத் துருமகாந்தனைக் காவலாக வைக்க வேண்டும்" என்று உரைத்தனர். மன்னனும் மன மகிழ்ந்து அங்ஙனமே துருமகாந்தனைப் புட்பமாகாண் டத்திற் காவல்செய்ய ஆஜ்ஞைதந்து தன் மனைவியர்

வைகும் அந்தப்புரத்தை அடைந்தனன். துருமகாந்தனும் மன்னன் ஆணையைச் சிரமேற்றாங்கிப் புட்பமாகாண்டப் பொழிலில் இரவும் பகலும் இடையறாது விழித்த வண்ணம் காவல்புரிந்து வந்தனன்.

## அத்தியாயம் 2

ஈதிப்படியிருக்க, மேரு மலைச்சாரலில் விஞ்சையருலகு எனப்படும் மலையொன்றுண்டு; அது எக்காலத்தும் சந்திரப்பிரகாசத்தை வீசுவது; இப்பரத கண்டத்திலும் விரிந்த அகலிடத்தை யுடையது. அம்மலை கடலைத்தீண்டி மேலுயர்ந்துபோய் வானையளாவிப் பரிதிதன் கிரணம் பரவுறும் திசையெலாம் விளங்கும் பண்பினையுடையது. அதன் சிகரங்கள் நவரத்தின கசிதமாய் நாற்புறமும் ஒளிபரப்பும். சந்தனம் சண்பகம் கற்பகம் முதலிய பலநறுமலர்ச் சோலைகள் அம்மலையிடமெங்கும் சிறந்து திகழும். அம்மலைக் குகைகடோறும் சோலையிடமெங்கும் வித்தியாதரர் தம் மாதரிருடன் களித்து விளையாடிப் பலவித இன்பமும் அநுபவிப்பார்கள். சிகரங்களினின்று இழுமெனும் ஒலியொடும் இழிந்தோடிவரும் அருவிகள் இயல்பாகவேயோ அன்றி விஞ்சையர் மகளிர் துளைந்தாடுவதனாலேயோ எக்காலத்தும் சாதிமல்லிகையின் நறுமணங்கமழா நிற்கும். அங்குள்ள மலர்களெல்லாம் பொற்றாமரை நிகர்ப்பனவாம்; நந்தனவனங்கள் யாவும் தேவருலகத்துக் கற்பகச் சோலைகளையொக்கும். ஒருபுறம் செவ்வாழை மரங்கள் மாதர்களின் அதரம்போலச் செவ்

வொளிபரப்பும் பழங்களை யீன்று அமுதத்தினுமினிய சாற்றினை அருவிபோல் ஒழுக்கும்; கமுக வரிசைகள் மற்றொருபுறம் மரகதமணிகளையும் பவளங்களையும் முடிப்பாகக்கட்டித் தூக்கிய காவணப்பந்தரெனத் திகழ் தாநிற்கும்; பாரிசாத விருக்ஷங்கள் ஒருபால் பரிமளம் பரப்பும்; தேவதாரம், தமாலம், மா, அசோகம் முதலிய மரங்கள் மற்றுமோர்பால் மலர்களும் தளிர்களும் பொதுளிக் கண்டோர் கண்ணையும் மனத்தையும் கவரும் காட்சியினவாயிலங்கும். இச்சோலைகடோறும், 'குலவிய கருப்பநிறை மாதரென மந்தநடை கொண்டு வரு'ந் தென்றலங்காற்று மகரந்தப் பொடிகளை வாரி நாற்றிசையு மிறைக்கும். இத்தகைய பேரழகுடைய பருப்பதத்தின் தென்றிசைப்பாங்கர், இரதநூபுரச்சக்கரவாளம் என்னும் பெயரினையுடைய பொன்னகர மொன்றுண்டு. ஈடுமெடுப்புமின்றி எல்லாச் சிறப்புக்களும் பொருந்திய அந்நகரத்திற்கு இறைவன் சுவலனசடி என்பான். அவன் புகழை மூவுலகத்தாருங் கொண்டாடுவார்கள். கொடிய பகைவர்மாட்டு அருளாமையே அவன்பாற் குற்றமென்பார்கள்; அவன் ஆளுகையில் நடுங்குவன பலநிறத் துவசங்களே, அந்நகரத்து ஆடவர்மேல் வளைக்கப்படும் விற்கள் அரமகளிரின்புருவ விற்களே; கொடியவாய்ச் சிறுமைப் பட்டவை மாதர் தம் நுண்ணிடைகளே யன்றி வேறில்லை. சடியரசன் மன்னுயிரைத் தன்னுயிர்போலப் பாதுகாத்து அரசு புரிந்து வரும்நாளிலே அவனது பட்டமகிஷியாகிய வாயுவேகை யென்பாள் அவனுக்கு 'ஆவியாய் அணங்காய் அமிழ்தாய் அவன் மேவுநீர்மையளாய் விருந்

தாயினாள்.' அரசனும் அரசியும் செய்த நற்றவப்பய னாய் அரசி சின்னாளிற் கருப்பமுற்று அருக்ககீர்த்தி என்று பெயர் போந்த ஓர் அழகிய புதல்வனை யீன் றெடுத்தாள்; அதன் பின்னர்ச் சிலகாலம் கழிந்துக் கற்பகம் படரும் காமவல்லிக் கொடிபோன்ற பேரழகு திகழும் பெண்ணணங்கு ஒன்றைப்பெற்று அதற்குச் சுயம்பிரபை என்று நாமஞ்சூட்டி மிக்க செல்வத்தோ டும் வளர்த்து வந்தனள். இந்நங்கையர் திலகம் தோன் றிய பின்னர்ச் சடியரசனுக்குப் பலவகைப்பட்ட செல் வங்களும் பெருகி மறுநிலமன்னர் பலரும் வணங்கும் ஏற்றமும் உண்டாயிற்று. கங்கைநீர் போலத் துல் லியமான வெண்மை நிறமுள்ள கிரணங்களைப் பரப்பும் திங்களிளம்பிறையினாலன்றோ செவ்வானமும் உல கத்தாரால் தொழப்படுவது; அதுபோல, இம்மாது சிரோமணி பிறந்த நற்பயனாலே உலகமங்கையர் யாவ ருக்கும் உயர்வு உண்டாயிற்று. இப்பெண்மணி பேதைப்பருவஞ் சென்று பெதும்பைப் பருவங்கடந்து மங்கைப் பருவமடைந்து யாவரும் மயங்கும் தெய்வ வுருவுடன் திகழ்ந்து நின்றனள்.

அப்பொழுது வசந்தகாலம் வந்தது. குயில்கள் தமது அழகிய பஞ்சமஸ்வரம்போன்ற தொனியால் சோலை களெங்கும் இன்னிசை பரப்பின. ஒருநாள் அரசன் தன் மனைவியோடும் மடமகளோடும் மற்றும் பரி வாரங்களோடும் தத்தமக்குரிய வாகனங்களின் மீதும் விமானங்கள் மேலும் ஏறிக்கொண்டு தன் நகர்ப் புறத்துள்ள மனோவனம் என்னும் உத்தியான வனத் தையடைந்து ஆங்குள்ள விநோதங்களைக்கண்டு களிப்

பானுபினுன். பிறகு தன்னுடன் வந்த மடவாருடன் பொழில்விளையாடல் செய்து, ஆங்குள்ள அசோகந்தளிர்களை இவை உங்கள் கைகள்போலுமென்றும், குருக்கத்திக் கொடிகளை இவை உமது இடை நிகருமென்றும், மாந்துணர்களை இவை நும் மேனி மானுமெனவும், இலவமலரை இவை உங்கள் வாய்ப்பகையா மென்றும், குயிலிசை உமது வார்த்தைபுறமு மென்றும், கோங்கரும்பு நுங்கள் தனபாரம்போலு மென்றும், அவர்கள் மனங்களிப்பப் பேசி அன்னோர்க்கு வனத்தின் வனப்புக்களைப் பெரிதும் பாராட்டி எடுத்துக் காட்டினன். எல்லா மலர் மரங்களைப்போலத் தானும் மலர்ந்தும் நறுமணம் பரப்பமாட்டா இயல்பாற் குணமிலார் செல்வம்போல விளங்கும் கோங்குமரங்கள் குடைகவிப்ப, மகரந்த நிறைந்த மலர்களைச் சொரிந்து தேமாமரங்கள் எதிர்கொள்ளச் சிறு குயில்கள் போற்றிசைப்ப, மங்கல கீதம்பாடும் மகளிரைப்போல நவமல்லிகைக் கொடிகள் தமது தளிர்க்கையாற் றொழுது வணங்க, அரசன் தன் மடவாருடன் பெருமகிழ்வுடன் சிலபோழ்து வீற்றிருந்தனன். அவ்வளவில், சுயம்பிரபையும் தன் தோழிமாருடன் புனல் விளையாடியும் பூக்கொய்தும் கண்ணி தொடுத்தும் மனோல்லாசமாய் விளையாடிமுடித்துத் தன் தாதைபால் வந்து சேர்ந்தனள். அரசன், இவர்கள் தன்னைப் புடைசூழ்ந்துவர அச்சோலையின் நடுவில் விளங்கும் அருகக் கடவுளின் ஆலயத்தை அடைந்து கடவுளை வணங்கிக் கோயிலை மும்முறை வலம்வந்து சினகரவாயிலைக் குறுகி நின்றனன். அப்பொழுது

கோயிலின் கதவு திடீரென்று திறப்புண்டது; உடனே கடவுள் பேரொளிப் பிழம்பினுருவமாய் அன்னோர்க்குக் காட்சி தந்தருளினார். அரசன் தன் மெய்ம்மயிர் பொடிப்பக் கரமிரண்டும் சிரமீதேறிக்குவிய நாத்தழும்பேறக் கண்கணீர் சொரியக் கடவுளின் பெருங்கருணையைத் துதித்து மகிழ்ந்தனன். இங்ஙனம் துதிசெய்து வணங்கிக் கடவுளின் பதமீதிட்ட திருமாலியத்தைத் தன் சிரமேற் சூடிச் சினகரவாயிலை யடைந்தவளவில், திகம்பரராகிய இரண்டு சாரணர்கள் ஆகாயத்தினின்றும் இறங்கி அருகனாலயத்தை வலம்வந்து எப்பொருட்கு மிறைவனை வாயார வாழ்த்திய பின்னர் அருகிலுள்ள அசோக மரத்தடியிற் பொருந்தியதோர் சிலாதலமிசை வீற்றிருந்தனர். இதனைக் கண்ணுற்ற அரசன் மிக்க பயபக்தியோடு சென்று அவர்கள் பாதத்தில் நமஸ்கரித்து நின்றனன். அரசனைக்கண்ட அச்சாரண முனிவர் மனமகிழ்ந்து அரசனையும் மற்றையோரையும் இருக்கவென அருளிச் செய்தனர். மீட்டும் அரசன் அம்முனிவரரை வணங்கி, 'ஐயன்மீர்! அடியேன் அறிய விரும்புவதொன்று உண்டு' என்றனன். சாரணர், "அரசே, நீ வினையின் திறத்தையும் அதனை நீக்குமுபாயத்தையும் அறிய விரும்புகின்றனை; நல்வினை தீவினை யிரண்டும் பிறப்பிற் கேதுவாய்; நல்வினை பொன்விலங்கு போலவும், தீவினை இருப்புவிலங்கு போலவும் இரண்டும் ஆன்மாவைப் பிணிக்கும் தகைமையவே; அவ்வினையை யொழிக்கும் வாயில் ஒப்புயர்வற்ற கடவுளின் திருவடித் தியானமேயன்றி வேறின்று" என்று பலவாய்ப் போதித்தனர். இந்தப்போத

னையைக் கேட்ட அரசற்கு நல்லுணர்வு பிறந்தது; அவன் மனைவியும் அறிவுடையளாயினுள். அச்சாரண முனிவர்களின் தருமோபதேசத்தை உற்றுக் கேட்டுக் கொண்டிருந்த சுயம்பிரபையும் பெரிது மனமுருகி அம்முனிவர் முன்னிலையிலேயே சக்கிரவாள மென்னும் அரிய நோன்பொன்றினை நோற்கச் சங்கற்பித்தனள். சகநந்தனன் அபிநந்தனன் என்னும் பெயருடைய அச்சாரண ரிருவரும் அரசனையும் மற்றுளோரையும் வாழ்த்திவிட்டு விசும்பாறாகச் சென்றார்கள். அரசனும் இத்தினம் நற்றினமேயெனக் கடவுளைச் சிந்தித்தவனாய்த் தன் பரிவாரம் புடைசூழ அரண்மனையடைந்தனன்.

அதன் பிறகு சுயம்பிரபை தான் மேற்கொண்ட சக்கிரவாள நோன்பினை அனுட்டித்து முடித்து மூவுலகினும் இணையற்ற பேரழகும் பேரறிவும் பெருங்கீர்த்தியும் பெற்றுத் தான் நோன்பியற்றிய இடத்தில் அருகக் கடவுட்கு ஓர் ஆலயம் அமைத்துக் கடவுளை வழிபட்டு அன்புமயமாய் ஆனந்தக் கண்ணீர் சொரிய அவன் பெருமையைப் புகழ்ந்து துதித்து நின்றனள். பிறகு அவள் கடவுளின் திருமாலியப் பிரசாதம் எடுத்துக் கொண்டு சென்று தாதையிடங் கொடுத்து வணங்கினுள். பன்னுள் உணவின்றிப் பரிந்துநோற்ற தன் புதல்வியை அரசன் பாராட்டி மகிழ்ந்து, "அருமை மகளே! உன்னுல் யான் பெரிதும் நன்மையடைந்தேன். இனி நீ உன் தாய்பாற் சென்று பாரணை செய்வாயாக" என்று உபசரித்து அனுப்பினுன். பின்பு, அரசன் தனது மகளுடைய நற்குண நற்செய்கைகளையும் நோன்

பயற்றிய பெருமையையும் மங்கைப் பருவமடைந்த நிலைமையையும் கருத்திலோர்ந்து,

"மண்ணருங் கலமெலாம் வலிதின் வவ்வினும்
விண்ணருங் கலமெலாம் விதியி னெய்தினும்
பெண்ணருங் கலமிது பெறுதன் மாநுடர்க்
கெண்ணருந் தகைத்தென விதயத் தெண்ணினான்."

இப்பெண்மணிக்கு ஏற்ற கணவனை நாடி மணஞ்செய்விக்கவேண்டுமேயென்ற கவலையை மேற்கொண்டனன். வித்தியாதர புரங்களிலுள்ள உத்தம இராஜகுமாரர்களுள் எவனோ இவ்வணங்கினை மணக்கத்தக்கோனென்று தீர்க்காலோசனையி லாழ்ந்து கிடந்தனன். மங்கையாற் காதலிக்கப்பெறாத ஒருவனை அவளுக்கு மணமகனாகத் தந்தை தாயர்கள் சேர்த்துவிடின், அம்மங்கை தன்னியல்பான நாணத்தால் தன்விருப்பைப் பற்றித் தானே நொந்துகொண்டு நெஞ்சிற்புழுங்கி வருந்துவாளேயன்றி வெளியிட்டுக் கூறாள். மாற்றுயர்ந்த ஆணிப் பொன்னின் நடுவே அழகாய்ப் பதித்தற்குரிய அரிய மாணிக்கமொன்றை வெறுக்கத்தக்க ஈயத்தின் மத்தியிற் பதித்திழைத்தால், அது தான் மாட்டேனென்று மறுக்காவிடினும் தனது அழகு குலைந்து சீர்கெட்டுக்கிடக்கும். எனவே, மகட்கேற்ற மணமகனை யாராய்ந்து தேறல் பெற்றோருடைய பெருங்கடனன்றோ? தலைவன் தலைவியாகிய இருவர்க்குள்ளும் பேரன்பு இல்லாவிடில் அன்னோர்தம் தாம்பத்தியம் என்னாம்? அவர்தம் இல்லறம் இல்லறமாக முடியுமோ. இத்தகைய அரியசெயலை அறிவுடையார் பலருடனும் ஆராய்ந்த பின்னரே செய்தல் தக்கது.

" அந்தண ரொழுக்கமு மரசர் வாழ்க்கையும்
மந்திர மில்லையேன் மலரு மாண்பில "

ஆகலின், இவ்விடயத்தைப்பற்றி நமது மந்திரிகளோடு ஆலோசிக்கவேண்டும்" என்று தீர்மானித்துத் தன் ஏவலாளிகளை விளித்து மந்திரிகளைக் கடிதில் மந்திர சாலை மண்டபத்திற்கு அழைத்துவாக் கட்டளையிட்டனன். அவர்கள் அரசனாணையைச் சிரமேற்றாங்கிச் சென்று அமைச்சர்களுக்குத் தெரிவித்தவளவில் மந்திரிகள் பலரும் விரைந்து மந்திரசாலைமண்டபம் வந்து சேர்ந்தனர்.

## அத்தியாயம் 3

அக்காலத்திலும் அரசர்கள் இரகசியாலோசனை செய்தற்பொருட்டு மந்திரமண்டபம் அமைத்துக்கொள்வது வழக்கம். உண்ணிகழும் விஷயம் வெளியேறாமலிருக்கும்படிப் பலவிதக் காப்பினோடும் அதனை அமைப்பார்கள்.

" உள்ளுணின் றுவிபுறப் படாத தொண்சிறைப்
புள்ளுமல் லாதவும் புகாத நீரதுபரு
வெள்ளிவெண் விளிம்பினால் விளங்கு வேதிகை
வள்ளறன் மந்திர சாலை வண்ணமே."

அரசனாணையை யொற்றர் வாயிலாய் அறிந்த அமைச்சர்கள் விரைவில் மந்திரசாலை மண்டபத்தை அடைந்த அளவில், மன்னன் அவர்களை நோக்கிப் பின்வருமாறு பேசினான்.

" மதிவல்லபம் மிக்க மந்திரிகளே! நிலவுலகத்தைப்

பாதுகாக்கும் நிருபர் ஏகசக்கிரேசுவரராய் எவராலும் வணக்கலாகாப் புண்ணியச் சொரூபமுடையராயினும், அறிவுடைய மேலோர் கூறிய நூல்களின் நுண்ணிய பொருளை யுணராவிடின் பெருமையடையார்; அவர் செய்யும் சூழ்ச்சியும் பயன்படாதொழியும். மன்னவர்க்குப் பழிபாவம் வரவொட்டாமற் றடுத்து அவரை நன்னெறிப்படுத்துபவர் மதியிற்சிறந்த மந்திரிகளே. அத்தகைய அமைச்சர்கள் அரசருக்கு "மனமும் கண்ணும் வாழ்க்கையும் வலியும் சால்பும் ஆற்றலில் அரசும் கோலும்" ஆவார். அரசாட்சி யென்னும் பெரிய சகடம் அரசன் அமைச்சனென்னுமிருவராலும் நடைபெறுமேயன்றி ஒருவராலியங்காது. அரசன் அமைச்சர் வழிப்பட்டு ஒழுகற்பாலன், அமைச்சர் அவனை நல்வழிப்படுத்தி உறுதிபடையச் செய்யும் கடப்பாட்டினை மேற்கொள்வர். ஒரு தொழிலைச் செய்யுங்கால் அரசன் அமைச்சனை உசாவிச்செய்தலே நன்மையைத்தரும்.

"செறிந்தவர் தெளிந்த நூலார் சிறந்தவை
தெரிந்து சொன்ன
லறிந்தவை யமர்ந்து செய்யு மமைதியா
னரச னாவான்
செறிந்தவர் தெளிந்த நூலார் சிறந்தவை
தெரிந்து கூறி
யறிந்தவை யியற்று கிற்கு மமைதியா
ரமைச்ச ராவார்."

ஆதலின் அமைச்சரின்றி அரசர்க்கு எக்காரியமும் செய்ய இயலாது. அரசன் வையகத்தைத் தன்னடிப்

படுத்தி ஆளுதற்கு இரண்டு வழிகள் உண்டு; அவை தோள்வலியும் சூழ்ச்சியுமுமாம். அரசனுக்குத் தோள்வலி அழகினைத் தருவதொன்றுபினும் சூழ்ச்சியே அதனினும் சிறந்தது. தோள்வலி யில்லாத மங்கையரும் சூழ்ச்சியுட் சிறந்தால் உலகத்தை யாள்வாரென்பதற்கையமில்லை. சூழ்ச்சியே தோள்வலியையும் தரும். மன்னவன் காமபரவசனுய்த் தனது சூழ்ச்சியிற்றவறி யொழுகுவானுயின், பாகனுக்குரிய நூலினையுணராப்பேதை செலுத்திய மதயானைபோற் கேடு பல விளைப்பான். அரசன் அமைச்சரோடு செய்யும் சூழ்ச்சியிற் சிறிது தவறுவானுனல், மந்திரத்தாற் கட்டுண்டதலை தவறிய மாநாகம்போல் அதுவே தீங்கினைத் தரும். பலபட நாம் எடுத்துக் கூறுவதிற் பயன்யாது? எல்லாம் வல்ல நீவிர் எம்மை இறைவனுக்கி இரவும் பகலும் காத்து வருதலானன்றே யாம் சிறப்படைந்தோம். இது நிற்க, இப்பொழுது நாம் இங்குக் கூடியது மிகவும் அரிய செயலொன்றினை யாராய்தற்கே. இரத்தின பர்வதத்தின்மே விட்ட தீபத்தைப்போல் எமது குடியினை விளக்கவந்த பெண்மணி சுயம்பிரபையின் அழகினுக்கும் நற்குணத்திற்கு மொத்த நாயகனை நாடி ஆராய்தலே நாம் மேற்கொண்ட செயலாம். பற்பல தேய அரசிளங் குமரருள் எவனே இவளை அடையத் தக்கவன் என்பதை நீங்கள் ஆராய்ந்து கூறுவீராக". என்றனன். இதைக்கேட்ட மந்திரிகள் மன்னனை வணங்கி, "அரசே! நின்புகழ் இவ்வுலகம் காத்து நீடூழி நின்று நிலாவுக" என்று வாழ்த்தித் தத்தமக்குத் தோன்றியவாறு ஆராய்ந்துகூறத் தொடங்கினுர்கள்.

அவருள் சுச்சுதன் என்னும் பெயரிய மந்திரி சொல்லத் தொடங்கினன்.

"அரசே! சூரியனொளியால் சூரியகாந்தம் அனற்பொறியைக் கக்கும்; சந்திரனொளியால் சந்திரகாந்தம் தண்ணீரைக்காலும்; அங்ஙனமே நினது புகழொளியால் யாமும் சிறப்படைகின்றோம். அறந்தாறு செல்லும் அரசனின்றி அமைச்சரால் யாதுபயன்? யானை கவுளிறால் உராய்ந்த சந்தனமரம் மிகுதியும் நறுமணங் கமழும்; அதுபோல அரசன் தன் கீழ்வாழும் அமைச்சர் முதலியோர் செய்பிழையைப் பொறுத்தலானே பெரும்புக ழடைகின்றான். நெடுங்கடல் தன்னிலை தவறி வெதும்பிக் கொதிக்குமாயின் அதனையாற்று நீர் உலகிலுண்டோ? மன்னவன் கொடுங்கோலனாயின் உலகம் வெதும்பும். கொடுங்கோன் மன்னன் வாழு நாட்டினும் கடும்புலி பியங்கும் காடு நன்றன்றோ? செங்கோன் மன்னன் இம்மை மறுமைப் பயன்களை உலகத்தார்க் கருளுதலின் அவனினும் பெருமையுடைய தெய்வம் வேறில்லை; அவனடிச் சார்ந்தொழுகுதலே அனைவோர்க்கும் சிறந்ததொன்று.

"கண்ணெனப் படுவ மூன்று காவலன் கல்வி காமர்
விண்ணினைச் சுழல வோடும் வெய்யவ னொன்று மென்பா
ரெண்ணினுட் டலைக்கண் வைத்த கண்ணவை யின்றி யில்லை
மண்ணினுக் கிருளை நீக்கும் வகைபிறி தில்லை மன்னோ."

ஆயிரம் நக்ஷத்திரங்கள் ஒருங்குகூடினும் தண்மதிக்

டவுளை நிகராவாறுபோல ஏனையோர் பலரும் மன்னனை யொவ்வார். கொற்ற வேலையுடைய மன்னவர்க் கோதிய நற்குணங்கள் யாவும் திரண்டு ஒருருவுகொண்டாலனைய மூர்த்தியே! உலகநீதிகட் கெல்லாம் வரம்பென விளங்கிக் கலைக்கடலி னெல்லைகண்ட நின்முன் யான் சிலவாய புன்மொழி பகர்தல் நகைத்தற் கிடனாயினும் என் மனக்கருத்தினைக் கூறவேண்டுவது கடமையாதலிற் புகல்கின்றேன். பிழையுளதேற் பொறுத்தருள்க. தமது திருக்குலம் விளங்கத் தோன்றிய திருமகட்கேற்ற கணவனைக் கூறுகின்றேன்.

இந்த வித்தியாதர வுலகில் உத்தரசேடியிலே அமராவதியினும் சிறந்து விளங்கும் இரத்தினபல்லவம் எனப் பெயரிய நகரமொன் றுண்டு. அதனுடைய சிறப்பினைப் புலவர்கள் பலரும் புகழ்ந்து போற்றியுள்ளார்கள். அந்நகரத்தையாண்ட மயூரகண்டன் தேவிமாருள் நீலாங்கனை யென்னும் பட்டமகிஷியீன்ற புதல்வன் அச்சுவக்கிரீவன் என்பான். அச்சுவக்கிரீவன் அரசாளத் தொடங்கியபின், அவன் தனது புயவலியாலும் சூழ்ச்சி வன்மையாலும் எல்லாவுலகையும் வென்று தன்னடிப் படுத்தி ஏகசக்கிராதிபதியாய் விளங்குகின்றனன். அவனுடைய தம்பிமார்களாகிய நீலரதன், நீலகண்டன், வயிரமாகண்டன், சுகண்டன் என்போர் இயமனும் அஞ்சும் திறலினையுடையார்; போராற்றல் படைத்தோர். அளவற்ற சேனாபலமுடைய அம்மன்னனுக்கு மகாசமர்த்தனும் அதிபுத்திமானுமான அரிமஞ்சு எனப் பெயர்கொண்ட மந்திரியொருவன் அமைந்துள்ளான். மேலும் அவன்பால் முக்காலமு முணரவல்ல நிமித்தி

கன் சதவிந்து என்னும் பெயரிய பெரியானும் பொருந்தியுள்ளான். எல்லா வரசர்களும் அன்னோனை வணங்கித் திறையளிக்கின்றனர். அரசே, நம் குலக்கொம்பாகிய நங்கை பிறந்த நாள் தொடங்கியே அச்சுவக்கிரிவன் நம்பால் திறைகொள்ளா தொழிந்தனன். அவனுக்கு மடந்தையை அளித்தால் அவனும் நமது வழிப்படுவான். வித்தியாதர வுலகமும் நம்மை அஞ்சும். அவனுக்கு மகட்கொடை மறுத்தாற் கோபம் மூளும்; அவன் விரோதத்தை நாம் பெறுதல் உறுதியற்ற செயலாகும். எல்லா விஷயங்களையும் பொருந்தி யாலோசிக்குமிடத்து அவனுக்கு மங்கையை மணவினை முடித்தலே தக்கதென்று அடியேற்குப் புலப்படுகின்றது" என்று சுச்சுதன் கூறப் பவச்சுதன் என்னும் நாமத்தையுடைய மற்றொரு மந்திரி பகர்வானாயினன்.

அரசரேறே! பலநூல்களை யாய்ந்து நுட்பமான பொருளைக்கண்டு கூறவல்லானும் அறிவாளனுமாகிய சுச்சுதன் எடுத்துக்கூறிய விடயங்கள் யாவும் உண்மையே. அச்சுவக்கிரீவன் எல்லாரினும் மேம்பாடு உடையான் என்பதற் கையமின்று. ஆயினும் அவன்பால் ஒரு குற்றமுண்டு. அதனைக் குற்றமன்றென யார் மறுப்பினும் யான் உடம்படேன். அக்குற்றம் அச்சுவகண்டனுக்கு வயது ஊழிக்காலம் சென்றுவிட்டதேயாம். ஒத்தவயதுடைய தலைவனையன்றோ நாம் தேர்தல் நலம்? மேலும் அவ்வச்சுவனுக்குக் கனகசிந்திரையென்பாள் பட்டத்துத் தேவியா யமைந்திருத்தலோடு, அவள் மக்கள் ஐஞ்ஞூற்றுவருள்ளும் முதல்வனாகிய இரத்தினகண்டன் இளவரசனாய் அரசர் எவரும் அஞ்சு

வாழ்கின்றனன். அச்சுவகண்டனுக்குப் பிறகு இரத்தினகண்டனே அரசாட்சிக்குரியனாவான். ஆதலின் சுயம்பிரபைக்கு மணவாளன் அச்சுவகண்டன் அல்லன். மேலும் அரசே! தங்கள் புதல்வியின் ஜனனகாலத்தில் அவள் ஜாதகத்தைப் பல சோதிடர்களால் ஆராய்ந்த பொழுது, இவள் ஓர் இராசகுமாரனுக்குப் பட்டத்துத் தேவியாய் அமைவாளென்றும் இவள் புதல்வன் மூவுலகாட்சியும் பெற்றுச் செங்கோல் நடாத்துவானென்றும் புலப்படவில்லையா? ஆதலின் அச்சுவகண்டன் இவளுக்கு உரியவனாகான் என்பதே என் கருத்தென்றனன். சடிமகாராஜன் இதனைக்கேட்டு, பவச்சுதனை நோக்கி, "நல்லது, அங்ஙனமாயின் நங்கைக்குரிய நாயகன் வேறியாவனோ?" என்று வினவ, அவன் மேலும் சொல்வானாயினான்.

"இம்மலைக்கு மேல்பால் உள்ள கின்னரகீத நகரத்தை யாளும் அரசன்மகன் பவனஞ்சன் என்றோர் செம்மலுளன்; அசுவ பிருதயம் என்னும் புரவிவித்தை வல்லான். அமுதபுர மன்னன் மகன் வேகமாதரன் என்பானொருவனுளன்; அவனை இளங்களியுழுவையாக இருநிலம்புகழும். மேகமாபுரத்தரசர்கோன் புதல்வன் பதுமரதனை அரசர் யாவரும் ஊழித்தீ யென்றஞ்சுவார். இரத்தினபுரத்தரசகுமாரன் சுவர்ணரதன் இடியேறு போன்ற பராக்கிரமசாலி. கீதமாபுரத்தரசன்மகன் அரிகண்டன் செங்கண்மாலையும் வெற்றிகொள்ளும் ஆற்றல் படைத்தோன். திரிபுர அரசன் புதல்வன் அளிதாங்கன் கல்விக்கடலைக் கரைகண்ட அரசரேறு. சித்திரகூட ராஜகுமாரன் ஏமாங்கதன்

இந்திரன் புதல்வன் சயந்தனை நிகர்த்தோன்; அவனுக்கு மாறான மன்னர் உலகில் எவருமிலர். ஸ்ரீநிலையபுரத்தரசன் சேய் சித்திரரதன் தரணிக்கோர் திலகமாவான். அச்சுவபுரவேந்தன் சிறுவன் கனகசித்திரன் கடலாடையுடுத்த காசினிக்கு தனிநாயகமாய் விளங்குபவன். கனகபல்லவத்தையாளுநர் கொற்றவன் மைந்தன் செற்றவர்ச் செகுக்கும் செருவல்லான் அரிகேதுவென்பான் பிறந்த பின்னரே மண்மகள் மகிழ்வடைந்ததாக மாநிலம் புகழும். சுவர்ணசித்திரமான மதில்மாடகூடகோபுரங்கள் விளங்கும் இந்திரசஞ்சயத்திறைவன் மகன் அருஞ்சயனை வித்தியாதரவுலகம் சூளாமணியெனக் கொண்டாடும். இப்பொழுது யான் எடுத்துக் கூறிய அரசிளங்குமாரருள்ளே நமது நங்கையர் திலகத்துக்கு யணிகற்குரிய நாயகனை நாடி மணம்புரிவித்த நலம்" என்று பவச்சுதன் நவின்றான். பின்னர் யாவரும் கூப்பிய கையராய் அரசனை வணங்கி, இதுவே நன்றென்று ஆமோதித்தனர். அப்பொழுது சுதசாகரன் எனப் பெயரிய மதிவலோனெழுந்து அரசனை நோக்கிப் புகல்வானாயினான்.

"மன்னர்மன்ன! பவச்சுதன் அச்சுவகண்டனைப் பற்றிக் கூறிய குற்றம் உண்மையே; ஆயினும் அவனுக்குப் பகையாக நமது நங்கையர் சிரோமணியின் வதுவைமுடிக்க வல்லான் ஒருவனுமிலன். மேலும் இவற்கு நாம் மணமுடித்தால் அச்சுவகண்டன் பகை நமக்குண்டாகும்; அது சிறிதும் கூடாது. அவனுக்கு மாறாக விவாகம் செய்யில், உலகை ஒருகுடை நீழலிற் புரக்கும் சுரேந்திரகாந்த மன்னன், சினம்மிக்க மதகளிற்

றினும் வலியன், மேகவாகன னென்றொருவனுளன். அவன் பட்டத்துத் தேவி மேகமாலினியின் தெய்வவழி பாட்டின் பயனாய் அவள் வயிற்றில் இயமனும் வணங் கும் போராற்றல் படைத்த விச்சுவன் பிறந்துள்ளான். அவன் முற்பிறப்பில் தேவருலகை யாண்டு, இப்பூவுல கில் உள்ளோர்க்கு உய்யும் வழியை உணர்த்தத் தோன்றியவன். அவன் பிறந்தபின் உலகம் துன்பம் நீங்கி வாழ்கின்றது. அவனுக்குப் பகைவர் ஒருவரு மிலர். மெல்லிய தோளையுடைய சுயம்பிரபை அவன் மார்பகஞ் சேர்வாளாயின், இருவரும் மாலைப்போழ் தில் இலங்கும் ஆம்பலும் மதியமும்போல மகிழ்சிற ந்து விளங்குவார்கள். அவ்விச்சுவனுடைய தங்கை ஜோதிமாலை, சகல சற்குணங்களுக்கு மிருப்பிடம்; கற்பகக் கொம்பினை நிகர்த்த மெல்லியல்; இயற்கை மணம் வீசும் கூந்தலாள்; அம்பினைவென்று செவ்வரி பொருந்திக் கயன்மீனை யொத்த கருநெடுங்கண்ணாள் அப்பெண்மணியினை நமது அரசிளஞ்சிங்கம் அருக்க கீர்த்திக்கும், சுயம்பிரபையினை விச்சுவனுக்கும் மண முடித்தல் எவ்வாற்றானும் நன்று" என்று சுதசாகரன் சொல்லி முடித்தான். இவற்றையெல்லாம் அமை வுடன் கேட்டிருந்த சுமந்திரி யென்பான் எழுந்து அர சனை நோக்கிக் கூறத் தொடங்கினான்.

"அரசனே! அச்சுவக்கிரீவன் பலவூழிகண்ட மூப் புடையோனாயினன்; மேலும் அவனுக்குப் பட்டத்துத் தேவியும் வேறுள்ளாள்; அவன் மகன் இளவரசனாக அமைந்துள்ளான்; ஆதலின் நங்கை சுயம்பிரபைக்கு மணமாலைசூட்ட அவன் அருகன் ஆகான். மற்றைய

அரசர்களோ அச்சுவகண்டனுக்கு அடங்கி யொழுகு பவர்கள், ஆதலின் அவன் மனக்கருத்திற்கு மாறாய் மணம் முடிக்கும் ஆற்றலிலராவார். பெண்கள் திலக மாகிய சுயம்பிரபை அரசிளங்குமரனொருவற்கு அணி மணமாலிகை சூட்டாதிருப்பதும் அழகிதன்று. ஈண்டு எடுத்துக் கூறப்பட்ட சுரேந்திரகாந்தநகர அரசகுமாரன் விசுவன் அரசர்யாவரினும் மேம்பட்டவனே; அவன் காமற்கடந்த கடவுட்டன்மையன்; மாதர்கள் திரு முகத்திலங்கும் மையமர் நெடுங்கண் வாட்படை அவ னைச்சிறிதும் வருத்தாது; மன்மதபாணம் அவ னுக்கு ஊறியற்றும் வலிகொண்டிலது; எழிலுடை மடந்தையர் இசையாடல் அவிநயங்களிற் சிறிதும் ஈடுபடான். அமரருலக வின்பத்தையும் வெறுத்து அநவரதமும் அமலனை நினைந்து அருந்தவம் புரிந்து வருகின்றான். அவன் பிதா தனது மகனுக்கு நிகழும் பாலவாய சம்பவங்களை யறியும்பொருட்டுச் சித்திரகூட த்திலுள்ள சினகரமடைந்து அருகனுக்கு அணிவிழா வயர்ந்து பின், ஆண்டுவீற்றிருந்த அளவற்ற அவதி ஞானியாகிய அசோதர முனிவனை வணங்கிக் கேட்க, அம்முனிவன் கூறுவானாயினன்.

"சுரேந்திரகாந்த மன்ன! பங்கயமலர்ந்த பழனஞ் சூழ்ந்த பவகிரி யரசன் சயசேனன் புதல்வனும், பட்டத் துத் தேவி பிரீதிமதி பயந்த காளையுமாகிய விஜயபத் திரன் என்பான் மதயானையினும் வலிமிக்கோன். அவன் அரசவாழ்வினை வெறுத்துத் தாங்கரிய தவஞ்செய்து சாசாரமென்னும் இந்திரலோகமடைந்து அவ்வுலகினைப் பதினேழு கடற்றொகை வருஷகாலம் அரசாண்டு வந்த

னன். அவனே ஈண்டு நினக்கு மகனாகி விச்சுவப் பெயரிய அரசிளங்குமரனாய் அவதரித்துள்ளான். ஆதலான், அவன் அரசபோகத்தை வெறுத்து அருந்தவம் புரிந்து சிவகதி சேர்வா னென்பதற்குச் சிறிதும் ஐயமில்லை. இவ்வரலாற்றினை நன்குணர்வாய்" என்று கூறினார்.

ஆதலால் விச்சுவன் நம்பால் மகட்கொடை பெறான். அரசே! இனி, மங்கலமுரசம் முழங்க ஊதுகொம்பு சங்கமுதலிய வாத்தியங்கள் கோஷிக்க அரசர் குழாங்கள் ஒருங்குகூடச் சுயம்வரமொன்றினை ஏற்பாடு செய்யினும் ஒளிமிக்க சக்கிராயுதத்தையுடைய அச்சுவகண்டனே மணம் புரியத் துணிவான்; அவனுக்கு மாறாய் வேறெவரும் துணிந்தெழார்.

"ஒன்றுநாங் கருதிச் சூழி னூழது விளைவு தானே
ஒன்றிநாங் கருதிற் றின்றி மற்றோர்வா றாக
நண்ணும்"

என்று கூறிய உண்மைக்கிணங்க ஊழ்வினை எவ்வாறு முடிக்கின்றதோ அதனை யுணரவல்லேமல்லேம். ஆயினும் நங்குலத்துதித்த முன்னோர் பலருக்கும் பண்டைநாட் டொடங்கி, இந்நாள் காறும மேல் நடக்கும் சம்பவங்கள் பலவற்றையும் முன்னாய்ந்து கூறும் அந்தணர் திலகன் சதவிந்து நிமித்திகன் உள்ளான். அவன்பாற் சென்று யாழினை வென்ற இன்மொழி நங்கையின் வரலாற்றினைக் கேட்டு மேல் நிகழ்வதை அறிந்து அதற்குத்தக நடப்பதே பலவிதத்திலும் பொருத்தமானதென்று எனக்குப் புலப்படுகின்றது" என்று கூறி முடித்தனன். இதனைக் கேட்ட மற்றைய மந்திரிகளும்

இதுவே நல்ல செய்கை என்று ஆமோதித்து, அரசனை நோக்கி,

"இந்திரனனைய நீரோய் இனிப்பிறி தெண்ணல் வேண்டா
மந்திர நீரு மாயின் வருவன வறிய லாகா"

ஆதலின், அடியேங்களுக்கு உத்தரவளித்துத் தாமும் அரண்மனைபுக்கு, சதவிந்து நிமித்திகன்பாற் செல்ல வேண்டியனவற்றோடு அமைந்து இருப்பதே தக்கது" என்று வணங்கிக் கேட்டுக்கொண்டனர்.

அரசன் தன் மந்திரிகளுக்கு விடைகொடுத்து வண்டினங்கள் மலர்மாலையில் வந்திசைபாடக் காலில் வீரகண்டை ஆரவாரிக்க அரமகளிர் போன்ற மடவார்கள் ஆலவட்டம் கவரிவீசத் தனது அரண்மனையடைந்தான். அப்பொழுது சூரியன் உச்சிப்பொழுதினை யடைந்தனன். அரசன் மந்திரியன்னக் கடனை முடித்துப் போஜனம் கொண்டனன். பின்னர் நாழிகைப் பறை யடித்தது. உடனே அரசன் நறுமணம் வீசும் நவமல்லிகை மலர்களாலியன்ற நன்மாலைசூடி அங்கதட்க வாகுவலயங்கள் அளவற்ற வொளிவீச அணிந்து சதவிந்து நிமித்திகனைக் காணுதற்பொருட்டுக் கோதிலாப் புதுமலர் பரப்பிய வீதிமீது பாதசாரியாய்ப் போகலா யினன். இடையிற் கட்டிய கச்சையும் மெய்யிற் போர்த்த இரும்பு கவசமும் உறைகழித்துக் கையிலேந்திய வாளும் விளங்க மெய்காவலாளர் பலர் அரசனைச் சூழ்ந்து வந்தனர். கரும்பினு மின்மொழிக் காரிகையார் வண்டுந் தேனும் உண்டு களிசிறப்பக் கண்ணிறை மலருஞ் சுண்ணப் பொடியுங் கலந்து தூவிக்

கைதொழக் காவலன், நூற்கடலைக் கரைகண்ட சதவிந்து நிமித்திகன்றன் மாடமந்திரத்தின் வாயிற்கடையடைந்தனன். அப்பொழுது சதவிந்து அரசனை எதிர்கொண்டு முகமனியம்பி எங்குலம்விளங்க இங்கருளி வந்த எங்கொங்கலர் தெரியலாய் கொற்றங் கொள்கென ஆசிகூறி மங்கல நீராஞ்சனஞ் சுழற்றி உள்ளழைத்துச் சென்று நறுமணம்வீசும் சந்தனச் சோலைபோற் குளிர்ந்த மண்டபத்தில் வீற்றிருக்கச்செய்து அரசன் வந்த குறிப்பினை யுணர்ந்து தன் சோதிடநூல் வல்லபம் விளங்க அரசனை நோக்கிப் பின்வருமாறு கூறுவானாயினன். "மன்னரேறே! தாங்கள் மனத்தில் நினைத்தவிடயம் மதுமலர் மாலைபோன்ற மடமகள் சுயம்பிரபையின் மணவினையைப்பற்றியே. தாங்கள் இங்கெழுந்தருள உன்னிவரும் போது வீதியில் எதிர்கொண்டு வலம்வந்த பெண்மணி திருமகளேயாவள். தங்கள் மகட்குண்டாகும் அளவற்ற நன்மையை எடுத்துக்கூற என்றால் முடியாது, ஆற்றலிலேனாதலின். இவளுக்குக் கணவனாகவரும் மைந்தனைக் குறித்து ஆதிநாளில் அறக்கதிராழி யெம்மண்ணலாகிய அமலன் அருகக்கடவுள் பல்லுயிரும் உய்யும் பொருட்டுப் பகர்ந்த மாபுராணத்திற் கூறப்பட்டிருக்கின்றது" என்று கூறினான். அதுகேட்ட அரசன் மனமகிழ்ந்து நமது அருமைப் புதல்விக்குரிய தலைவன் யாவன்? அவனுடைய சரிதம் எவ்வாறு சொல்லப்பட்டுள்ளது? என்று கேட்ப, நிமித்திகன் மீட்டும் சொல்வானாயினான்.

"அரசே! அப்புராணத்தில், மூவுலகத்திலும் நடுவண

தாகிய பூவுலகம் கருமலோகமென்பதும், அது சப்த த்வீபங்களாகப் பகுக்கப்பட்டுள்ளதென்பதும், அவற்று ளொன்றாகிய சம்புத்தீவின் நடுவில் மேருவும் அதனைச் சூழ்ந்து சப்த குலாசலங்களும் உள்ளவென்பதும், மேலும் இத்தீபத்தில் நதிகளேழும் கடல்கள் பதினான்கும் கண்டங்களேழும் பொருந்தியன வென்பதும், அக்கண்டங்களுட் பரதகண்டமே சிறந்ததென்பதும், கூறப்பட்டுள்ளன. இப்பரதகண்டம் போகபூமியாய் மூன்றாமூழிகாலம் இருந்தது. அதன் பின்னுழிற் பிரமர்கள் தோன்றிச் சூரிய சந்திராதிய கிரகங்களையும் பிரபஞ்சத்தையும் படைத்தார்கள். மூன்றாவது ஊழியின் முடிவில் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுத் தருமசக்கிர மேந்திய கையனாய்ச் சோதிமூர்த்தி அருகநாதன் அவதரித்தருளினான். அவன் அருளினால் பாதேசுவர சக்கிரவர்த்தி உலகமுழுதையுந் தனிச்செங்கோ னடாத்தி மன்னுயிர் புரந்து வந்தனன். அவன் ஒருநாள் அருகக் கடவுளை வணங்கித் தனக்கு பின்னர் நிகழும் வரலாற்றினை வினவியபோழ்து, அவர் அவனைநோக்கி 'யான் முதலாக இருபத்துநால்வர் நாதர்களாவார். நீ முதலாகப் பன்னிருவர் சக்கிரவர்த்திகள்; வாசுதேவர்கள் ஒன்பதின்மர், பிரதிவாசுதேவர்கள் ஒன்பதின்மர். உனது மகன் மரீசி போதனமாநகரத்து அரசனாவான்; அவனே முதல் வாசுதேவன். அன்னோன் குலத்தில் மற்றுமோர் வாசுதேவனாய் ஒருகாலை அவதரித்துப் பிரதிவாசுதேவனாகத் தோன்றிய அச்சுவக்கிரீவனை யொரு கன்னியின்பொருட்டுக் கொன்று அவன் கையாழியை யேந்தி உலகு புரந்தருள்வான்' என்று

கூறியருளினான். மன்னர் மன்ன! அக்காளை சுவர்க்க நாட்டினை நீங்கிப் பூமியில் போதனமாநகரத்தரசன் பயாபதியின் இளையகுமரனாகப் பிறந்து திவிட்டகுமாரன் என்னும் பெயரோடு விளங்குகின்றனன். அவனே தமது மடமகட்குரிய கணவன். அத் திவிட்டன் தம் மங்கையை மணந்தபின்னர் அச்சுவகண்டன் தலையைக் கொய்து உத்தரதக்கிண சேடிகள் இரண்டையும் தங்களுக்கே அரசாளத்தருவன். இதற்கு அடையாளமாக ஒன்று கூறுகின்றேன். இன்னும் ஒரு திங்கள் கழியும் முன்னர் அத்திவிட்டகுமாரன் ஒரு சிங்கத்தினைக் கொன்றருளுவான். அதனை அறிந்தருளுக" என்றுகூறி முடித்தனன். இவற்றையெல்லாம் கேட்ட சடியரசன் பெருமகிழ்வடைந்து அச் சதவிந்து நிமித்திகனுக்குச் சோதிமாலை யெனப் பெயரிய வளநாடொன்றினை வெகுமதியாக அளித்து அவ்விடம் நீங்கிச் சூரியன் அஸ்தமன மடையும்பொழுது தனது மனைவி வாயுவேகை வதியும் மாளிகை புகுந்து எதிர்கொண்டு தொழுத மனைவியைப் புகழ்ந்து பாராட்டித் தான் நிமித்திகனிடம் சென்றதும் அவன் மடமகளைப் பற்றிக் கூறியதும் விளங்க வுரைத்துப் பின்னும் பகர்வானாயினான். "நங்கையர் திலகமே!

"தொக்கிள மலர்துதை விலாத சோலையும்
புக்கிளந் தாமரை நகாத பொய்கையும்
மிக்கிளம் பிறைவிசும் பிலாத வந்தியும்
மக்களை யிலாததோர் மனையு மொக்குமே"

நல்ல அரசகுல மென்னும் கற்பக விருட்சம் தலைமகனாகிய பாராரையைப்பெற்று மனைவியாகிய சாகை

யும் மக்களாகிய பூந்தாதும் முதியராகிய தேன்களும் விளங்கவளரும். நற்குண நற்செய்கை நல்லொழுக்க முடைய நெறிநிகழும் மக்களை அரிவையர் பெறுதல் வையகத் தருமையினும் அருமை. முன்செய்த தவப் பயனாய்ப் பிறந்த நினது மடமகள், தீபம் தவிர்ந்தும் சிறந்தும் இருப்பினும் இருளினை யழித்து யாண்டும் ஒளியினைப் பரப்புமாறுபோல, எத்திசையினும் தன் புகழ் பரவ நின்றனள். வலம்புரிச்சங்கின் வயிற் றுதித்த ஆணிமுத்தினையனைய அணங்கினைப் பெற்ற தால் நமது குலம் கண்டோர் களிக்கப் பிரகாசமடைந் தது. யானை வென்ற பார்வையையுடைய மடவரலே! பலபடக் கூறுவதென்னை! நின்மகள் திருப்பாற்கட லிடை மலர்ந்த தெய்வத்தாமரை மேலமர்ந்திருக்கும் திருமகளை யென்பதற் கையமின்று. அன்னோள் காயாம்பூவினை வென்ற திருமேனியுடைய கேசவ னுக்கே உரியளாவாள். இவையெல்லாம் உன்றன் எனக்குண்டான பெருமையாகும்" என்றனன். இவ ற்றைக்கேட்ட வாயுவேகை ஆனந்தமாக் கடலிற் ந்து ஒளிதவழும் முத்தனைய முறுவலோடு அரசனை வணங்கி, "நாதா! நமது பெண்மணி நுமது திருவருளி னாலன்றே பிறந்தவள். ஆதலின் தம்மாலன்றோ இத் துணைப் பெருமையும் எனக்குண்டாயது. தந்தை யாலேதான் மக்கட்குப் பெருமையுண்டு; தாயால் என் னும்?" என்று உபசாரமொழி புகன்றனள். அரசன் கேட்டு உவகைமீதூர அவளுடன் அளவளாய் மகிழ் ந்து வைகிப் பிற்றைநாட்காலையில் மகன் அருக்க கீர்த்தியையும் மந்திரிகளையும் வரவழைத்து மகளைப்

பற்றி நிமித்திகன் கூறிய யாவற்றினையும் கூறித் தன் மடமகட் குண்டாகிய சௌபாக்கியத்தையும் தமக் குண்டாகிய நன்மையையும் திவிட்ட குமாரனது பெருமையையும் எடுத்துப் பாராட்டிப் பேசினான். யாவரும் இன்பமா கடலுள் மூழ்கியிருந்தனர்.

இவற்றையெல்லாம் கேட்ட அமைச்சர், "அரசே! இப்பெண்மணி திருமகளாம் அணங்கே யென்பதற் கையம் சிறிதுமில்லை. இனி, அத் திவிட்டகுமாரன் தந்தையாகிய பயாபதி மன்னன்பால் ஓர் தூதனை அனுப்புவதே முறைமையாகும். ஆதலால், சகல சாஸ் திரங்களையும் கற்றவனும் கற்றவர்கள் கழறிய வினு வினுக்கேற்ப விடைபகரு மாற்றலுடையானுமான மரீசி என்பவனே தூதலக்ஷணம் பலவும் உடையனாத லின் அவனையே சுரமை நாட்டரசன்பால் தூதனுப்பு தல் தக்கது. அவனே நமது குலமுறை வரலாற்றையும் மணவினைச் செய்தியையும் எடுத்துப் பேசும்வன்மை யுடையான்" என்று எடுத்துக் கூறினர். சடியரசன் அவர் மொழியினை அங்கீகரித்து மரீசியை அழைத்து அவன் கையில் பயாபதி அரசன் விலாசம் பொறித்த திருமுகம் ஒன்று வரைந்துகொடுத்து விஷயம் பல வற்றையும் எடுத்துக்கூறி மணவினை இனிது நிறை வேற ஆவனவற்றைச் சொல்லி விடுத்தனன். மரீசி யும் மன்னவன் கழலடிபணிந்து அன்னோன் பணியினைச் சிரமேற்கொண்டு திருமுகம் கையகத்தேந்தி விசும்பாறு கப் படர்ந்து சுரமைநாட்டை யடைந்து போதனமா நகரினை நெருங்கியுள்ள புட்பமாகாண்ட மெனனும் பொழிலிடை இறங்கி, மலர்கள் மதுத்துளியிலிற்றி

வழிவந்த இளைப்பினை மாற்றத் தென்றல் விடாய் தணித் துபசரிப்ப மழலை வண்டினம் இன்னிசை பயின்று முகமன்கூற ஆண்டு அமர்ந்திருந்தனன்.

## அத்தியாயம் 4

சுவலனசடியாசன் சொற்படி அவன் திருமுகத் தோடு தூது கூறவந்த மரீசி, தான் இறங்கிய புட்பமா கானண்டமென்னுஞ் சோலையின் வனப்பினையும் வளத் தையும் கண்டு பெருமகிழ்வடைந்து நின்றான். அப் பொழிலிலுள்ள பலவேறு விதமான நறுமலர்கள் யாவும் ஒருங்கு சேரத் தமது நல்வாசனையைப் பரப்புதலான் அச்சோலை எங்கும் அற்புதமான தெய்வமணம் கமழா நின்றது. எப்புறம் நோக்கினும் மதுத்துளி இடை விடாது பிலிற்றுவதால் எக்காலமும் மழை சொரிவது போல் இருக்கது. பல மரங்களும் தலை யசைந்து நல்வரவேற்று மலர் சொரிந்து தன்னை உபசரிக்கு மெழிலினைக் கண்டு மரீசி உளங்களித்து ஆண்டொன் றோர் அசோக மரத்தினை அண்மி அதன் நிழலிற் பேரொளி பரப்பி விலங்கும் மணிச்சிலாதல மொன் றினைக் கண்டு வியந்து நின்றனன். அவ்வமயம் அப்பொழிலிடைக் காவல் புரிந்து நிற்கும் தருமசாரந் தன் ஆண்டுப்போந்து மரீசியை வணங்கி அவன்றன் பாதங்களில் அணிமலர் தூவிவணங்கி அத்திகழொளிச் சிலாதல மேடையைக் காண்பித்து அதன் மிசை வீற் றிருக்க வேண்டிக்கொண்டனன். மரீசி மனம் வியந்து,

ஐய, இம்மணிப்பீடம் மாநுடர் இருக்கையோ, நமது அடிகளாகிய அருகக்கடவுள் வீற்றிருக்கத்தக்க இடமென்றே கருதுகின்றேன். 'தேவர்கள் இருக்கையில் மாநுடர் இருத்தலடாதே' என்று கூற, தருமகாந்தன் அவனை நோக்கி, "அன்புடை ஐயனே, அங்ஙனமின்று; எனது மன்னனேறு பயாபதி யரசனது இளைய புதல்வன் திவிட்டராஜகுமாரற்கு மணம்பேச ஏழு நாளில் விஞ்சையதூதன் ஒருவன் வித்தியாதரமன்னன் திருமுகங்கொண்டு இப்பொழிலிடை வருவன் என்று அங்கத நிமித்திகன் எம்மரசற்கு உணர்த்தியமையால் அரசன் திவளொளிச்சிலாதலமொன்றை ஈண்டு அமைத்து நுமது வரவினை அகமகிழ்ந்து ஏற்க அடியேனையும் ஈங்கிருக்க ஆஜ்ஞை யிட்டுள்ளான். நுமக்காக இன்புடனமைத்த வெழிலாதனத்தி னினிமையோ டிவர்ந்திருந்தி" என்று வேண்டிக் கொண்டனன். மரீசியும் பெருமகிழ்வடைந்து ஆண்டுவீற்றிருந்தனன். தருமகாந்தன் அவனை நன்கு உபசரித்துப் பயாபதி யரசனுக்கு அவனது வரவினை அறிவித்தனன்.

அரசன் மிக மகிழ்வடைந்து அவன் வழிவந்த இளைப்பை மாற்றும் பொருட்டு நடனகீதங்களில் வல்ல மாதர் சிலரை அவன்பாற் சென்று ஆடல்பாடல்களால் அகங்களிப்பிக்க ஆணையிட்டனன். அரமகளிரினுஞ் சிறந்த அழகுடைத்த அம்மங்கையர் தமது மேகலையுஞ் சிலம்பும் புலம்ப மணித்தோடுகள் மின்னொளி பரப்ப அன்னம்போல நடந்து அச்சோலையை யடைந்து தமது ஏவன் மடைந்தையர் தம்முடன் கொணர்ந்த மாலை சுண்ணம் சந்தனம் பனிநீர் சிந்

றுண்டி முதலியவற்றை மரீசி முன்னர்ப்பரப்பி இனை-யினு மினிய இங்கித மொழியால் அவனை உபசரிப்பாராயினார். இம்மாதர்களைக் கண்ட மைந்தர் பலரும், 'அரூபியான அநங்கனை வெளியில் வெல்லலாமென்று சிலர் வாய்மதங்கொண்டு பேசுதலாற் பயனென்னை, இத்தகைய மகளிரைச் சேனையாகவுடைய அவனை வேறு மொண்ணுமோ? சிலர் தம்மை அறிவுமிக்கவராக எண்ணித் தாங்கரும் தவம்புரிய வனங்களிற் புகுந்து காடுகாப்பவராய்த் தமது வாணாளை வீணாளாக்குந் தன்மையைக் கண்டு பெருஞ்சினங்கொண்டு அம்மகளிரின் தனபாரங்கள் சந்தனக் குழம்பிடை வளர்வனவாயினும் முகங்கறுத்துள்ளன; சந்திரவனமாதலின் அவர் தம் பெருமையை யாவரெடுத்துரைக்க வல்லார்.' என்று இன்னோரன்னமொழிகளால் வியந்து பேசி நின்றனர். மரீசி இவர் அரம்பையரே; இவ்வுலகும் பொன்னுலகே; தான் அநுபவிப்பதும் அமராவின்பமே என்று மகிழ்வடைந்து அதிசயித்திருந்தனன்.

பின்னர் அரசன் ஏவலால் விசயனும் திவிட்டனும் நாற்படையும் புடைசூழ மடமாதர் கவரிவீச வெண்ணிலா இலங்கு திங்கள் கருநிறமேகமொன்றுடன் செம்பொன்மாமலைமீது விளங்குமாபோலப் பொன்னோடை யணிந்த அரசுவா வொன்றின்மேல் ஆரோகணித்து, நாற்புறமும் ஆடுவாரும் பாடுவாரும் பல்லாண்டுகூறி வாழ்த்துவாரும் வணங்குவாரும் பொருந்தித் திகழத் திருவீதியிற் றம்மைக்கண்ட மாதர் காமுற்றுக் கையற்று நிற்கப் பவனிபோந்து புட்பமாகாண்டமென்னும் பொழிலினையடைந்து அசோக மரத்தடியில்

இலங்கொளிச் சிலாதலத்தின்மேல் வீற்றிருந்த மரீசியைக் கண்டனர். அப்பொழுது பலவித வாத்தியங்களும் அதிர முழங்கின. அரச குமாரைக் கண்ட மரீசி பொருக்கெனத் தனதிருக்கை விட்டெழுந்து கூப்பிய கையனாய் அவரை வணங்கினன். அப்பொழுது மூத்த நம்பி விசயகுமாரன் "ஐய! நீவிர் அருங்குணந் திருந்திய அண்ணலாகுவிர்; எமக்குப் பரமாசாரியனாயும் விளங்கற்குரியீர்; தேவாம்சம் பெற்றுளீர்; ஆதலின் ஈண்டு எம்மைப் பணிதல் தக்கதொன்றாமோ?" என்று விண்ணப்பித்தனன். அவ்வித்தியாதரன் இருகுமாரின் பொருவிலா வெழிலையும் கண்டு கண்களித்து அன்னோர் பாதாதிகேச சாமுத்திரிகாலக்ஷணங்களையும் உற்றுநோக்கி யாழ்ந்து வியந்து, "அண்ணலங்குமரர்களே! நீங்கள் விண்ணுலகை நீத்து மண்ணுலகஞ் செய்த நற்றவப்பயனால் ஈண்டவதரித்துள்ளீர்; நுமது பெருமையை நோக்குங்கால் யாம் சூரியன் முன்னே மின்மினிபோலாவோம். நீவிர் தேவவடிவ மொழித்து மானுடவுருக்கொண்டு அமைந்து நிற்பீராயினும் இன்னும தேவர்களே யாவீர். ஆதலால், முற்பிறப்பில் நல்வினை செய்தமையாலன்றோ நும்மை வணங்கும் பாக்கியமடைந்தேன்" என்று இன்மொழிகூறி மீளவும் வணங்கினன். இதனைக்கேட்ட அரசிளங்குமரர் மரீசியை உபசரித்து, "ஐய! நும்மை அழைத்துவரும்படி எந்தை ஆஜ்ஞாபித்துள்ளார்; ஆதலால் இப்பட்டத்துயானையின் மீது அருள்புரிந் தெழுந்தருள்க" என்று கூறி அவனை யானைமேலேற்றி அழைத்துக்கொண்டு அரண்மனைக்குப் புறப்பட்டனர். நாளு

வித வாத்தியங்களும் முழங்கின; மங்கையர் பல்லாண்டிசைத்தனர்; மற்றும் வந்தியர் முதலியோர் வாழ்த்தெடுப்ப மடமாதர் சுண்ணப் பொடியினை நறுமலருடன் கலந்து வாரிவீசினர். இவர்கள் வருகையினையுணர்ந்து அரசன் நவமணிமாளிகைகள் நாற்றிசையினும் நாலவிட்ட தன்மையால் சாம்பூநதம் ஒழுகும் மேரு மால்வரையெனத் திகழும் அணிமணி மண்டபமொன்றை அலங்கரித்து அதனுளிட்ட அரியாசனத்தில் அமர்ந்து அமைச்சர் முதலியோர் நாப்பண் தாராகணங்கட்கிடையே திகழும் தண்மதியொப்ப வீற்றிருந்தனன். தனது குமாரர்கள் அழைத்துவந்த விருந்தையர் தூதனை நல்வரவுகூறி யழைத்து இலங்கொளியாசனமொன்றின்மீதிருக்கச் செய்தனன். மரீசி அரசனை வணங்கியிட்ட வாசனத்தமர்ந்து யோகக்ஷேமங்களை அளவளாவிப் பேசி முடிவில், எழுந்து நின்று தனது மன்னன் சுவலனசடியின் இரதநூபுர வெள்ளியங்கிரியினைத் திக்குநோக்கித் தொழுது அரசனனுப்பிய அரக்கு முத்திரை யமைத்த திருமுகத்தினைப் பயபத்தி அரசனிடம் சமர்ப்பித்தனன். மன்னவன் குறிப்பினை யுணர்ந்த மதிவலோனாகிய இலேககன் எழுந்து அத்திருமுகத்திலிட்ட இலச்சினையை நீக்கி,

“ நிகரிகழ்ந் தழகி தாகி
நெரிவடுப் படாத வேழப்
புகர்முகப் பொறிய தாய
புகழ்ந்தசொல் லைந்தும் போகா
மகரவாய் மணிக்கட் செப்பின்
மசிகலந் தெழுதப் பட்ட

டகரரும் பதங்க ளோக்கிப்
பயின்றுபின் வாசிக் கின்றான்.''

அத்திருமுகத்தில் பின்வருமாறு வரையப்பட்டிருந்தது :—

"போதனமாநகரத் திறைவன் பயாபதி மன்னன் காண்க. விஞ்சையர் வேந்தன் இரதநூபுர மன்னவன் அன்புடன் விடுக்கும் நிருபம் ஈது :—

அரசற்கு எல்லாச் செல்வமும் மேன்மையும் குடிகளும் மிக்கோங்குக. தமது இளைய குமாரன் திவிட்ட நம்பிக்கு எமது எழினலங்கனிந்த புதல்வி சுயம்பிரபை வாழ்க்கைத் துணையாய் அமரும் நியமனம் பெற்று நிற்கின்றனள். ஆதலால் தமது மருமகளை வரவழைத்துத் தம்மகற்கு மணவினைமுடித்து மகிழ்க. இன்று முதல் நமது பெண்மணி தமது மகற்கேயுரியள். எமக்குரியளல்லள். நாமும் மணமகனும் கன்னியும் நீடுழி வாழ்க என்பதே.''

இங்ஙனம் நிருபத்திற் கண்டதைப்படிக்கக் கேட்ட அரசன் மிகவும் வியந்து, விஞ்சையர் எம்மேனோரினும் சிறந்தவரன்றோ ? விஞ்சையர் வேந்தன் இன்னணம் மணவினைகண்ட திருமுகமனுப்பியது பெரிதும் அற்புதந் திகழ்வதாகும் என்று தனக்குண்டான நன்மையினை நினைந்து நினைத்து உள்ளமுருகிப் பரவசமாகி எதிரிலுள்ளாரையும் மரீசியினையும் மறந்து செயலற்று நெடுநேரம் வாய்வாளாமை மேற்கொண்டு விஞ்சையன் திருமுகத்திற்கு மறுமொழிகொடாது யோசனையிலாழ்ந்துவிட்டனன். வந்த மரீசியோ தான் கொணர்ந்த திருமணப் பத்திரிகைக்குத் தக்கவாறு நன்மொழி பெறாத

தால் அரசன் திருமுகத்தை யிவன் நன்கு மதித்திலன் என்று பெரிதும் வெகுளிமேற் கொண்டவனாய்ப் பின் வருமாறு படபடப்புடன் பகர்வானாயினன் :—

“ விளங்குகின்ற வேலாயுதத்தையுடைய அரசனே! எப்படிப்பட்டவராயினும் தமக்காக வேண்டிய செயலொன்றினைக் குறித்து இந்நிலவுலக மனிதரிடம் வலிய வந்து மொழிவாராகில் அவர்கள் மனிதரால் இகழப்படுவார் என்று கூறப்படும் உலகவார்த்தை உண்மையாகப் புலப்பட்டது. தேவரும் தம்மோடு நட்புப் பூண்டால் மனிதர் அவர் தம்மைத் தம்மோடொருவராகக் கருதுவார். இத்தன்மை, மனிதர்க்குள்ள இயல்பாகிய குற்றம்போலும். இதனை யான் இப்பொழுது நும்பாற் கண்டேன். வியாதியாற் கவலையுழக்கு நோயாளிகளுக்குப் பாலினை வலியப்புகட்டினாலும் அவர் அதனை உட்கொள்ளாது வெறுத்துமிழ்வார்; அங்ஙனமே வித்தியாதரரின்பெருமையை நரர்கள் எங்ஙனமறியற்பாலர். தருமமார்க்கத்திற் றலைநின்று தவமியற்றுந் தக்கோரையன்றித் தீவினையில் அழுந்திய சிறியோர் பிறவியின் வேரினை யறுக்கும் பேரறிவினையடையும் பெற்றியராவரோ? அரிய செல்வத்தினையுடைய வித்தையர்தம் ஆற்றலினையும் நிலையினையும் மனிதர் அறியார். முடங்குங் கொம்பியும் கைம்மலையின் வலியினை இளங்கன்று சிறிதும் அறியாது. எம்மனோர் பெருமையினை மானுடர் பல காலம் வாழ்ந்திருந்தும் பெறார். கற்பகத்தின் சிறப்பினைக் கள்ளிச்செடி யெங்ஙனம் அறியும்? அரசே! வெள்ளியங்கிரிச் செல்வனாகிய எந்தலைவன் நின்னிடத்து வலியத் தூதனுப்பிய பிழையினால் இன்று நின்னால்

இகழப்பெற்றனன்; அவனனுப்பிய திருமுகத்திற்கும் தூதிற்கும் ஏற்றவாறு விடைபகராமல் அவமதித்து வாளாதிருந்தனை" என்று சினந்து பேசினன். இதனைக்கேட்ட பயாபதி அரசன் மிக்க வியத்துடன் மரீசியை நோக்கி, "ஐய! யாம் ஒன்றும் பேசாது சும்மா இருந்ததால் நமது அரசன் தூதினை யாம் அவமதித்ததாக எண்ணிக் கோபங்கொள்ளற்க. மண்ணுலகில் வாழும் மாநுடர்க்கு விஞ்சையர் செல்வம் கிடைப்பதரிது. பன்னெடுங்காலம் அருந்தவம் புரியினும் அன்னவர் பெருமையை பிம்மண்ணவர் பெறார். நீவிர் எடுத்துக் கூறியபடி நும்மனோர் பெருமையைப் பொள்ளல் யாக்கையையுடைய மாநுடர் அறியவும் வல்லரல்லர். நமது அரசன் எமக்குக் கொடுத்த சிறப்பினை புன்னி அவனது திருமுகத்திற்கு ஏற்றவாறு சிறந்த விடை யாது கூறுவதென்று மதித்தே எம்மனத்துள் ஆராய்ந்து நின்றேம். நும்மை அவமதித்து வாய்மூடி மௌனஞ்சாதிப்பச் சிறிதும் கருதினே மல்லேம்" என்று கூறினன். இதனைக்கேட்ட மரீசி அரசனது பொறுமையினையும் தனது பொறுமை யின்மையினையும் எண்ணி நாணமடைந்து வெகுளி நீங்கி அடடா! என்னபாவம், அரசனது கருத்தினை யுணரகில்லாது பலவிதமான கொடுமைவாய்ந்த புன்மொழி கூறினேன் என்று தனக்குள் மிகவும் பரிதபித்து வருந்திப் பயாபதி மன்னனை வணங்கித் தான்பேசிய கொடுமொழிக்காகத் தன்னைச் செறுது பொறுத்தருளவேண்டி நின்று பின் வருமாறு பேசினன். "மன்னர் மன்ன! என் சிறுமையினை எனது அவசரகுணத்தால் வெளிப்படுத்திக்

கின்னரரும் மெய்ம்மறந்தனர்; பட்டமரமும் விட்டுத் தளிர்த்தன; தேவர்கள் தமது அமுதத்தினை மறந்து கானாமிருதத்தையே யுண்டுகளித்தனர். அவ்வமையத்தில் பன்னகலோக மன்னவனான ஆதிசேடன் ஆங்கடைந்து அருகக்கடவுளின் திருக்கோயிலை வலம் வருபவன் அக்கடவுள் ஆணையால் கானமிழ்தம் பொழியும் சோனமேக மொத்த நமியரசனை நோக்கி, "நீ நம் அறக்கடவுளை அன்புடன் வழிபடுகின்றனை. உனக்கு வேண்டியதியாது?" என்று வினவியருளினன். அதுகேட்ட மன்னன், "தேவ, விண்ணுலகத்துவாழும் விபுதர்கள் தாம் வேண்டியவற்றை வேண்டியாங்குப் பெறுவது போல, எளியேனும் இம்மண்ணுலகததில் பெறுதற்கரிய செல்வத்தைப்பெற நினைப்பினும் நினைத்தவாறுபெற வரமளித்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தனன். ஆதிசேடனும் அவன் வேண்டுகோட்கிரங்கி அவனுக்குத் தேவர்களின் தன்மையினையுண்டாக்கும் திருமந்திரமும் மனைவியும் வெள்ளிமலையும் அளித்து, வேந்தனாய் எக்காலத்தும் வீற்றிருப்பாயாக என்று ஆசிர்வதித்துப் பின்பு தன்னுலகுபுக்கனன். எண்டிசையினும் புகழ் பரப்பிய அந்த நமிமகாராஜன் குலத்தோன்றலே எமது சுவலனசடியரசன்; ஆதலின் அவனும் மாநுடனே. நீயிரும் செல்வத்தினானும் பெருமையானும் எமதரசனையொப்பீர். ஆகவே, நீங்கள் இருவரும் உறவின் முறைமையோடு கலத்தல் பாலொடுதேன் கலந்தாற்போல இனிமைபயக்கும்." என்று கூறி முடித்தனன்.

அப்பொழுது பயாபதி மன்னன அவையிடத்திருந்த அங்கத புரோகிதன் எழுந்து மரீசியை நோக்கி,

கடவுளின் திருவருளைப் புகழ்ந்து பேசினார்கள். அரசன் பேச ஆரம்பிக்குமுன் மரீசி, 'அங்ஙனம் அருந் தவம்புரிந்த பெருந்தகை யண்ணல் வாகுவலி மன்னன் எங்குல முதல்வனாகிய கச்சனுக்கு மருகனென்று புராணங்கள் கூறுவதை யான் நன்குணர்வேன். பண்டைக் காலந்தொட்டு இருகுலமும் ஒத்துவாழும் பெருமையால் இப்பொழுது எதிர்பார்க்கும் மணவினைச் சம்பந்தம் நூதனமன்று, புராதனமானதே. இதனாலே இரு திறத்தார்க்கும் பெருமகிழ் வுண்டாம் என்பதற்கு ஐயம் சிறிதுமில்லை" என்ற நமகிழ்ந்து கூறினான். அப்பொழுது அரசன் பெரிதுங் களிப்படைந்து எப் பொருட்கும் இறைவனை மனத்தால் வணங்கி வாழ்த்திக் கூறலாயினான். "பேரறிவாள! உலகநூல்களும் உத்தமகுலங்களின் றகைமையும் குலமுறைப் பெருமையும் நின்னினும் உணர்ந்தோர் எவருமிலர். அரசாட்சி யென்னும் எந்திரத்தின் திருவுருவிற்கு அமைச்சர்களே கண்கள், தாள்கள் பிள்ளைகளே, தோழரே இரு புயங்கள், ஒற்றரே செவிகள், நல்லுணர்வு நூல்களே, வாய்மையன்றி வேறணிகலம் வேண்டப்பெறாத திருவாய் தூதுவனே. இவற்றுள் அமைச்சருக்கு ஒதிய நீதியும் அறிவும் முதிர அமைந்து நின்றொருவன் தூதுவனாயின் அவன் கண்ணினும் சிறந்தோன் என்பதற்குத் தடையாது? யாதொன்று சம்பவித்த ஞான்றும் அரசனைத் தேற்றியும் அறிவுகொளுத்தியும் சமயோசிதமான உபாயத்தால் அரசனைப் பாதுகாக்கும் வல்லமை அவனுடையதன்றோ? இத்தகைய இலக்கணங்கள் யாவும் ஒருங்கமையப்பெற்ற நின்னைத் தூது

வனைப் படைத்த மன்னன் தானினைத்த வெல்லாவற்றையும் பெறுவானென்பது திண்ணம். நீ எம்பாற் றூது போந்ததும் எமது புண்ணியப் பயனே. இனி யான் கூறற்பாலது அதிகமாக ஒன்றுமின்று. இன்று தொடங்கி எமது திருக்குமாரர் நுமதரசற்குக் குற்றேவல் புரிபவராவார். வேண்டுமாயின் அவர்களை யழைத்து வேண்டும் பணியிலமைக்கச் செய்தி. எமது மகளைத் தமது மக்களாகப் பாவிக்க யாம் கூறியதாக நுமதரசற்குத் தெரியக்கூறுதி" என்று சொல்லி மரீசிக்கு வேண்டிய உபசாரங்கள் செய்து தனது மாளிகையிலும் மற்றிடங்களிலுமுள்ள விநோதங்களைக் காட்டி மகிழ்வித்து அன்று விருந்துணவு செய்தருத்தி அளவற்ற ஆடையணிமுதலிய சிறப்பீந்து பலமுதியோருடன் வழிகூட்டி அனுப்பினான். மரீசி தென்றிசைச்சேடி காவலன் சுவலனசடியின் திருநகரத்தை யடைந்தான்.

## அத்தியாயம் 5

மரீசி இரதநூபுரநகரை யடைந்த உடனே தனது அரசன் வாழும் அரண்மனையடைந்து கோயில் வாயில் மூன்றையும் கடந்து உட்புகுந்து ஆண்டு இருந்த சடியரசனை வணங்கிப் பின்னர் அரசன் குறிப்பினாற் காட்டிய இருக்கை யொன்றின்மீ தமர்ந்திருந்தனன். அகத்தினழகு முகத்திற் றெரியுமாதலின் மரீசியின் முகத்தைப் பார்த்த அரசற்கு அவன் சென்றுவந்த விடயம் கைகூடியது தெள்ளிதிற் புலப்பட்டது. மரீசி, மன்ன

வனைப் பணிந்து அரசனே நின்பொற்கழல்கள் வென்றி யோடு நீடூழி நின்று நிலவுக, தீயன தொலைக, நினது புகழ் உலகமுழுவதும் பரவுக" என்று வாழ்த்தி, தான் தூதுகூறற்பொருட்டு வெள்ளிமலையினின்றும் புறப் பட்ட அன்றே போதனமாநகரத்தைச் சார்ந்து விளங் கும் புட்பமாகாண்டமென்னும் சோலையை யடைந் ததும் அச்சோலையில் இடையறாது மதுத்துளிகளைப் பலமலர்களும் சொரிவதால் மதுப்பெருக்கெடுத்து யாறு போற்பாயும் விந்தையைக்கண்டு வியந்ததும், ஆண் டுள்ள நறுமணங்கமழும் தாமரைத் தடாகக்கரையில், பயாபதியரசன் முன்னுணர்ச்சியால் தன்னை நல்வர வேற்கக் கருதிச்சமைந்த அணிமணிச்சிலாதல மொன் றைக்கண்டு நின்றதும், அப்பொழுது அந்நந்தனவன த்தைக் காவல்புரியும் துருமகாந்தன் வந்து தன்னை யுப சரித்து அசசிலாதலத்தின்மீது வீற்றிருக்கச் செய்து தன்வரவினைப் பயாபதி மன்னர்க் குணர்த்தியதும், அதையறிந்த அரசன்விடுத்த அரமகளிரினும் பெருமை வாய்ந்த மங்கையர் தன்னையடைந்து ஆடல்பாடலக ளால் மகிழ்வித்து அமுதத்தினும் இன்சுவையுள்ள வுணவூட்டி உபசாரம் செய்ததும, அவ்வமையத்தில் அரசன் ஆணையால் அவன் குமரிருவரும் பரிவாரங் கள் புடைசூழ்ந்துவரத் தன்னையணுகி முகமன்கூறி அழகிய அரசுவாவொன்றின் மேலேற்றி அரசன் முன் னர் விடுத்ததும், தான் வந்த வரலாற்றினைக்கூறித் தூது பேசி மணவினைச்செய்தி பொறித்த பொன்னிறத் திரு முகத்தைப் பொலிவுடன் ஈந்ததும், அதனை யிலேககு ஞல் உணர்ந்த பயாபதிஅரசன் கழிபெருங் களிக்கட

னுளாழ்ந்து தன்னை மறந்து ஒரு மொழியுங் கூறாது வாய் மூடி மௌனியாயிருந்ததும், தான் அவன் மௌன நிலையால் திருமாநகத்தையும் நாடினையும் இகழ்ந்தனா னென்று தவறினைத்து உடனே சினந்துடன் அவனை வெகுண்டுபேசியதும், அரசன் தனது உள்ளக் கிளர்ச் சியை உண்மையோடுரைசெய்து மணவினைக்கு மன மகிழ்ந்து ஒப்பிக்கூறிய இங்கித மொழிகளையும், தனக்கு விருந்தமளித்து ஆடையாபரணங்களால் சிறப்புச் செய்து சான்றோருடன் வழிவிட்ட பெருமையினையும், சாங்கோபாங்கமாய் எடுத்துப் பேசியதன்றிப் பயாபதி மன்னன் நீதியோடு உலகுபுரக்கும் வல்லமையையும், அவன் மனைவியர் பெருங்கற்பினையும், அவ்வேறு நவா த்த நன்மொழிகளையும், இருகுமாரர்களின் நற்குண நற்செய்கைகளையும், அவருள் இளையனாகிய திவிட்ட குமாரனுடைய திப்பிய வெற்றியையும் அவனைத் தலை வனாய்ப் பெறுதற்குச் சுயம்பிரபையை நற்றவஞ்செய்த வளே என்பதற்கையமின்றென்னும் அத்தம்பியும் தமது நங்கையும் மணந்தால் அதுவே இருகுலமுஞ்செய்த புண்ணியப்பேறு என்னும் பலபடப்பேசி முடித்தான். மரீசி மணவினையின் பொருட்டுத் தூதுசென்று மீண்ட வரலாற்றினை மனமகிழ்வுடன் கேட்ட சடியரசன் அவ னுக்கு அளவற்ற நிதிகளை வாரிக்கொடுத்துச் சிறப்புச் செய்து அவனையவன் மனைக்கேக விடையளித் தனுப்பி னான். பின்னர் அரசன் தனது மந்திரிமார்களை யழை த்து மந்திராலோசனை மண்டபத்தமர்ந்து விடயங்கள் யாவற்றினையும் அவர்களுக்கு விளக்கவுரைத்து மேல் நடக்கவேண்டியவற்றை ஆராய்வானாயினான். அப்பொ

மூதா அமைச்சர்கள், " அரசே! சதவிந்து நிமித்திகன் சோதிடமாய்ந்து வருவன வுரைக்குங்கால் இன்னு மொருமதி கழியுமுன்னர்த் திவிட்டராஜன் ஒரு சிங்கத் தினை வாய்பிளந்து கொல்லுவானென்று கூறியுள்ளான்; ஆதலின் யாமொரு தூதுவனை மண்ணுலகிற் கனுப்பிச் சதவிந்து கூறிய நாளளவும் ஆண்டிருந்து அஃதங்ஙனம் நிகழ்தலை யறிந்துவந்த பின்னர் மணவினையைப் பற்றி யாய்தலே நலமென்று கூறினார். இம்மொழி கேட்ட மன்னன் அவர் உள்ளக் கருத்தின்படி ஒற்றன் ஒரு வனை ஆணைதந்து அனுப்பிவிட்டுத் தன் உறவின்முறை யாருடன் உவகையங் கடலுளாழ்ந் திருந்தனன்.

ஈதிங்ஙனமாக, உத்தரசேடியி லரசாளும் அச்சுவ கண்டன் செய்தியை யினிப்பேசுவாம். அச்சுவகண் டன் தன் பெயர் கூறியமாத்திரையிலேயே பகைவர் யாவரும் நடுங்க ஏகசக்கிராதிபதியாய்ச் சயத்தம்பம் எண்டிசையினும் நாட்டி எவருந் தனக்கிணையில்லை யெ ன்னும் அகங்காரக் கடலுட்குளித்து, எழின்மடமாதர் பலரை மணந்து காமவாரியுட் டிளைத்துக் கிடந்தனன். அரசாட்சியை அமைச்சர்பால் வைத்துத் தான் அந வரதமும் அகங்கனிந்தணங்கனார் போகமே சதமென நம்பி வாழ்ந்திருந்தனன். மங்கைமாரின்பமே விரும்பி உலகு காவலை மறந்து நின்றமையால் நிலமங்கை அவ னோடே அவனைவிட்டு நீங்கும் சமயம் பார்த்திருந்த னள். அங்ஙன மிருக்குங்கால் ஒருநாள் அறிவிற் சிறந்த சதவிந்து அவனையணுகிப் பின்வரும் உறுதி கூறுவானாயினன்.

" அரசர்க்கரசே! மண்ணுலக முதலிய எல்லா வுலக

முந் தொழப் பகையிருள்கடந்து வாகைசூடி ஏகசக்கி ரேசுவரனாய் வாழ்கின்றனை. இனிக் காமக் குரோத லோப மோக மத மாற்சரிய மென்னும் ஆறுவகை யுட் பகையைக்கடந்த பின்னரன்றோ நீ யாவரினுஞ் சிறந்து விளங்குவாய். அங்ஙனம் உட்பகைவென்ற மன்னரைப் பின்னர் வெல்லும் பகையிலதாம். அவர் அரசாளும் நாட்டில் நானிலவளமுங் குறைவின்றிச் செழிக்கப் பொன்மழை பொழியாநிற்கும். அறுபகையடாது அநீதி மேற்கொண்டொழுகும் மன்னனைவிட்டு நில மகள் நீங்குறுவாள். அறிவாகிய பரிதியினொளியான் அழகுதிகழ மலர்ந்த செல்வமாகிய செந்தாமரை அக ங்காரமென்னும் பனித்துளி சிறிது மேல்விழினும் தன் னெழில் குலைந்து கருகி வாடிப்பழியுமே. ஒருவன் செல்வச் செருக்கால் காமக்கடலுளாழ்ந்து மயக்க மடையும்பொழுது அறுபகையடாது உயர்நிலை தவறி வீழ்ந்து கெட்ட மன்னர் பலரையும் நினைக்க அம்மயக் கம் தொலையும் என்று நீதிநூல்கள் முறையிடுகின்றன. யான் ஈண்டு எடுத்துக்கூறிய தருமமார்க்க மனைத்தும் நன்கு உணர்ந்த நினக்கு யான் அதிகமாகக் கூறுதல் குற்றமாதலின் நீ என்மீது கோபங்கொள்ளினும் அடி யேன் இடித்துக் கூறும் கடப்பாடுடையேனாகையால் நான் சொல்லும் உறுதிமொழியைச் சிறிது செவிசாய் த்துக் கேட்டருள்வாயாக'' என்று நிமித்திகனாகிய சத விந்து சொல்ல அச்சுவகண்டன் அதனைக்கேட்க வொ ருப்பட்டுக் கூறுதியென்று ஆஜ்ஞாபித்தனன். சதவிந்து மேலுங் கூறத் தொடங்கினான்.

"சக்கிரவர்த்தியே! பூமியிற் பலவளம் பழுகிய போ

தனமாநகர மென்றோர் நகரமுண்டு. அந்நகராளும் பயாபதி மன்னனுக்கு விஜயன் திவிட்டன் எனப் பெயரிய இருகுமாரர்களுளர். அவருள் இளையவனாகிய திவிட்ட குமாரன் உனக்கு வெலற்கரும் பகைவனாயமர்வான் என்பதைச் சோதிட நூல் வன்மையால் யானுணர்ந்தேன். அறிந்தபின்னர் உனக்கு அவனாலுண்டாகும் கேட்டினுக்கு மனமிரங்கி உன்னை நல்வழிப்படுத்தி முன்னறிவு கொளுத்தக் கருதியே ஈண்டிப்பொழுது வந்தேன். இனி மேனடப்பவைகட்கேற்றவைகளை அமைச்சருடன் நீர்க்காலோசனை செய்து ஏது செய்யத்தக்கதோ அதனைப்புரிக" என்று விளங்கக் கூறினான். இம்மொழி கேட்டலும் அச்சுவகண்டனுக்கு அளவிடப்படாத கோபமூண்டது. இருகண்ணினும் கோபாக்கினி சொலிக்கக் கைபொடுகை புடைத்துப் பற்களை நெறுநெறெனக் கடித்து நகைத்து நச்சரவம்போற் சீறிப் பேசுவானாயினன். "நிமித்திக! நன்று நன்று, வித்தியாதரவரசர் பலரையும் வென்று வாகை சூடிய வென்னை எதிர்க்க நினைப்பவருமுளரோ? சிறிய ஆலவட்டத்தினாலெழூஉம் மெல்லிய காற்றால் மேருமால் வரை அசையுமோ? அற்ப மானுடப் பதர்களோ என்னைப் பகைத்தெதிர்க்கு மாற்றலுடையார்? அட்டகுல வெற்பினையும் பிளக்கும் வன்மையுடைய மதயானையின் கொம்புகள் வாழைத்தண்டினால் மழுங்குமோ? என்னுடைய புஜபல பராக்கிரமங்களை மானுடரோ கடப்பவர்? பிரளயகாலப் பிரசண்டமாருதம் வீசியடிக்கும் பொழுது மேகசாலம் சிதறாதிருக்குமோ? நிகரற்ற எனது கோபாவேசத்தின் முன் யாவரே நிலைத்து நிற்

பார்? இந்திரன் ஏவலால் அவனது வச்சிராயுதம் மலைகளையழித்துப் பொடிபடுத்துவதுபோல, என் ஆணையால் எனது சக்கிராயுதம் பகைவரைத் துகள்படுத்துமென்பதை நீ யறியாயோ? நீ கூறியதைக் ஆராயின் நினது சோதிடநூல் பொய்யே எனத் தோற்றுகின்றது. ஆயினும் அமைச்சருரையை அரசன் கேட்டானல்லன் என்னும் பழிமொழி யொன்றையுமே அஞ்சுகின்றேன். உலகமுழுவதும் ஒருங்குசேர உருத்து எதிர்ப்பினும் அஞ்சகில்லேன். ஆகலின் நீயே மந்திரிகளிடம் இதனைப்பேசி ஆலோசித்துத் தக்கவாறுசெய்க'' என்று கூறி விடைகொடுத்து அனுப்பினான். சென்று நிமித்திகனால் விவரமுணர்ந்த அமைச்சர்கள் யாவரும் ஒருங்கு சேர்ந்து பின்வருமாறு ஆலோசிப்பாராயினர்.

"எரியும் அக்கினிப்பொறி எள்ளளவு சிறிதாயினும் தனக்கு ஆதாரமுண்டாய்க் கன்றுமேல் உலகமுழுவதும் சுட்டு நீறாக்கும். அதுபோற் பகை சிறிதாயினும் காலமும் இடமும் வாய்த்தாற் வலியாரையும் வெல்லும்.

"இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து."

ஆதலின் இப்பகையும் முற்றினால் நம்மை வெல்லும். அதனை இப்போதே தொலைத்தல் வேண்டும்'' என்று தீர்மானித்தனர். அப்பொழுது அவர் தம்முட் டலைவனாகிய அரிமஞ்சு என்னும் முதன்மந்திரி அரசனை நோக்கி, "மன்னனே! இவர்கள் கூறியயாவும் உண்மையே யெனினும், யாம் அங்ஙனம் பகையை அழித்தற்குமுன் செய்யற் பாலனவாகிய செயல்களும் சிலவுள. சதவிந்து

கூறிய அம்மாநுடர் நமக்குப் பகைவர்தாமோ அல்ல ரோ என்பதை முதலில் அறியவேண்டும். இதனை யாலோசியாது நண்பரைப் பகைவரெனக் கருதுதலும் பகைவரை நட்பினரெனத் தேறலும் பின்னர் மிகப் பெரியதோர் தீங்கினை விளைக்கும்.

"பகைய லாதவ ரைப்பகை யாக்கலும்
நகையி ரீமனத் தாரைநண் பெண்ணலும்
முகையின் வேய்ந்தமென் மொய்ம்மலர்க்
கண்ணியாய்
மிகையின் மற்றவை பின்னை வெதுப்புமே."

ஆதலால் அவர்களை யித்தன்மையரென்று அறிதற்கு வழியாதெனில், யாம் இப்பொழுது சுரமை நாட்டதிப னாகிய பயாபதி மன்னன்பாற் சிலரை ஏவித் திறை கேட் கச்செய்வோம். அவன் நமது தூதரை மதித்துத் திறைகொடுப்பானாயின் அவன் பகைவனல்லன்; இன்றி மறுப்பானெனின் அவனைப் பகைவனாகக் கொண்டு எதிர்த்து அழித்துவிடுவோம். இதுவே செயற்பால தொன்று" என்று கூறினன்.

அச்சுவகண்டனும் அவன் கூறிய சொற்களைக் கேட்டுச் செவ்வரக்கூட்டிய கைக்கோலையுடையராய்ப் பரதசாஸ் திரங்களுணர்ந்த வித்தியாதரர் நால்வரை அழைத்துப் பயாபதி மன்னன்பாற் றிறைவாங்கிவரத் திருமுகமும் பொறித்துக் கொடுத்துத் தூதனுப்பினான். அவர்களும் அரசன் ஆணையினையும் திருமுகத்தையும் தலைமேற் றாங்கி உத்தரசேடியினின்றும் நீங்கி, மதில் மாட கூட கோபுர முதலியவற்றால் அணிபெற விளங்கும் போதன மாநகரஞ் சென்று சேர்ந்தனர். நகரினுட்புகுந்து

வீதியிற் செல்வோர் நவமணியிழைத்த மாளிகைகளி னொளியாற் றமது கண்கூசி வழிச்செல்வது அரிதாயின தைக்கண்டு வியப்புற்று வித்தியாதரருடைய செல்வ மும் ஒரு செல்வமோ என்று வெறுப்புற்றேகினர். அந் நகரிலுள்ள மங்கையரும் மைந்தரும் தம்முள் ஊடி நீத்த மேகலையின் மணிகளும் முத்து மாலைகளும் வீதிகளில் நிறைந்துகிடத்தலின் கால் வைத்தேகவு மரியதாய் இடர் ப்பட்டுச்சென்று, அவ்விஞ்ஞையர்கள் பயாபதி அரச னுடைய மாளிகையை யடைந்து வாயிலிற் சுந்தியுங் கையுமாகக் காவல்புரிந்து நிற்கும் காவலாளியைக்கண்டு, "கடைகாப்போய்! உத்தரசேடியிலிருந்து வித்தியாதர மன்னன் விடுத்த தூதர் சிலர்வந்துளா ரென்று உடனே உன் அரசனுக்கு அறிவிப்பாயாக" என்று சொல்லி னார்கள். வாயில் காப்போன் உடனே தன் அரசனை யடைந்து இன்னணம் விஞ்சையர் வந்துளதை யறிவிக்க அவனும் அவர்களை விரைவில் உள்ளேவிடுக்க ஆணை யிட்டனன். வாயிலோன் அனுமதியால் உட்புகுந்த விஞ்சையர் நால்வரும் பயாபதி அரசன் முன்வந்து வணங்கித் தமது மன்னன் அச்சுவகண்டன் வரைந்து கொடுத்தனுப்பிய திருமுகத்தினை அவன் கையிற் கொ டுத்தனர். அத்திருமுகத்தை அரசன் வாங்கி யொரு லேககன் கையிற் கொடுத்து வாசிக்க ஆஜ்ஞாபித்தனன். அவன் வாசித்தவுடனே அச்சுவகண்டன் தூதுவராய் வந்த நால்வரும் அத்திருமுகத்தில் கூறியபடித் தாமும் தமது வாயினால், "ஆயிரங்கோடி பொற்காசும், அழகு டைய நாடகக்கணிகை நங்கையர் ஆயிரவரும், முத்துப் பவளம் முதலிய மணிக்குவால்களும், உயர்ந்த பீதாம்

பரமாகிய ஆடைப்பொதிகளும், யானைத்தந்தங்களும், சாமரைகளும், இன்னும் ஈண்டுள்ள பலநூதனமான பொருள்களும் எமது அரசனுக்குக் காணிக்கையாகக் கொடுத்தனுப்புக. இஃதெங்கள் உரையன்று, யாவரினுஞ் சிறந்த சக்கிரவர்த்தியான அச்சுவகண்ட மகாராஜன் கட்டளை" என்றார்கள்.

இங்ஙனம் பேசிய விஞ்சையர் மொழியினைக் கேட்ட பயாபதி அரசன், அயலானொருவன் எறிந்த கல்லைக் கடைவாய்க்குள் அடக்கி வைத்துக்கொள்ளும் களிற்றினைப்போல, எழுந்த கோபத்தைத் தன் மனத்திடை யடக்கிப் பின்வருமாறு சிந்திக்கலாயினன். நல்லறிவும் உயர்குலமும் சிறந்த அழகும் கரைகண்ட கல்வியும் பெருமிதத் தோற்றமும் அளவற்ற ஆற்றலும் ஒருவன் பெற்றானெனினும் மற்றொருவர்க்குக் குற்றேவல் புரிந்து வாழுமாறு, அவன் வினைப்பயனால், இறைவன் அமைத்தருள்வான். அதுவேயுமன்றி, தம் மதிவல்லபத்தின் சூழ்ச்சியாற் பலவித முயற்சிசெய்து ஈட்டிய செல்வத்தினைத் தாமே அநுபவிப்போமென்றிருக்குமளவில் அதனைப் பறித்து மற்றவர் கைப்பட நீட்டியளிக்கும் விதியினை எம்போலியர் விலக்கற்பாலரோ? புகழினும் வலிமையாலும் மிக்க வேற்றரசன் மனமுவக்கச் செய்வனசெய்து உயிர்வாழக் கருதும் சிற்றரசருள் அற்பனாகிய என்னினும் ஏழை உலகிலுண்டோ? எனது அறிவின் பெருமையை எவரே கண்டிகழார்? பண்டை வினைப்பயன் இங்ஙனம் என்னை யிருத்துமாயின் யான் வேறுகருதி யாது பயன்? இவ்வச்சுவகண்டற்கு எனது முன்னோரும் திறைகொடுத்தே வந்

தனை ரென்பதையுங் கேள்வியுற்றுள்ளேன். என் முன்னோராலும் விலக்கப்படாத அவன் ஆணையை யானோ கடக்கவல்லேன். அவனோ அளவிடப்படாத பேராற்றலுடையானென்று பலரும் கூறக் கேட்டுளேன். ஆதலால் அவன் நோக்கம்போலத் திறையளித்து அவன்பால் நட்புப்பூணுவதே தக்கதொன்றாகும், என்று தன் மனத்திடை ஆராய்ந்து, எதிரில் நிற்கும் விஞ்சையரை நோக்கி, "தூதர்களே! நிருபத்திற் கண்டபடி வேண்டியபொருள்கள் பலவற்றையும் அளிக்கின்றேம். நீவிர் அவற்றையும் யாம்கூறும் இன்மொழிகளையும் பெற்றுச் சென்று நுமது இறைவன்பாற் கொடுங்கள்" என்று சொன்னான். பிறகு, இதனைத் தன் புதல்வர்களாகிய காளைகளுணர்வாராயின் கோபமிக்கு இச்செயற்குத் தடைபுரிவாரென்று நினைத்து, இவ்விஞ்சையரை அவர்கள் அறியுமுன் அனுப்பி விடுதலே யுக்தமென்று தீர்மானித்து, அச்சுவகண்டன் எழுதிய நிருபத்திற் கண்டபடி பேரழகு மிக்கவராய நடனமாதர் ஓராயிரவரையும் ஆயிரங்கோடி பொற்காசுப் பொதிகளையும் நவமணிக் குவால்களையும் அகில் யானைக்கோடு சாமரை யாதிய சிறந்த பொருள்களையும் இன்னும் பல விலையுயர்ந்த ஆடையாபரணங்களையும் அச்சுவகண்டன் மனங்களிக்கும் வண்ணம் அளித்து அவன் தூதுவராய்வந்த விஞ்சையர் மனமகிழப் பலசிறப்புஞ்செய்து மீண்டு செல்லுமாறு விரைவின் விடையளித்து விடுத்தான். விஞ்சையர்கள் தாம்பெற்ற பொருள்களையும் மங்கையரையும் தம்முடன் கொணர்ந்த விமானத்தில் ஏற்றித் திரையிட்டு மறைக்கப்போகும் சமயத்தில் அரசகுமாராகிய விசய

திவிட்டரிருவரும் அதனைக் கண்டனர். உடனே இளைஞனாகிய திவிட்டன் ஆண்டு நின்றவர்களை நோக்கி, "இன்னோர் யாவர்? இப்பொருள்களையும் இம்மங்கையரையும் இவர்களுக்கு யாவரளித்தனர்? இங்கு நிகழ்ந்தது என்ன?" என்று வினவ, அதற்கு ஆங்கு நின்றார் யாவரும் என்னிகழுமோ என்ற அச்சத்தால் விடை யாதும் பகராதிருந்தனர். அப்பொழுது அவ்விடத்து அச்சுறுத்தும் பூதம்போல நின்ற குறத்தியொருத்தி, "ஐயனே! உத்தரசேடியை யாளும் சக்கிரவர்த்தி அச்சுவகண்டன், எண்டிசையும் புகழ் பரவத் தன்னாணைநடாத்தி வருபவன், இன்று நுந்தைபாற் சில விஞ்சையரை அனுப்பி திறைவாங்கிவர ஏவினான். அவர்களே இவ்விஞ்சையர்கள்; நமது அரசன் அச்சுவகண்டன் மனமுவப்பக் கொடுத்த திறைப் பொருள்களே இம்மங்கையரும் இந்நிதிக்குவைகளும். இதுவே ஈண்டு நிகழ்ந்த சம்பவம்" என்று பணிந்து கூறினாள்.

திறை யென்ற சொல்லைக் கேட்டபொழுதே திவிட்டகுமாரனுக்கு அளவிடப்படாத கோபம் மூண்டது. இரத்தின கிரீடமணிந்த தலையிலிருந்து முத்துக்களுதிர்ந்ததென்ன அவன் நெற்றியில் வியர்வைத் துளிகள் திகழ்ந்தன; கண்கள் சிவந்தனவாய் நீர் சொரிந்தன. படத்திடைவிளங்கும் ஜீவரத்தினததின்மேல் அடிபட்ட ஸர்ப்பம்போலச் சீறிக் கண்களினின்றும் நாற்புறமும் தீப்பொறி சிதறக் கோப நகை நகைத்து, "என்னே, எம்மரச வாழ்க்கை! உலகத்தில் உழவுத்தொழில் செய்து பலரையும் பணிந்து வயிறு வளர்க்கும் சிலரைப்போல யாமும் வேறொருவருக்கு அடிமைபூண்டு அவர்கேட்ட

கப்பங்கொடுத்து உயிர்ச்சுமை சுமந்து வாழும் வாழ்க்கை நன்று நன்று. ஓ மயக்கத்தை யுடைய விஞ்சையர்களே, யாங்கள் திறை கொடுத்தாற் பிழைக்கோம் இல்லாவிடி லழிவோம் என்பது தெளிவாய்விடின் எமது தோள்வலியானும் தாள்வலியானும் வாள் வேல் முதலிய படைக்கலங்களைச் சுமத்தலானும் யாது பயன்? உங்கள் அரசன், கடுவிடங் கக்குந் திட்டிவிட மென்னும் அழகநாகத்தின் படநடுவிலங்கும் மணியினைக் கைக்கொளக் கருதும் பேதைபோல எம்பாற்றிறை வாங்க நும்மை யனுப்பினான்; அவனினும் மடமையாளர் உலகிலிலர். மிக்க பொருளின்மேல் நும்மரசன் விருப்பினனாகில், இனி இவ்விதம் செருக்கினாற் பலரையு மச்சுறுத் திப் பொருள் கவர்தல் அரிதினுமரிதாம். வலிமை குன்றிய முன்னோரிடத்து, அவர்களை ஆஜ்ஞாசக்கிரத்தால் வெருட்டித் திறைவாங்கியதுபோல எம்மையும் அச்சுறுத்திக் கப்பம் வாங்க மதியாமல், உயிர்வாழக்கருதின் நல்வழியறிந்து உய்யக்கடவீர். இன்றேல் அவன் மலைமேல் உட்கார்ந்திருப்பதால் யாது பயன்? ஈண்டு அவனே எம்மெதிரில் வந்து வேண்டியவற்றைக் கொள்வானாக. யாம் அவன் நெஞ்சார அளவற்ற அம்புகளையும் வீரசொர்க்கத்தினையும் தருவோம். மானிடரைப் போல வேறுவிதமாகப் பயனில்மொழி பகர்ந்ததென்னை? விஞ்சையர்களே! நீங்கள் உமதரசன்பாற் சென்று யாங்கள் கப்பம் கொடாமல் மறுத்து விட்டோமென்றும், அங்ஙனம் கொடாதவர்க்கியற்றும் தண்டத்தை நும்மரசன் எம்பாற் புரிய வல்லனாயின் சிறிதும் தாமதமின்றிச் செய்ய யாம் கூறியதாகவும் அவ

னுக்குக் கூறுவீராக. திறையாகக் கொண்டவை யாவற்றையும் விடுத்து இவண்நின்று உடனே யேகுங்கள்" என்று கோபாவேசத்துடன் கூறினான். இதனைக் கேட்ட விஞ்சையதூதர்கள் நடுங்கி நமது அரசனுக்கு இப்பகை மிக்க வலியதாய் மூண்டுவிட்டது என்று நினைத்து கப்பப் பொருள் யாவற்றையும் விடுத்து வந்தவழியே வாளா வேகினர். நிதிக்குவைகள் யாவும் பயாபதி மன்னன் பொக்கிஷஞ் சேர்ந்தன; நடன மங்கையராயி ரவரும் அரையன் அந்தப்புரஞ் சார்ந்தனர். பயாபதி மன்னன் இவற்றைக் கண்டு மேல் யாது விளையுமோ என்று ஏங்கிக் கவலுற்றிருந்தனன். விஜயனும் திவிட்டனும் ஒரு கவலையுமின்றித் தந்தொழின் மேற் சென்றனர்.

ஈதிங்ஙனமாக, சென்ற விஞ்சையர்கள் அச்சுவகண்டனிடஞ்சென்று நடந்த விருத்தாந்தங்களைக்கூற அஞ்சி, அமயத்திற்குத் தக்கவாறு ஆராய்ந்தறியும் விற்பன விவேகியாகிய அரிமஞ்சுவைச் சார்ந்து, தாங்கள் பயாபதி மன்னனுழைச் சென்று திறை கேட்டதும் அவன் பணிவுடன் கேட்ட யாவற்றையு மளித்ததும் அவற்றுடன் விமானத்திவரும் போழ்து திவிட்டநம்பி தடுத்துச்சினந்து கடுமொழிகூறித் துரத்தி விட்டதையும் முதலான யாவற்றையும் தெளிவாய் எடுத்துரைத்தார்கள். இதனைக்கேட்ட அறிஞருட் சிறந்த அரிமஞ்சு, இவ்விவரத்தை நமதரசன் அறியின் ஆற்றெணுக் கோபங் கொள்வான். இப்பகையினை வெல்லு மாற்றினை யாமே யாராய்வோ மென்று ஆலோசித்துத்

திவிட்டராஜன் மிகவும் இளைஞனாதலின் நன்று தீது ணர வல்லனல்லன். அவன் ஆலோசியாமற் கடிந்து பேசினான். மாயையொன்றா லவனை மலைக்குகையிலுள்ள கோளரி யொன்றிற்கு இரையாக்குவன் என்று தீர்மானித்து, மாயவித்தையில்வல்ல அரிகேது வெனப் பெயரிய வித்தியாதர னொருவனை யழைத்து, நடந்த சம்பவங்கள் எல்லாவற்றையு மெடுத்துக்கூறி, அவனை யொரு மாயச்சீய வடிவங்கொள்ளுமா றேவி மேற் செய்ய வேண்டுவனவற்றையும் அவனுக்கு உளங்கொள உணர்த்தி விடுத்தனன். அமைச்சன் ஆணையை யேற்ற அரிகேது, ஒளிவீசும் அனற் பிழம்பினை யொழுங்கு படுத்தின லன்ன உளையினையும், மலைகளையும் கிழித்துப் பிளக்கும் வலிய நகங்களையும் பிறைச் சந்திரன் போல வளைவுடனொளிரும் வக்கிரதந்தங்களும் அனற்பொறி சிதறு மிருகண்களும் கோடையிடிபோல வதிரும் பேழ்வாயினையுமுடையதாய் வடவைக்கனலே யோ ரரிமாவி னுருத்தாங்கிய தென்னச் சிங்கவுருக் கொண்டு இமாசலத்தைக் கடந்து சிந்துநதி பாயும் சுரமை நாடடைந்து மண்ணுடன் விண்ணும் மயங்க அட்டகுல பர்வதங்களு முடைப்பட்டுத் தகர எழ்கடலும் கரைபுரண்டு அலைவீசிக் கலங்கத் தன் பெருங் குரலெடுத் தார்ப்பரித்தனன். அவ்வாரவாரத்தின் அதிர்ச்சியால் ஆண்டுள்ள காடுகள் யாவும் பொடியாயின. மிருகங்கள் பலவும் அறிவழிந்து சோர்ந்தன. களிறுடன் பிடிகள் கையெடுத்து மெய்கலங்கிப் பிளிறின; நெருங்கிய பாறைகள் புடைக்கப்பெற்ற பதர்போலப் பறந்தன. இப் பேரொலியைச் செவியிற்கேட்ட மாறு

டர்கள் இடியோசை கேட்ட அரவென மயங்கிப் பற்கடித்துச் சோர்ந்து வீழ்ந்தனர்.

பின்னர் அரிமஞ்சு, முன்னம் தூது சென்ற விஞ்சையர் நால்வரையும் அழைத்து மீளவும் போதனம் போய்த் திவிட்டனிடம் கோளரியின் செய்தியைக் கூறிவர விடுத்தனன். அவர்கள் ககன மார்க்கம் சென்று சுரமை நாட்டிற் போதனமா நகரத்தைச் சேர்ந்து, நால்வகைப்படையும் புடைசூழப் பவனிவரும் விசயதிவிட்ட ரிருவரையுங்கண்டு அடிபணிந்து திவிட்டனை நோக்கி, "அரசகுமார! எம்மரசற்கு நுந்தை திறை தந்ததும் அவற்றை நீர் தடுத்துக் கடுமொழி கூறியதும் முதலியவற்றை யாம் எமது மன்னற்குணர்த்தினேம். அவன் கோபாவேசத்தனாய் நகைத்து உருத்தெழுந்தனன். அவ்வளவில், யாங்கள் அங்ஙனஞ்செய்த அரசிளங்குமரன் மிக இளைஞனாதலின் பிள்ளைமைத் தொழிலானறியாது செய்தனனென் றுரைத்தமையால், அவன் தனது பெருமையையும் ஆற்றலையும் ஆணையையும் மதித்துத் தான் ஒரு சிறுவனுடன் உடலுதல் தக்கதன்றெனக்கருதிக் கருத்திற்கொண்ட கதத்தினைவிடுத்து எம்மை நோக்கி, நீவிர் மீட்டும் போதனத்துச்சென்று நமக்குத் தந்த திறையைத் தடுத்துப் பறித்துச்சென்ற மைந்தனைக் கண்டு, அவனிடம் 'உனது நாட்டை யழிக்கும்படி ஒரு சிங்கத்தினை விடுத்துள்ளேம், நீ வலியனாகில் அதனை யடர்த்துக் கொன்று வென்றி கொள்க' என்று கூறிவரும்படி எம்மை விடுத்தருளினன். இதனை நீர் நன்கறிவீராக" என்று கூறினார்கள்.

திவிட்ட குமாரற்கு இதனைக் கேட்டவுடன் வெகுளி

மீதெழ இருபுயங்களையும் கொட்டி ஆர்த்து ஆண்டு நிற்கும் உழையரை நோக்கி, "ஈண்டு என்முன் நின்று இவர்கள் கூறியாங்கு, நமது நாட்டிற்கோளரி யொன்று புகுந்து குலைவுறுகின்றதோ, கூறுமின்" என்றனன். அப்பொழுது ஆண்டிருந்தோருட் சிலர், "ஐயனே! நமது சிந்து நாட்டில் மீளலாமெய்ம்பு படைத்த வாளரி யொன்று புகுந்து பல்லுயிரையுங் கொன்று குவித்துக் கூற்றெனத் திரிதராநின்றது. அதனையடக்க யாவரும் ஆற்றலிலர்; கொண்டலுமஞ்சக் குமுறு மச்சிங்கம் இமயமலைச் சிகரத்துள்ள பெருமுழையொன்றி லுறைந்து கின்றது. அதன் வக்கிரதந்தங்களினொளியால் அக் குகையிற் குடிகொண்ட இருளுந் தொலைந்து விளங்குறுகின்றது" என்று கூறினார்கள். திவிட்ட குமாரன் உடனே விஞ்சையரை நோக்கி, 'யான் எனது கரங்களையே படைக்கலங்களாகக் கொண்டு அக்கோளரியைய வாய்பிளந்து கிழித்தெறிவேன், அங்ஙனம் செய்யாவிடில் நும்மரசன் பேசியேசிய பேய்மகனே யாகுக' என்று சூளுரைத்துத் தன்னுடன்வர அமர்ந்துநின்ற நால்வகைப் படையையும் வரவொட்டாது கைவிதிர்த்து விலக்கித் தானே தனியனாய் மலைச்சாரலை நோக்கி விரைந்தேகினான். தம்பி ஒன்றியாய்ச் செல்வதை யுணர்ந்த சங்கவண்ணன் அவனைப் பின்தொடர்ந்து போயினான். கடனிறவண்ணனும் கலைமதி வண்ணனும், தந்தையின் றோண்மேலும் தாயின்மடித் தலத்தும் பட்டத்து யானையின்மேலும் மெல்லிய மலரணைமீதுமே யன்றி வறுநிலம் பட்டறியாத பாதங்களிற் பருக்கைக் கற்கள் உறுத்தி வருத்தப் பாதசாரியாய்ப்

படர்ந்து அவ்வரிமான் பயிலுறும் வெவ்விய மலைச் சாரலைச் சென்றடைந்தனர்.

அப்பொழுது அவர்களைக் கண்ட மாயச்சீயம் உலகம் யாவும் நடுங்க ஆர்ப்பரித்தது. திவிட்ட குமாரனும் அவ்வொலி கேட்டமாத்திரத்தில் தானும் உரத்து உங்காரத்துடன் சிங்கநாதஞ் செய்தனன். இப் பேரொலியாற் சராசரப்பொருள்கள் யாவும் நிலைகுலைந்து தடுமாறின; தேவர்களும் பிரமாண்டம் வெடித்ததோ அன்றி இந்திரன் தனது வஜ்ராயுதத்தால் மேருவைத்தகர்த்துப் பொடிசெய்தனனோ என்று ஐயுற்றுக் கலங்கினார்கள். மாயச் சிங்கமாய் நின்ற அரிகேது உடல்பனிக்க ஓடினான். அதனைப் பின்றொடர்ந்து திவிட்டனும் காற்றினுங்கடுகி விரைந்து சென்றான். அப்பொழுது அவனுடைய கால்கள் பூமியிற் பாவினவோ இல்லையோ என்று இமையா நாட்டம் பெற்ற தேவரும் ஐயுற்றனர்; எண்டிசைகளும் சுழன்றன. மரங்கள் வேர்பறிந்து அவனைப் பின்பற்றுவனபோற் றொடர்ந்தன; மிருகங்கள் கையற்று மயங்கிச் சோர்ந்தன; ஆகாயத்திற் பறக்கும் புட்களும் அறிவுசோர்ந்து நிலத்தில் வீழ்ந்தன; மலைச்சிகரங்கள் அவன் கால் விரலின் நுனி பட்டவுடனே நொறுங்கிப் பொடியாயின; காட்டிலுள்ள வனதெய்வங்கள் இஃதோருற்பாதமென்று அஞ்சிக் கம்பித்து நாற்புறமும் சுழன்று ஓடின. அரிகேது, அப்பெருமலைச் சிகரத்திலுள்ள முழையொன்றிற் புகுந்தொளிந்தான். அதனைக்கண்ட திவிட்டன் அக்குகையின் வாயிலினின்று உலகமுழுவதுஞ் செவிடுபட்டிரப் போராரவாரஞ்செய்தான். அப்பொழுது அக்

குகையினுள் அயர்ந்து நித்திரைபுரியும் மிருகேந்திர னாகிய உண்மைச் சிங்கமொன்று குகைவாயிலினின்றும் வெளிவந்து திவிட்டனைக்கண்டு தனது கண்களினின் றும் தீப்பொறி பறக்கவான்றுகிர் நீட்டி ஆவென வாய் பிளந்து வாணிமிர்த்து அவன் மார்பகத் தைப்பிளந்து உதி ரத்தைப் பருகுவான் கருதிப் பாய்ந்தது. இதனைக் கண்ணுற்று நிற்கும் தேவர்களும் அஞ்சித் தமது கண் களைக் கரங்களாற் புதைத்து உடல் நடுங்கினர். சிறி தும் அஞ்சாத நெஞ்சினனா திவிட்டனோ தன்மேற் பா ய்ந்துவருஞ் சிங்கத்தின்மேற் றானு மேலெழுந்து எழும் பிப் பாய்ந்து அதன் பிடரிமயிரினை உலைத்து அத னைக் கீழேதள்ளி அதனது வலிந்த வாளெயிறிலங்கும் மேல்வாயினையும் கீழ்வாயினையும் இருகரங்களாலும் பற்றிக் கிழித்தெறிந்தான். அப்பெருவலிக் கோளரி உதிரங்கக்கி இருதுண்டங்களாக வீழ்ந்திறந்தது. ஆயிர மாயிரஞ் சிங்கங்களையு முயிர் கொலைத்திடும் பெரு வலிச் சீயமழிந்ததைக் கண்டு விண்ணவரும் வியந்து தம் வாயின்மேல் விரல்வைத்து மருட்சியோடு நின்று திவிட்டனைப் புகழ்ந்தனர். உரவோனாகிய திவிட்டன் தான் செயற்கரிய செய்ததாகச் சிறிதும் வியவானாய் அப்பொழுது அங்குவந்த தம்முனாகிய சங்கவண்ணனை வணங்கி, "ஐய, அடியேன் அச்சீயத்தினை மாயத்தொ லைத்தேன். இனியாம் போதனமாபுரம் போதுவோம் வம்மின்" என்றுரைசெய்தான். அதனைக்கேட்டு விச யன் மனங்களித்துத் தளிர்த்துத் தம்பியை மார்பாரப் புல்லி, "தம்பி, யாம் சிறிதுபோழ்து இம்மலையழகி னைக்கண்டு ஆண்டுத் தோன்றுஞ் சோலையிற்றங்கி இளை

ப்பாறிப் பின்னர் நம்மூர்க்குச் செல்லுதும்" என்று சொல்லினான்; திவிட்டனும் அதற்கு உளமகிழ்த் தொ ப்பினான். விசயன் வனத்தின் வனப்புக்களை யெல்லாந் தம்பிக்குப் பின்வருமாறு எடுத்துக் காட்டுவானாயினன்.

"தம்பி, இதோ புள்ளினங்களினொலி இடையறாது டைய சோலைகள் நாற்புறமுஞ்சூழ நடுவே நீர்நிலை போலத் திகழும் பளிக்குப் பாறையின் அழகினைக் கண் ணுறுவாய். அதோ கரியநிறத்தனவாய் எப்பொழுதும் இனிய நீர்த்துளிகளைச் சொரிந்துகொண்டு வெள்ளிய தந்தங்களி னொளியோடு மின்னிக் குமுறிப் பிளிறுவன மேகசாலங்களல்ல யானைக்கூட்டங்களே; அவற்றைக் கண்ணுறுவாய். இன்னும் அத்திசையிற் பார், வெள் ளிய கவரிமானின் கூட்டங்கள் தமது அழகிய கடனு மையின் விளர்த்த மயிர்ப்புச்சங்களை மேலுயர்த்தி அணியணியாய் அம்மலைச்சாரலி லேறும்போழ்து வெண்ணிற மேகங்கள் ஆண்டுப் படிந்தனபோல் விளங் கும் எழிலினைக்கண்டு உளமகிழ்வாய். இதோ அக் கரும் பாறையினிடையே கோளரி யொன்றினால் மத்த கம் பிளந்து மாய்ந்த மத்தமாவொன்று கிடப்பச் சுற்றி லும் அதன் தலையினின் றுதிர்ந்த முத்தங்கள் சிதறி வீழ்ந்திருப்பது அவ்வானையின் கோடொன்று புறங்கிட ந்து நீலவானத்திடைக் கொண்மூ வொருபுற மிருப்ப உடுக்குலத்திடையே யிலங்கும் இளம்பிறை யென்ன விளங்குதல்காண்டி. எக்காலத்தும் மாறாது முகிற்குல ங்கள் மூடிக்கிடப்பதான் இரவினையன்றிப் பகலினைக் கண்டறியாப் பருவரைச் சாரலில் மலையருவிகள் புர ண்டு ஓடி வருதலினால் எவரும் அவ்விடங்களிற் சஞ்சரி

யார்கள். அவ்விடங்களில் நீண்ட கருங்கற் றூண்கள் விழுந்து கிடப்பனபோல மலைப்பாம்புகள் பெரிய யானைகளைக் கவளங்களாக விழுங்கி யொருபுறம் அசைவின்றிக் கிடப்பனகாணாய். பல்லுயிரையும் வதைத்துத் திரியும் கொல்புலிகளும் கரடிகளும் மதயானைகளும் சிங்கங்களும் ஒருபுறம் கூட்டம் கூட்டமாய்த் திரிவன காணாய். இவையாவும் நம்மைத்தவிர ஏனையோரை வருத்தும் வலியுள்ளன. இவற்றால் நமக்கிடையூறு சிறிதுமின்று. மரகதப்பாறை யொன்றின்மீது வழிலம் பாலை மலரொன்று வண்டினமிரங்க வீழ்ந்துகிடப்பது தாமரையிலை பரவிய பொய்கையிற் றேனினமிசைபாட மலர்ந்த வெண்டாமரை விளங்குதலை நினைப்பூட்டுவதைக் காணுதி. நீரரமகளிரும் சூரரமகளிரும் அமரரும் விஞ்சையரும் கின்னரரும் விளையாடும் இடங்கள் பலவும் இவையே. ஈதோ வண்டினாற் றுளைக்கப்பட்ட மூங்கிலொன்று வாயுவினியக்கத்தால் வேய்ங்குழலினிசையினைப் பரப்ப அதனடியிலுள்ள மாமணிக்கப்பாறை யொன்றின்மீது பச்சைமாமயிலொன்று தன் கலாபம் விரித்துத் தேனினம்பாட மேகங்கள் முழவிற்குமுற ஆடும் பரதநாட்டியத்தைக் கண்டு மகிழ்வாய்.'' என்றின்னோ ரன்னவற்றை எடுத்துக் கூறிக்கொண்டே வன விநோதங்களைப் பார்த்து மகிழ்ந்து, இருவரும் அம்மலையை நீங்கித் தமது நகர்நோக்கிப் புறப்பட்டனர். வரும்வழியில் விசயன் தம்பியைப் பார்த்து, " திவிட்டநம்பியே ! உலகில்வாழும் சீவராசிகளுக்குண்டாகும் துன்பங்களை நீக்குதலே மன்னர் மேற்கொண்ட கடமையாகும். கற்றவர் நீத்தோர் தவத்தினர் அந்தணராதியோர்க் கொரு துன்பம் சம்ப

வித்தால் அதனை மாற்ருது போற்றும் மன்னன் பெற்ற வுடம்பினுல் யாதுபயன்? மன்னுயிர்கள் படும் வருத்தத்தினைக் கண்டும் தாம் வாழ்வதையே கருதும் மன்னர்தம் பேராண்மை அலிபெற்ற அழகுபோலப் பயனின்றிக் கொன்னே கழியும். நமது நாட்டிற்குப் பேரிடுக்கண் புரிந்து தொலைபாயின்று திரிந்த கோளரியைத் தொலைத்துக்காத்த நின்னைப்போலத் தனக்குறும் இடையூற்றினைப் பொருட்படுத்தாது பிறர் துன்பங்கண்டிரங்கிக் காக்குநர்தம் புகழன்ரே இந்நிலமிசை யென்று நின்று நிலவுறும். மன்னனுக்குக் கூறிய யாக்கை இரண்டு உண்டு; அவற்றுள் ஒன்று சப்ததாதுக்களிஞற் கட்டப்பட்ட இத்தூலசரீரம்; மற்ரென்று புகழுடம்பு; முற்கூறியது வினைப்பயனுல் வந்து மாய்வது; பின்னது இவன் செய்யும் நல்வினையாலுண்டாகிச் சிறந்து என்றும் அழியாவியல்பினை யுடையது.'' என்றிவைபோன்ற பல நீதிகளையும் எடுத்துக் கூறிக்கொண்டே சென்றனன். இவ்வாறு இருவரும் சூரியன் அஸ்தமனமாகுமளவில் போதனமா நகரத்தை யடைந்தனர். மந்திரிகள் சதுரங்கசேனையோடு அரசகுமாரர்களை யெதிர்கொண்டு வணங்கி வாழ்த்திக் கச்சை யானையின் பிடர்த்தலை யேற்றி நகர்வலஞ் செய்வித்தனர். அந்நகரிலுள்ள மாதர் பலரும் அம்மைந்தர்க்கு வாழ்த்துக் கூறி ஆலத்தியோடயினிநீர்சுழற்றி மங்கலம் பாடினர் விசய திவிட்ட ரிருவரும் இன்னணம் நகருலாப்போந்து கோயிலின் வாய்தலை நெருங்கியவளவில், பயாபதி மன்னன் தன் புதல்வர்களை உள்ளே அழைத்துவரக் கட்டளையிட்டனன். இவர்களும் பிதாவின் அநுமதியின்

றித் தனிமையாய்ச் சிங்கவேட்டைக்குச் சென்றமை யால் தம்மேல் யாதாகுற்றம் விளையுமோ என்று மிகவும் அச்சமுற்றவராய் அரசன் திருமுன்னர்ச் சார்ந்து அடிபணிந்து ஒருபுறமொதுங்கி வாய்புதைத்து நின்ற னர். அரசன் வணங்கிய புதல்வர்களை மார்புறத்தழுவி உச்சி மோருமளவில் அவர்தம் குஞ்சியில் வனமலர்க் குப்பைகள் செறிந்துகிடத்தலை நோக்கி, "மைந்தர் களே! நுமது சிகையிலே புழுதி செறிந்ததென்ன?" என்று வினவ, மூத்தநம்பி விசயன் சொல்லலாயினான். "பிதாவே! இமயமலைச் சாரலிலிருந்து வலிமிக்க கோ ளரியொன்று நமது நாட்டிற்புகுந்து பல்லுயிரையுங் கொன்று பாழ்படுத்தியது. இதனை அச்சமுடன் தமராயினார் சிலர் வந்து அறிவிக்கத் தம்பி திவிட்ட குமாரன் இமயமலைச் சாரலடைந்து அச்சீயத்தினை வாய்பிளந்து மாய வதைத்தான். இவனோடு அடியே னும் காவலாய் ஆண்டுச் சென்றேன். பின்னர் மலை வேடிக்கைகண்டு மாலைபடுமுன்னர் நகரமடைந்தோம் வனஞ்சென்று மீண்டமையாற் றூளிசெறிந்தன எம் குஞ்சி. அநுமதியின்றிச் செய்தமைக்குப் பொறுத் தருள்புரிவீராக" என்று மீளவும் அடிபணிந்தனன். மன்னன் மனத்திலடங்கா மகிழ்ச்சியடைந்து மைந்தர் களைப் பன்முறை மார்பிறுகப் புல்லி அவரைத் தம் மாளிகைக்கேகி யுணவுகொண்டு பள்ளிகொள்ள ஆஞ்ஞா பித்தனன். அவர்களும் இன்னமுதனைய போனகமு ண்டு தந்தமக்குரிய சயனக் கிருகங்களையடைந்து ஆண் டுப் புதுமலர் பரப்பிய ஐயணைத் தவிசின்மீது அமல னைத்தொழுது பள்ளிகொண்டு கண்வளர்வாராயினார்.

## அத்தியாயம் 6

செங்கண்மாலின் திருவவதார புருஷனாகிய திவிட்ட ராஜகுமாரன் சீயத்தினை வாய்பிளந்து பின்னர்த் தம் முனாகிய சங்கவண்ணனோடு போதனமாநகரம் மீண்ட வரலாற்றினைக் கூறினோம்; இனி இலக்குமிதேவியின் அம்சமாகிய சுயம்பிரபையின் தாதை சுவலனசடியின் விருத்தாந்தத்தினைக் கூறுவாம். திவிட்டன் கோளரியை மாளக்கிழித்த அற்புதத்தினை மறைந்து நின்று கண்ட தூதுவன் விரைந்துபோந்து சடியாசனை வணங்கித் தான் போதனத்துச் சென்று மறைந்திருந்ததும், அச் சுவகண்டன் தூதர்கள் திவிட்டனிடங் கோளரியைப் பற்றிக் கூறியதும், அவன் வெகுண்டு தனியனாய் இம வரைச்சாரலடைந்து அம்மடங்கலைக் கொன்றதும், முத லாகிய எல்லாவற்றையும் இனிது எடுத்துரைத்தனன். இவன் வாய்மொழியைக் கேட்ட சடியரசன் பெரு மகிழ்வடைந்து தன் மடமகளைத் திவிட்டனுக்கு விவா ஹம் செய்விப்பக்கருதித் தனது மந்திரிமார்களோடு ஆலோசித்து மணவினைத் தொழிலின் மூண்டனன். திருமணத்தை மண்ணுலகிற் முன் சென்று போதனமா புரத்திலேயே நடத்தத் தீர்மானித்துத் தான் சென்று மீளுமளவும் இரதநூபுரச் சக்கிரவாளத்தினைப் பாது காக்கும்பொருட்டுத் தன் உயிரினுஞ் சிறந்த நண்பின ராகிய, வர்த்தமானத்து மன்னன் பிரீதிவர்த்தனன், கந்தர்வநகரக்காவலன் விருககடி, கந்தமாதனபுர வலன் திவாகரதேவன், சக்கிரவாளவேந்தன் வச்சிர தாடன், தேவரவணச் செம்மல் இரமியதான், விசய

கூடத்தரசன் வேகமாரதன், கிருதமாதன பூபன் கருடாங்கதன், சோபன நகரத்தோன்றல் சித்திராதன், ஆகிய அரசரெண்மரையும் அழைத்து இரதநூபுரத்தைப் பாதுகாக்க நியமித்து, பிறகு தனது நால்வகைப் படையினையும் அலங்கரித்துக் கொணர்கவென்றுஜ்ஞாபித்தனன். சேனாதிபதிகள் சதுரங்கசேனையையும் பண்ணுறுத்திக் கொணர்ந்தார்கள். அமரபுரத்தரசனும் சடியரசன் தம்பியுமாகிய சுவலனரதனும், சடியரசன் மருமகனும் அரிபுர மன்னனுமாகிய வியாக்கிரரதனும், சடியின் மகனாகிய அருக்ககீர்த்தியும் தத்தமக்குரிய நால்விதப் படைகளுடனும் ஒருங்கு கூடினார்கள். அப்படைகளைச் சுமக்கலாற்றாது நிலமும் ஒருபுடை நெளிந்தது. பின்னர்ச் சடியரசன் தன்மகள் ஏறிச்செல்லப் பொன்னினாலும் நவமணிகளாலும் விமானமொன்று நிருமித்தனன். அது பன்னிற மணிகளினொளியால் வானவில்லென விளங்கிற்று. அதன் நாற்புறத்திலும் மகரமீனின் அங்காந்த பகுவாயினின்றும் வெண்ணிலாச் சொரிவனபோல முத்துமாலைகள் தொங்கின; பட்டினாலியன்ற பன்னிறக் கொடிகளும் இடையிடையே பொன்னிறச் சூலங்கள் மின்ன அவ்விமானத்தின் சென்னியிற்றுன்னி யிலங்கின; கந்தருவர் வித்தியாதரர் கின்னரர் கிம்புருடர் மிதுனந்தேவர் முதலியோர்தம் திருவுருவங்கள் அதன் பற்பல பாகங்களிலும் தக்கவாறு சித்திரிக்கப்பட்டுத் திகழ்ந்தன. இதனொளியாற் றினகரனும் கண்புதைத்துச் சென்றனன். இதனிடையே வஸந்தமண்டபமும் நாடகவரங்கமும் இன்னிசைச் சாலையும் தண்பொழிற் சோலையும்

செய்குன்றமும் மற்றும் மகளிராடிடங்கள் பலவும் செவ்வித்திற் செறிய நிருமிக்கப்பட்டிருந்தன. மண்ணினும் விண்ணினும் இதற்கிணை சிறிதுமில்லை யென்னும்படி பேரொளி பரப்பிய விமானத்தினைச் சடியரசன் கண்டு மகிழ்ந்து தன் மடமகள் சுயம்பிரபையினை அலங்கரித்து அழைத்துவர அருளிச்செய்தனன். அரசன் திருவுளக்கருத்தினை அரசி வாயுவேகைக்கு உழைஞர் அறிவிப்ப அவள் மகட் கறிவித்தனள். அரயனாணையைச் சேடியரானுணர்ந்த சுயம்பிரபை பஞ்சணையினின்றும் அணிமயிலெனஇழிந்து நீலமணிபதித்த மாடத்தினடுவே மேகபடலத்திடையே விளங்கும் மின்னற்கொடியெனநடந்து சென்றனள். அப்பொழுது அவள் உயிர்ப்பாங்கியராகிய சேடியர் பலரும் அவளைச் சூழ்ந்தனர். அன்னமும் நடைகற்ப மென்மெலநடந்து மங்கையர் பலரும் பல்லாண்டுகூற, அயிற்படை அங்கையினேந்திய வலிமைமிக்க கன்னிப் பெண்கள் சுற்றிலுங் காவல்புரிய, ராஜகுமாரி தன் கன்னிமாடத்தினின்றும் நீங்கித் தனது அன்னை வாயுவேகை வதியும் கோயிலினை ஐவகைத் தாயரோடுஞ் சென்றடைந்து தனது நற்றாயின் பொற்றாமரை யனைய சேவடிகளிற் பணிந்து போற்றி நின்றனள். வாயுவேகை தன் மகளை மார்போடு இறுகத்தழுவி முத்தங்கொண்டு நல்ல பரிமளங் கமழும் பனிநீரால் நீராட்டி மெல்லிய ஆடைகளால் ஈரம்புலர்த்தி இழையாயிரம் பொன்கொண்ட உயர்ந்த ஆடையுடுத்திப் பாரமான அணிகலன்களை அவள் கொடியிடை பொறாதெனவிலக்கிக் கோடி சூரியருதயஞ் செய்தாலனைய அரதன மணிக்கலன்களாலணி

வித்து மன்மதன் கைவாளென வொளிரு மிருகண்களு க்கும் நஞ்சூட்டுவாள்போல வஞ்சனமெழுதி யட்டமிப் பிறையொத்த நெற்றியில் நீலமணித் திலதமிட்டு, இன்னும் பற்பலவகை யலங்காரமுஞ்செய்து தனது அரண்மனையில்வைத்துச் சீராட்டிப் பாராட்டி யிருக்குமளவில், சோதிடர் கணக்கிட்டு நல்ல சுபமுகூர்த்தஞ் சேர்ந்தமையை அவட்கு அறிவித்தனர். சுவலனசடியும் தன்மகளை விமானத்தில் இனி இனிதேறுக என்றருள் செய்தான். சுயம்பிரபை தன் தாயரோடும் தோழியரோடும் அரம்பையரினும் அழகுமிக்க ஈராயிரங் கன்னியர் அயிலும் வாளுமேந்தித் தற்காத்துவர, தான் அன்புடன் வளர்க்கும் கிளி பூவை மான் முதலியவற்றோடும் அவ்விண்ணவர் புகழும் விமானமீதேறினள். அவளுடைய பரிவார மகளிர்கள் அவள் விளையாடும் பந்து கழல் பாவை முதலியவற்றையும் ஆடையாபரணப் பேழைகளையும் நறுஞ்சாந்து பெய்த செப்புக்களையும் நறுமலர்க் கோடிகங்களையும் சுமந்து அவ்விமான மிசையிவர்ந்தனர். குறைவின்றிச் சேனைகள் புடைசூழச் சடியரசனும் முரசு சங்கம் ஊதுகொம்பு ஆகுளி அணிமுழவு முதலிய வாத்தியங்கள் கோஷிப்ப அரசுவாவின் பிடரியின்வைத்த அம்பாரியில் ஆரோகணித்துப் புறப்பட்டனன். ஏனையோரும் தந்தமக்குரிய வாகனங்களிலேறிக் ககனமார்க்கத்திற் கடல் கிளர்ந்தாலென்னச் சென்றனர். இன்னணம் யாவரும் இரதநூபுரநகரத்திருந்து புறப்பட்டு ஆகாயவழியாய் வழிக்கொண்டு செல்லும்பொழுது வழியிலுள்ள மலை யாறு முதலியவற்றின் விநோதங்களை இன்னது இன்ன

தெனச் சுயம்பிரபைக்கு அவ ளுயிர்த்தோழி அமிர்த பிரபை என்பாள் எடுத்துக் கூறுவாளாயினள்.

நங்கை நாயகமே! இதோ தெரிகிற இவ்யாறு நமது மலைக்கு மேலுயர்ந்த பொன்மலையின் சாரலினின்றிழி தருங் கங்கையாறு. இதன் இரு கரைவாரங்களிலும் கற்பகச் சோலைகள் கவின்பெற விளங்குதலைக் காண். இங்கு யாம் இருவிசும்பின்கண் இயங்குதலினால் அச் சோலைகள் சிறியனவாய்க் காணப்படினும், ஆண்டுள்ள வர்களுக்கு அவை நமது வெள்ளி மலையையும் வென்றும் பெருந்தோற்றத்தனவாய்த் திகழும். இக்கங்கையாறு, ஆரவாரிக்கின்ற பலபறவைக் குலங்களும் வண்டினங் களைப்போலப் பக்கங்களிற் பொருந்த, மலையினின்றடி த்துவருஞ் சந்தனக்கட்டைகளைத் தனது அலைகளாகிய கைகளால் சாந்தரைக்கு மடவாள்போலக் கரையிலரை த்து நுரைகளாகிய சந்தனக்குழம்பினை வழித்தெறியும் விந்தையைக் காணுதி. இந்நதி, கீழ்கடலிற் சென்று சேருமளவும் இதன் வேகஞ் சிறிதுங் குறையாது. இப் புறத்தில் விளங்கும் இந்த யாறு அதே பொன்மலையிற் பிறந்து நமது மலையிலுள்ள முழையின் வழியாய்ப் பெயர்ந்து பொன்னையும் மணியையும் வள்ளலாரைப் போல இருபுறமும் வீசிச் சிந்துகின்ற சிந்துநதியாகும். தனது அழகிய திரைக்கரங்களால் நுரைகளாகிய புஷ் பச் செண்டினை வீசி விளையாடு மவ்யாற்றினெழிலைக் கண்டு மகிழ்வாய். இந்நதம் மேல்கடலிற் சங்கமமா வது. தேனொடு நெய்யையும் பாலையும் கலந்தாலன்ன இனிய மொழியும் பிறைபோன்ற சிறுநுதலுமுடைய திருமகளே! மேகமண்டலத்தின்மீது நஞ்சேனையநிரச்

செல்லலான் அச்சமுற்று முகிலினங்கள் வாய்விட்டலற அதனைக்கேட்டு இளயானைக் கன்றுகளைக் காத்துக் கொண்டிருக்கும் மைவரை யனைய மால்யானைகள் மன மடங்காக் கோபங்கொண்டு பிளிறுவனகாணாய். அல ங்கலணிந்த அளகத்தையும் அமுதனைய இன்மொழி யினையுமுடைய அணங்கே! அதோ பொருப்பெனக் கா ணப்படுவன வெண்மருப்பிரண்டுடைய மலைவேழங்களே. அவை பெருவரைத் தடங்களைக் குத்திபிடந்து விளை யாடுதலான், அம்மலைகள் பிளந்து இருபுறமுஞ் சரிந்து ஆபரணப் பேழைகள் கவிழ்ந்தாலொப்ப ஒளிபரப்பும் நவமணிகளைச் சொரிந்து கிடக்கும் சிறப்பினைக் கண்டு களிப்பாய். பைங்கண்ணையும் செம்முகத்தினையும் பரூஉத் தடங்கைகளினையுமுடைய களிற்றினங்கள் தம் புடைப் பிடிக்குலமடுத்துவரச் சென்று மால்வரை யருவிநீரினைப் புடைத்து விளையாடிச் செம்மணிப் பொடியினைவாரித் தம்மத்தகத்தின்மீது வீசி யாடுதலி ஞனே அப்பொடிகள் சிந்தி மலைச்சிகரங்கள் யாவும் குங்குமம் அப்பிய கோலத்தைக் காட்டும் விந்தையை நோக்கி மகிழ்தி.

இங்ஙனம் பாங்கி வழியிற் கண்ட வளம் பலவற்றை யும் சுயம்பவைக்குக் காட்டிவர, யாவருஞ் சிந்தாநதி தவழும் வளவயல்சூழ்ந்த சுரமை நாட்டிற்புகுந்து பேரொளிபரப்பும் போதனமா நகரத்தைச்சார்ந்த ஸ்ரீ நிலையகமென்னும் பொழிலுளிறங்கினூர். அச்சோலை யின் பெருவனப்பினைக் கண்ணுற்று அதுவே தாம மதிவதற்குத் தக்க இடமென்று கருதி மத்தமாக்களை யும் வயப்புரவிகளையும் ஆண்டுள்ள மரங்களிற் பிணித்

து பின்னர், படமாடங்களான் அரசற்குக் கோயிலும் அதனைச் சுற்றிலும் அணிஅணியாக ஏனையோர்க்கு வைகுமிடங்களும் வகுத்தனர். மற்றுமோர்புறம் அரசிவீற்றிருப்ப அணிமணி மண்டபங்களும் ஆடரங்கும் தமனியக்கூடமும் பள்ளி யம்பலமும் அருகன் கோட்டமும் வகுத்தமைத்தனர். பிறகு, மதில்வகுத்து அரணுறுத்தி இடையே கன்னியர் பலரும் காப்பினை யியற்ற வாய்ப்புடையதோர் கன்னிமாடமொன்றினை மன்னன் மடமகள் சுயம்பிரபைக்காக எழில்பெற இயற்றினார்கள். அரசன் புதல்வியும் விமானம் விட்டிறங்கி அக்கன்னிமாடத்திற் சேர்ந்தமர்ந்திருந்தனள்.

இவர்கள் இங்ஙனம் இங்கிருந்து இளைப்பாற முன்னம் பயாபதி மன்னன்பாற் றூதுவனாய் வந்த மரீசி வயப்புரவியொன்றின்மேலேறிப் பயாபதி அரசன் அரண்மனை யடைந்து சடியரசன் முதலியோர் பரிவாரங்களோடு மடமகளின் மணவினைகுறித்து வந்திருப்பதையும் அவர்கள் திருநிலைய கப்பொழிலிற் றங்கியிருப்பதையும அறிவித்தனன். பயாபதி மன்னன் மனத்தடங்கா இறும்பூதுகொண்டு மகிழ்ச்சியால் உடல் பூரித்து, மருங்குநின்ற உழையரை நோக்கி நமது போதனத்துள்ளா ரனைவரும் புத்தணியணிந்து புதியனவுடீஇ மணக்கோலம் பூணவும், நகரிமுழுதையும் அலங்கரிக்கவும், யானைமேன்முரசறைந்து தெரிவிக்க ஆஜ்ஞாபித்து, எங்கும் தோரணம் நாட்டவும், பூரணகும்பம் முதலிய அட்டமங்கலங்களை யாண்டும் பரப்பவும், நறிய மாலைகளைக் கணக்கின்றி எவ்விடமு நாலவிடவும் தனது ஏவலாளர்கட்குக் கட்டளை யிட்டனன். பின்னர், இர

வலர்க்கு அவாக்கெட அளவற்ற நிதிகளை வாரிவீசவும், அருகனுடைய சினகரத்தி லனவரதமும் திருவிழாப் பொலியவும், மறுமண்டல மன்னர்களை யழைத்துவர ஒற்றர்கள் ஓடவும், திருநிலையகத்தில் இறங்கியிருக்கும் கன்னியர் சிரோமணியினைக் காணச் செல்லுதற்குரிய மாதர் யாவரும் தம்மைப்புனைந்து கொள்ளவும், அவரேறிச் சேறற்கு இளம்பிடிகளைப் பண்ணுறுத்தவும், அவர்களுக்குக் காவலாக வீரர் படைக்கலமேந்திய கையராய்ப் போதவும், ஆணைதந்து, தன் எதிரிருக்கும் மரீசியைத் தன்னொடும் திருநிலையகப்பாடிக்குச் செல்ல வேண்டுமென்று வற்புறுத்திக்கூறி அவனுக்கு ஆடையணி முதலிய சிறப்பு நல்கினான்.

பிறகு, பயாபதி மன்னன் தனது மந்திரிகளை யழைத்து, “அமைச்சர்களே! விஞ்சையராஜன் சடியாசனுக்குச் செய்யற்பாலனவாகிய சிறப்புக்கள் யாவை? கூறுங்கள்” என்று கேட்டனன். மந்திரிகள், “அரசே, விஞ்சையர் நற்குலத்தினும் நலத்தினும் குணத்தினும் செல்வத்தினும் நமக்கு நிகரானவரே; புஜபல பராக்கிரமங்களான் நமக்கு மேலானவர். ஆதலின் அவருக்கு எத்தகைய சிறப்பினையும் வரையாது புரிதலே தக்கது. யாதுசெய்யினு மேதமாகாது” என்று கூறினர். அமைச்சர்கள் இம்மொழிகூற, அரசனும், வித்தியாதர வேந்தன் தனது அரும்பெறன் மடமகளை நமது திவிட்ட குமாரற்கு மணஞ்செய்விப்ப இங்கே கொணர்ந்த பெருமையானும் நற்குண நற்செய்கை நல்லறிவுமிக்க நீவிர் அமைச்சராயமைந்த சிறப்பினானும் எம்மினும் அருந்தவம்புரிந்தா ரெவருமிலரென்று சொல்லி மகிழ்ந்து,

தனது பட்டத்து யானை ஒன்று நீங்கலாக ஏனைய யானை பரியாதிய வாகனங்களைப் பண்ணுறுத்திக் கொணர ஆஜ்ஞாபித்தனன். உடனே பாகர்கள் மதகளிற்றினங் களைக் கட்டுத்தறியினின்றும் நீக்கி ஓடை சூழிய மகரி கையாதிய அணிகளைப் புனைந்து இருமருங்கும் மணி மாலைகளை அருவிபோற் புரள யாத்துப் பிடரியிற் பொன்னாலு மணியாலுமியன்ற அம்பாரிகளைக் கட்டி அலங்கரித்து வெளிக் கொணர்ந்தார்கள். மேருமால் வரையனைய தேர்கள் பலவற்றையும் புனைந்து கொடிஞ் சியி னுச்சியிற் கொடிகளைக்கட்டிப் பின்னர்க் காற்றி னுங்கடியவாய கலின வாம்புரவிகளைப் பூட்டித் தேர்ப்ப பாகர் பலரும் வந்து சேர்ந்தனர். அழகிய மணிக்கோ வை கழுத்தின் பின்னத் தலையாட்ட மென்னுமணி நாற் புறமுமொளி வீசக் கல்லணை கலினம்பூண்ட கவனவாம் புரவிகளை வாதுவர் அலங்கரித்து வீதியிற் செலுத்தி நிறுத்தினர். காலாட்படைஞரும் கச்சையிட்ட கவச யாக்கையராய் வாள்வேல் முதலிய படைக் கலமேந்திய கையராய் மதுத்துளி பிலிற்றும் மலர்மாலை சூடிய செய் கையராய் எங்கணும் எள்விழ இடமின்றி ஈண்டி மொ ய்த்தனர். இவற்றை யுணர்ந்த மன்னன், மரீசியினை யும் மந்திரிகளையும் யானைகளின் மேலாரோகணித்துச் செல்ல விடைதந்து, சித்திரரதன் என்னும் தன் அரண்மனைப் பெரிய காரியஸ்தனை அழைத்துத் திரு நிலையகச் சோலையிலிருக்கும் விஞ்சைய ராஜனுக்கும் அவனுடன் வந்தா ரனைவோர்க்கும் மிகுதியுஞ் சிறப் புச்செய்து உபசரிக்கவேண்டிய பொற்குவியல் நவ மணிக்கணம் வெள்ளிலை பாக்கு முகவாசம் மலர்மாலை

பூச்செண்டுகள் கனிவகைகள் சர்க்கரை கற்கண்டு முதலி யனவற்றை அனுப்பவும், போதனமாநகரத்தை மணக் கோலஞ்செய்து புனையவும் ஆஜ்ஞாபித்தனன். பிறகு பட்டத்துயானையை மிகவும் அலங்கரித்துக் கொணர ஏவினன் ; உடனே அரசன்பாகன் பிறையனைய வைரக் கோடும் செம்புகர்முகமு முடைய மங்களாகரமான பட்டத்தரசுவாவைப் பெரிதும் அலங்கரித்துக் கொணர்ந்தனன். அதன்மேல் மன்னர் மன்னனாகிய பயாபதி யரசன் தன்னருமைப் புதல்வர் விசயதிவிட்டர்களோடு ஆரோகணித்துக் கொற்ற வெண்குடை வட்டமதிபோல மேலே நிழற்ற இருமருங்கும் மடமாதர் கவரிவீச நகர வீதி வழியாகத் திருநிலையகப் பொழிலினை நோக்கிச் சென்றனன். செல்லும்பொழுது தோற்கருவி துளைக்கருவி நரப்புக்கருவி கஞ்சக்கருவியாகிய நால்வகை வாத்தியங்களும் கடல்போல ஆரவாரித்தன. நகரி லுள்ள ஆடவரும் மகளிரும் மலர்மழை சொரிந்தனர். மகர தோரணங்களும் கொடிகளும் ஆலவட்டங்களும் குடைகளும் எங்கணும் நிறைந்து வீதியிற் செல்லும் வழி தெரியாமல் இரவினை யுண்டுபண்ணினவேனும், ஆண்டுச் செல்வோரணிந்துள்ள அணிமுடியாதியவற் றின் மணியொளியினால் எங்கும் பகற்பொழுதாகவே மிளிர்ந்த தன்மையால் இரவும் பகலும் பொருவன போல அப்பொழுது விளங்கிற்று.

இவ்விதம் பயாபதிமன்னனும் அவன் குமாரர்களும் சதுரங்கசேனையும் புடைசூழப் பலசிறப்புக்களுடனும் ஸ்ரீநிலையகச் சோலையை நெருங்கியவளவில் இவர்கள் வருகையை மரீசியாலுணர்ந்த சடியரசன் இவர்களை

எதிர்கொண்டு உபசரிக்கும்படித் தனது நால்வகைப் படையுடனு மெழுந்தான். இருவர்படையும் கங்கை யும் யமுனையும் கலந்து ஒன்றுயதுபோலக் கலந்தன. மாநடமன்னனும் விஞ்சையர்வேந்தனும் ஒருவரை யொருவர் கண்டபோது இருதிறத்துப் படையினின் றும் பல இசைக்கருவிகளும் முழங்கின; மகளிர்கள் மங்கலம்பாடிப் பல்லாண்டிசைத்தனர், தேவர்கள் மலர் மழை சொரிந்தனர். பயாபதியரசன் அவன் கையி னைப்பற்றித் தழுவிக் குசலம் வினவினன்; விசயனும் திவிட்டனும் சடியரசனைப் பணிந்தனர். அவனுமக் குமரர்களைவாரி மார்புற அணைத்து ஆசிகூறினன். அப் பொழுது அருக்ககீர்த்தி போதனத்தரசன் பாதத்தில் வணங்க இவனும் அவனைத்தழுவித் தன் யானைமீதே ற்றி அருகில்வைத்துக் கொண்டனன். பின்னர்ச் சடி யரசன் தம்பி சுவலனரதனும் மருகன் வியாக்கிரரதனும் மண்ணுலகமன்னன் பாதத்தில் வணங்க அவனும் களிப் புடன் அவர்களுக்கு ஆசிகூறி உபசரித்தான். பயாபதி மன்னன் இளவல் ஸ்ரீபாலன் விஞ்சையரிறைவனை வண ங்க இவனும் அவனை மார்பிறுகப்புல்லி உவகையங் கட லுண் மூழ்கினன். இவ்விதம் மண்ணவரும் விஞ்சை யரும் அளவளாவிமகிழ்ந்து பிறகு யாவரும் சடியரசன் தங்கியிருக்கும் விசித்திர மண்டபத்தையடைந்து கள் ளொளி கமழுங்கோதை மகளிர்கள் இருபுறமும் கவரி வீச நவமணிபதித்த அரியாசனத் தமர்ந்திருந்தார்கள். அப்பொழுது பயாபதியரசன் விஞ்சையராஜனைநோக்கி, “அரசர்க்கரசே! ஒன்றிற்கும் பற்றுத சிற்றரசனுகிய என்னையும் பொருட்படுத்தி இந்திரதிருவனுகிய நீ யிவண்

மகட்கொடை நேர்ந்து வலியவந்தது, யான் செய்த தவமேயன்றி என்குலஞ்செய்த தவப்பயனே யாகும். இஃதெம்போலியரால் பெறத்தக்கபேருே?" என்று பெருமகிழ்ச்சியுடன் பேசினன். விஞ்சையர் பெருமானும் உளங்களித்து, "மன்னரேறே! நீ பரிசுத்தமாகிய இக்ஷ்வாகு குலத்தோன்றலல்லவோ? விண்ணுலகத்தாரும் மண்ணுலகிலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் மனமகிழ்ந்து விரும்பியாடுவார். அதுபோல உத்தமோத்தமனாகிய உனது சேர்க்கை எனக்குக் கிடைத்தது பெரும்பாக்கியமே. யான் உனது குலப்பெருமையை முன்னம் மரீசி எடுத்துக்கூறச் செவ்வனே யுணர்ந்துள்ளேன். அதுவேயுமன்றிப் புராணநூல் வல்ல புலவர்பலரும் நினைத்தற்கரிய பேரழகினையுடைய மகள் சுயம்பிரபை கடல்வண்ணனாகிய உனதிளைய குமாரன் திவிட்டராஜற்கே உரியவள் என்று உரையிட்டிருக்கின்றனர். அதனால் என் பெண்மணியை உனது மைந்தனுக்கு வதுவையாற்றி அளிக்க ஈண்டுவந்துளேன். இனி இது விஷயத்திற் சிறிதும் தாமதிக்க வேண்டாம்" என்று விடைபகர்ந்தனன். இன்னணம் இருபெருவேந்தரும் மணவினையாற்றற் பொருட்டு மிக்க அன்புபாராட்டி அளவளாவிப்பேசி யமர்ந்திருக்கையில் வெள்ளிமலைவேந்தன் மண்ணுலகவேந்தன் மைந்தரையும் தன்மகன் அருக்ககீர்த்தியையும் போதனமாநகருட் போத அருளிச்செய்தனன். அவரும் மந்தமாக்களின் மீதிவர்ந்து சென்றனர். அப்பொழுது சுயம்பிரபை வெளியில் நடக்கும் விநோதங்களைக் காணுற விரும்பித் தன் விமானமிசை விலங்கலின் குவடுசேரு

மெல்லியன்மபிலென்ன ஏறி ஏழாநிலையை அடைந்த னள். அப்பொழுது அவளதுயிர்த்தோழி அமிர்தமா பிரபை என்பாள் ஏழாநிலை மாடச்சாளரவாயிலைத் திறந்து, "நங்கையர்திலதமே! இந்நகர்வளங்காண ஈண்டுவா" என்றழைத்து, அவட்கு பட்ட யானையின் மேல் ஏறிச்செல்லும் மூவரையும் காண்பித்து அவர்கள் இன்னாரென்பதையும் எடுத்துக்கூறினாள். அவள் திவி ட்டனைநோக்கிய அளவிலேயே அவனது பெருவனப் பினாலும் விதிவலியினாலும் அவனைக்கண்ட கண்களை மீட்கும் வலியிலாளாய்த் தனது பெருங்காதலினைப் பிறரறியாமல் மறைக்கும் நாணினையும் இழந்துவருந்தி நின்றனள். செந்தாமரையனைய கண்ணும் கையும் பவளவாயும் அன்றலர்ந்த காயாம்பூவின் ஒளிபெற்ற மேனியும் நீலமணி கொழுந்துவிட்டாற்போன்ற குஞ்சி யும் தன்பாற்கண்ட கன்னியின்கண்களை அக்காமனை வென்றகாளை சிறைப்படுத்தினனென்பதும் ஒருவியப் போ? வெள்ளம் மேலோங்கிப் பெருகுமாயின் அதைத் தடைப்படுத்திபிருக்கும் சிறையுமுண்டோ, அதுபோ லக் காமங்கைமிக்கபொழுது அதனைத் தடைப்படுத்தும் நிறையுமுளதோ? தன் மனத்தைக் கொள்ளைகொடுத்த அம்மங்கை விமானத்தினின்று மிழிந்து தன் பிதாவினை யடைந்து அன்னவன் தாதுலாம் போதனைய பாதங் களிற் பணிந்து நின்றனள். சடியரசன் தன் மகளை யன்போடெடுத்துத் தன் கவானினிருத்திச் சீராட்டிப் பின்னர் மாமனாகிய பயாபதி மன்னனை வணங்கச் செய் தனன். வணங்கிய சுயம்பிரபையினை அவனுந் தன் வலக் குறங்கினேற்றி அவள் பாதாதிகேச வனப்பினைக் கண்

ஞாரக்கண்டு மகிழ்ந்து இப்பெண்மணியைப் பெறுங்கணவன் ஏகசக்கிரேசுவரனாக இப்புவியினை யாள்வான், ஆதலின், திவிட்டன் மிகுந்தபாக்கியவானே என்று புகழ்ந்து பேசினான். பிறகு இரண்டு அரசரும் அவ்வணங்கினை அந்தப்புரம்போக அருள்செய்து விடுத்தனர்; அவளும் விமானமீதேறிச் சென்றனள்.

இதற்கிடையில், பயாபதி அரசன் மனைவி சசிதேவி தனது பரிவாரமகளிராகிய மதுகரி, வஸந்தசேனை முதலிய ஆயிரத்தெண்மரை அலங்கரித்து அட்டமங்கலம் முதலியவற்றை ஏந்திச்சென்று மணமகளைக் கண்டுவரப் பணித்தனள். மாதவசேனையாதிய தாயதமகளிர்கள் நறுமலர்மாலை தோடு குண்டலம் முத்தவடங்களையேந்தி அவர்களோடு சென்றனர்; திவிட்ட குமாரனுடைய ஐவகைத் தாயரும் கூடப்போயினர். இவர்கள் யாவரும் சிவிகைகளிலும் பிடிகளிலும் இரதங்களிலும் ஏறிச் சென்று ஸ்ரீநிலயகத்தினை யடைந்து சடியரசனை வணங்கி அவன் அனுமதிபெற்றுச் சுயம்பிரபையின் கன்னிமாடத்தினைச் சேர்ந்தார்கள். ஆண்டுப் பொன்னாணியன்ற அமளியின்மீது மகளிர்கள் கவரிகாலசைப்பக் குண்டலங்கண் மிளிர்ந்து ஒளிவீச வீற்றிருந்த மங்கையர் சிரோமணிக்கு அவர்களை யின்னின்னவரென்று அவள் தோழிய ருணர்த்தினார்கள். மதுகரி வஸந்தசேனை முதலியமாதர்கள் சுயம்பிரபையினை வலங்கொண்டு தொழுது வாழ்த்தியபொழுது அவர்களைத் திவிட்டராஜனுடைய உழைக்கல மகளிரென்றுணர்ந்து மனமுவந்ததனால் தனது முகத்திடை முறுவல்தோன்ற அதனை மறைக்குமாறு அவள் நறுமலரொன்றினை மோந்துகொ

ண்டிருந்தனள். அவளைக் காணச்சென்ற மகளிர்கள் பல ரும் அவள் தேசினைக்கண்டு கண்கூசினார்கள். பலவித் தைகளிலும் வல்ல மாதவசேனை யென்பவள் ஆண்டுப் பலருங் கண்ணுதற்கரியளாய் மேகத்திடைத்தோன்றும் மின்னற்கொடிபோலப் பேரொளிபரப்பும் மடந்தையி னுருவத்தை அங்குள்ள பளிக்குச்சுவரின்மேற் கண்டு அப்பிரதிபிம்பத்தை நன்றாகத் தன் நெஞ்சிற் பொறித் துக்கொண்டு பின்ன ரதனையோர் பலகையிற் றீட்டிச் சித்திரித்துக் கொண்டனள். பிறகு, அவர்கள் யாவ ரும் இராஜகுமாரத்தியினை நோக்கி, 'எழுதுதற்கரிய பொன்னனையன்ற பாவையை அனையாய், மாமியார் எமது கண்களைத் தம் கண்ணாகப் பாவித்து நின்னைக் கண்டுவர எங்களை யேவியுள்ளார். ஆகையால் அவர் க்கு யாம் மீண்டுசென்று சொல்லும் வார்த்தையொ ன்று செல்லியருள்க' என்று கேட்டனர். அம்மங்கை யும் நாணத்தினாற் சிறிதுபோழ்து ஒன்றும் பேசாதிரு ந்தனள். அப்பொழுது வல்லவளாகிய மாதவசேனை, 'நங்கையே! எங்கள்முன் நீ வாய்திறந்து பேசுவதனால் யாதும் ஏதம் வாராதென்றனள். இதனைக்கேட்ட சுயம்பிரபை குறுமுறுவல்கொண்டு தனதுயிர்த்தோழி யின் முகநோக்கினள். அவள் உள்ளக்கருத்தினை உண ர்ந்த அமிர்தமாபிரபை அவர்களைநோக்கி, 'அன்னையர் களே! நீங்கள் நுமது தலையை எமது தலையாகப் பாவி த்து எமது மாமியின் பாதங்களை நாங்கள் வணங்கிய தாக நீங்கள் வணங்கியருளுங்கள்' என்று மறு மொழி பகர்ந்தனள். யாவரும்மீண்டு சசிதேவியை யடைந்து நடந்தவை யாவற்றையும் சுயம்பவையின்

பேரழகினையும் எடுத்துக் கூறினார்கள். மாதவசேனை தான் எழுதியபடத்தினை ஒருதுகிலினால் மறைத்தெடுத்துக் கொண்டு தனியேசென்று அரசியை யடைந்தனள். சசிதேவி அவளைத் துகிலின்மறைத்துக் கொணர்ந்ததியாதெனவினவ, அவள், 'தாயே! இஃது உனது மருமகளுடைய உருவந்தீட்டிய படம்; நீ பார்த்தற்காக யான் சித்திரித்துக்கொண்டு வந்துளேன்' என்றனள். அரசிமகிழ்ந்து மாதவசேனைக்கு அணிகலம் பலவும் ஈந்துபசரித்துப் படத்தைக்காட்ட வேண்டிக் கொண்டனள். மாதவசேனை படத்தின்மேற் பொதிந்த துகிலினை நீக்கியவளவில், இருகண்களுங்கூச வொளிவீசுமவ்வுருவினைக் கண்ணாரக்கண்டு, அரசி, எழுதுதற்கரிய இவ்வுருவினைத் துகிலிகைத் தொழிலாலெங்ஙனம் சமைத்தனை, உனது மேலான அறிவின் வல்லபத்தை எங்ஙனம் புகழ்வேன், என்று கொண்டாடினாள். இத்திருவுருமே இத்தகைய சிறப்படைந்து விளங்குமாயின் அப்பெண்மணி எத்தகையளோ என்று வியந்து, இதனை நமது குமாரன் திவிட்டனுக்கு காட்டுதியென்று உத்தரவிட்டனள். மாதவசேனை, நினைத்தற்கு மெழுதுதற்கு மரிய திருமேனியுடைய அந்நங்கையின் றிருவுருவினை உனது திருவருளின் பெருமையால் ஒருவாறு படத்தில் வரைந்தேன் என்றுகூறி, எம்மாமியாரடிகளை யாங்கள் அளவற்ற அன்புடனிறைஞ்சியதாக நீவிரிறைஞ்சுக என்றெம்மைப் பணித்தவோர் திருமொழி அவள் தோழிவாயிலாக எழுந்தமையும் இனிது மொழிந்து, பின்னர் இளையநம்பிவாழும் கோயிலுட்புகுந்து அவனைப் பணிந்தெழுந்து நின்று, 'நமதன்னையின்

வேண்டுகோளால் இப்படத்தை நமக்குக் காட்டு வான் போந்தேன். ஐயனே! அருங்கல முலகின் மிக்க அரசர்க்கே யுரியவன்றிப் பிறர்யாவருக்கும் உரித்தா காது; அதனால், பேரெழிலுடைய இதனைக் காணுதி யென்று படத்தைக் காட்டினாள். அரசகுமாரன் அதனைக் கண்ணுற்றவளவில் கண்டகண்களை மீட்கலா காதவனாய்ப் பரவசனாகி, "இவ்வுருவிற்கண்ட மடந் தை வானவர் மகளோ, விஞ்சையரணங்கோ அன்றி மண்ணுலக நங்கையோ" என்று வியப்புற்று ஐயுறு மளவில் இதனைக்கண்ட மாதவசேனை "ஐயனே! இது விண்மடந்தை யுருவன்று. ஆலோசித்து இன்னவ ளென்று நீயே சொல்லுக" என்று கூறினான். திவிட்ட குமாரன் இங்ஙனமாயின் இது விஞ்சையராஜன் மகளின் உருவென்று கூறினான். அவ்வமயத்தில் மதனனும் கருப்புச்சிலைவளைத்து அருப்புக்கணை தொடுத்து அவனை வருத்துவானாயினான். அவ்வளவில் வெள்ளிமலையரசன் மடமகள் மணவினை நாளையாதலின் சடிதிபிற்சென்று மீள்வோம் என்று கருதியவன்போல் இரவியும் குட திசைக் கடலுள் ஆழ்ந்தான். அப்பொழுது மாலையம் பொழுது வந்து எதிர்ந்தது. தாமரைமலர்கள் காத லரை யகன்ற கற்புடைய மகளிரைப்போன்று பொலிவு நீங்கின. குமுதங்களோ திங்களாகிய தமது தலைவனை முகமலர்ந்து அழைப்பனபோல் விகஸித்து விளங்கின. அக்காலத்தில் ஆகாயப் பரப்பிடத்து விளையாடித் தவ ழும் திங்களங்குழவிவாய்த் தோன்றும் வெள்ளிய முறு வலினைநோக்கி ஆம்பல்கள் ஒளிசிறந்து மகிழப் பங்கயம் கண்ணீர் சொரிந்து குவிந்து வாடின. ஆதலால்

உலகிலுள்ளார் யாவர்க்கும் ஒருபடித்தாய் இனிய தன்மையினை யுடையார் எவரும் இலர் அன்றோ? திவிட்டராஜன் மன்மதபாணத்தால் வாடி மெலிந்து சோகங்கொண்டு தீயினில் உருகும் வெண்ணெய்போல மனமுருகி அவசமடைந்து அன்றிரவு முழுதும் திங்களின் கதிரொளியால் வருந்தினான். ஆறிய அனலத்தை மேலோங்கி யெழுப்பும்வண்ணம் வீசுவதுபோலத் தென்றலும் வீசி யலக்கண் விளைத்தது. சுயம்பவையும் மதனற்கும் திங்கட்கும் தென்றற்கும் ஆற்றாளாய்ப் புலம்பிப் பின்னர்த் தன் வேட்கையை யொருவாற டக்குமாகருதி அப்பொழிலினுள்ள அருகன் சினகரம் புகுந்து ஒரு சாமப்பொழுது தியானத்திலமர்ந்து பிறகு இடைவிடாம னினைக்குநர் உள்ளக் கமலந்தோறும் விரைந்துசென்று பேரானந்தமளிக்கும் விமலனை வாயாரப் புகழ்ந்து பாடி மீண்டு தன் கன்னிமாடம் புகுந்தனள். அத்துணையளவும் உள்ளடங்கிநின்ற காமமும் மீண்டு பொங்கி யெழுந்து வருத்தியதால் உறக்கமின்றி உயங்குவாளாயினாள். அப்பொழுது அவளது மனோபாவத்தை யினிதினுணர்ந்த தோழியர் பலரும் ஒருங்குகூடி விநோதவார்த்தைகள் பல பேசி அவளை ஒருவாறு ஆற்றியிருந்தார்கள்.

வித்தியாதர வுலகினின்று வந்தோர் பலரும் பற்பல விநோதங்களைக் கண்ணுற்றும் ஆடல்பாடல் முதலியவற்று லகமகிழ்ந்தும் பொழுதினைப் போக்கினர். சூரியனும் உதயகிரியை யடைந்து பிரகாசித்தனன். பயாபதி மன்னன் துயிலுணர்ந்தெழுந்து அருகக் கடவுளைத் தொழுது ஆராதிப்பக் கருதி, நித்திய கருமானுஷ்டா

னங்களை விதிப்படிசெய்து முடித்து, இன்று அருகப் பெருமானுடைய உற்சவதினமென்று யாவருக்கும் அறிவித்து, நகரமாந்தரும் தானும் அருகனாலயம் புகுந்த அளவில், பலரும் அருச்சனைக்குரிய பலவகைப் பொருளுமெடுத்து வந்தனர். பயாபதி அரசன் அருகனை யருச்சித்துத் தொழுது வணங்கி வலங்கொண்டு அவனருள்பெற்று மீண்டனன். பின்பு திவிட்ட நம்பிக்கும் சுயம்பிரபை நங்கைக்கும் மங்கல மணநாள் இன்றென மங்கலமுரச மெங்குமதிர வெறிந்தனர். பலவேறு வாத்தியங்களு மெழுந்து முழங்கின. யாண்டு நோக்கினும் ஆடல்பாட லபிநயமுதலியன நிகழ்ந்தன. தேவர்கள் தெய்வமலர்களை மாரிபோலச் சொரிந்தனர். மணத்தைக்காண வேண்டிவந்த விண்ணவரும் மண்ணுலகினரும் வித்தியாதரரும் ஒருங்குகலந்து எல்லாப் பொருள்களும் அளவின்றி எங்கணும் நிறைந்து விளங்குநின்ற அந்த நகரம், பிரளயகாலத்தில் யாவுஞ் சென்றடங்கும் திருமாலின் உதரம்போலத் திகழ்ந்தது. அப்பொழுது பல அரசர்கள் அலங்கரித்த யானைகளின் மேலேறிக்கொண்டு சென்று கங்கை முதலிய புண்ணிய நதிகளின் நீரைப் பொற்கலசங்களிற் கொணர்ந்து திவிட்ட குமாரனை ஒரு திவளொளிப் பொன்னாசனத் திருத்தித் திருமஞ்சன மாட்டினர். நம்பி பின்பு திருமணக் கோலம் பூண்டு வானவர் பூமழை பொழியத் திருக் கல்யாணமண்டபம் புக்கனன். வாயுவேகையும் தனது மடமகள் சுயம்பிரபையினை வித்தியாதர மகளிர்கள் தமது உலகினின்றும் கொணர்ந்த தெய்வதீர்த்தங்களினால் நீராட்டித் திப்பிய நறுமலர் சூட்டி இரத்தி

னுபரண பூஷணங்களை யணிந்து மூவுலகத்தினும் இணை யற்றதோர் பொன்னுடையை யுடுத்தி அழைத்துக்கொண்டு வித்தியாதர மகளிர் தமது இனிய இசையை எழுப்பி மங்கலம்பாடப் பல இன்னியங்களும் முழங்க மணமண்டபத்தை அடைந்தனள். நம்பியும் நங்கையும் மணவறையைச் சேர்ந்து ஆண்டுள்ள பீடங்களில் வீற்றிருந்தவுடன் புரோஹிதன் அக்கினியமைத்து ஹோமம் வளர்த்தி மணவினையை யாரம்பித்தனன். புழுகினுன் மெழுகின தரையிற் பொற் சுண்ணத்தினுற் கோலமிட்டு வெண்முத்த மணலைச் சதுரமாகப் பரப்பித் தருப்பையினுனித்தலைகளை அதன்மேல் வடக்கும் கிழக்கும் பொருந்தச் சேர்த்திப் பெரிய வலம்புரிச் சங்கங்களைத் தொனித்துத் தெய்வங்களைப் பத்துத் திக்குக்களினும் மந்திரங்களால் வேண்டியழைத்துக் காவலாக அமைத்துத் திக்பந்தனஞ்செய்து நெய்சொரிந்து சமிதையிட்டு ஓமம் வளர்த்தனன். அப்பொழுது பிரகஸ்பதியும் சந்திரனும் அங்குவந்து ஸாந்நித்தியமாயினர்; சோதிடர் நன் முகூர்த்தகாலம் வந்ததைத் தெரிவித்தனர். மங்கல வாழ்த்துடன் பல இயங்களும் முழங்க பெரியார் பலரும் ஆசிகூற விஞ்சையராஜன் தன் மகளை இராஜகுமாரனுக்கு நீருடனே தத்தஞ்செய்து கொடுத்தனன்; திவிட்டகுமாரன் அப்பெண்மணியின் கழுத்தில் திருமங்கலிய நாணைச் சேர்த்தினுன். பின்னும் மணவினைச் சார்பாய் நிகழுஞ் செய்கைகள் பலவற்றையும் செய்து முடித்து அக்கினியை வலம்வந்து, வந்த ஆதுலர்க்கும் வேதியர்க்கும் வேண்டிய பொன்னையும் மணியையும் வெறுப்ப அளித்தனர். அரசகுமாரன் தனது மணுட்

டிக்கு அருந்ததியினைக் காட்டிப் பின்னர்த் தனது மாளி கையை அவளோடு சென்றடைந்தான். ஆண்டு மங் கையர் திலகமாகிய சுயம்பிரபையினைப் புகழ்ந்து பல படப் புனைந்து பாராட்டித் திவிட்ட ராஜகுமாரன் அள விடப்படாத ஆநந்தமா கடலுளாழ்ந் திருந்தனன்.

## அத்தியாயம் 7

இவ்விதமாக யாவரும் போதனமா நகரத்தில் இன்பக் கடலுள் மூழ்கி விளையாடிக்கொண் டிருக்கும் சமயத் தில், இரதநூபுரச் சக்கிரவாளத்தினின்றும் விஞ்சைய தூதனொருவன் பூமிக்குவந்து சடியரசன் பாதத்தில் விழுந்து வணங்கிநின்று அளவின்றிப்பரந்த திருப்பாற் கடலின் நடுவில் விஷத்துளியொன்று சொட்டியதுபோ லக் கூறுவானாயினன். "ஐயனே! உத்தரசேடியினை யோம்பும் அச்சுவகண்டனும் அவனைச் சார்ந்தோர் பலரும் நம்மேற் போருக்குவரப் பெருமுயற்சி செய் கின்றனர். ஊழிக்காலத்தில் உலகமுழுவதையும் ஒருங் கழிக்க மேலோங்கி எழும் பிரளயக் கடல்போல அவர் களுடைய சேனை சமுத்திரங் கொதித்துக் கொண்டிருக் கின்றது" என்று கூறினான்.

சடிமகாராஜன் இதைப்பற்றிய கவலை சிறிதும் இல் லாதவனாய், இதனை யாம் முன்னமேயே எதிர்பார்த் துள்ளேம், அவர்கள் போருக்கு வருகினும் வருக, இன் றிப்போகினும் போக, எமது சிங்கவேறனைய செல்வன் திவிட்டராஜன் சீயத்தினை வாய்கிழித்த அந்நாளில்

அங்கு நடந்த விஷயங்களை விவரமாக எடுத்துக் கூறுதி யென்றுஜ்ஞாபிக்கத் தூதுவன் கூறத் தொடங்கினான்.

"அரசர்க்கரசே! இளையநம்பி திவிட்டராஜன் சிங்க வேற்றினைப் பிளந்த வீரச் செய்கையினை மாயச்சீயமாய் வந்த அரிகேதுவா லுணர்ந்த விஞ்சையர்கள் பலரும் அச்சமும் வியப்புமடைந்து மெய்பனித்தனர். மந்திரியாகிய அரிமஞ்சு இவ்விஷயத்தை அச்சுவகண்டன் அறியாவண்ணம் சிலகாலம் மறைத்து வைத்திருந்தும் பின்னர் அவன் அறியின் தன்னைச் சினவுவான் என்று கருதி அரிகேதுவினை அரசன்பால் அனுப்பி அவ்வர்த்தமானத்தை அவனுக்கு வெளியிட ஆணையிட்டனன். பல மன்னர்களும் கழல்பணிந்து திறையிட்டுப் பணிகேட்ப வெண் கொற்றக்குடையின்கீழ் மகளிரிருபுடையுஞ் சாமரை யிரட்டத் தன் ஆஜ்ஞாசக்கிரம் வலப்புடையில் ஒளிர அச்சுவகண்டன் கொலுவீற்றிருக்கும் அமயத்தில், அரிகேது சென்று மன்னவன் கழலினில் மும்முறை வணங்கி யெழுந்து வாய்புதைத்து நின்று, "மன்னர் மன்ன! மூவுலகினுங் கண்டிலாத அரிய விடய மொன்றினைத் தமது திருவடிக்கு விண்ணப்பிக்க வந்துளேன்" என்று கூறினான். அரசன் அதனை யாதென வினவ அவன், அரசன் ஆணையோடு விஞ்சைய தூதர் சிலர் போதனமா நகரஞ்சென்று திறை கேட்டதும், பயாபதியரசன் திறையளித்து நன்மொழி பகர்ந்ததும், அவன் மகன் திவிட்டன் அவற்றைப் பறித்துக்கொண்டு அவ்விஞ்சைய தூதர்களை அவமதித்து அனுப்பியதும், அதனை அறிந்த மந்திரக்கிழவன் அரிமஞ்சு தன்னை மாயச்சீயமாய்ச் சென்று சாரமை நாட்

டையழிக்க வேவினதும் அரசகுமாரர்கள் தன்னை வேட்டையாட வந்ததும், திவிட்டன் தன்னைக் கண்டு உரப்பியதும் தான் அஞ்சி யோட்டமெடுத்து உண்மையான பெருங்கோளரி யொன்று துயில்வுற்றுக் கிடந்த குகையென்றில் ஒளித்துக்கொண்டதும், திவிட்டன் செய்த ஆரவாரத்தால் அச்சீயம் எழும்பி அவன்மேற் பாய்ந்ததும் அவன் அதனை எளிதில் நாணற் புல்லைப் போலக் கிழித்தெறிந்ததும் தான் உயிருக்குப் பயந்து ஒளித்து ஓடிவந்ததும் ஆகிய சம்பவங்கள் யாவற்றினையும் ஒன்றும் விடாமற் கூறி முடித்தனன். இவற்றைக் கேட்ட அச்சுவகண்டன் அடங்காக் கோபங்கொண்டு தனது கண்களிலிருந்து தீப்பொறி நாற்புறமும் பறக்க விழித்து எதிரிலுள்ள வைரத்தூண மொன்று துண்டுகளாய் விழக் கையால் ஓரறை அறைந்து அரிகேதுவை நோக்கி, "நன்று நன்று நின் வீரம், மானுடப் பதர்களுக் கஞ்சுகின்றனை. அன்னோர் வலிமை உன்னைப் போன்ற ஏழைகட்கு மலைபோலத் தோன்றுகின்றது. எமக்கோ அஃது அணுவினுஞ் சிறிய பரமாணுவாக இருக்கின்றது" என்று கோடை யிடிபோல நகைத்துச் சீறினன். ஆண்டுநின்ற விஞ்சையர்கள் மெய்விதிர்த்து அஞ்சினர்.

அச்சுவகண்டன் செய்யும் வீணாரவாரத்தைக் கண்ட அரிகேது தன்னுளே நகைத்து, அடுகுர லரசசீயத்தை ஆம்பன் மலரின் மெல்லியதண்டைக் கிழிப்பதுபோலப் பிளந்தெறிந்த திவிட்ட மடங்கலின் வலிமையையும் ஆற்றலையும் இவன்போரில் நேரிற்கண்ட ஞான்றே தேருவன் ; அத்துணையளவும் யாம் இவனிடம் பேசி

யாவதென்ன என்று நினைத்துக்கொண்டு, அவனெதிரில் தலைமேல் இருகரங்களையு முயர்த்திக் கூப்பிக்கொண்டு நின்றிருந்தனன். அப்பொழுது வேறோர் விஞ்சைய தூதன் அங்குவந்து அச்சுவகண்டன் அடியிற் பணிந்து தாமும் தங்கள் தமரும் தக்கிண சேடியினின்று மண்ணுலகிற்குவந்து மடமகளைத் திவிட்டராஜற்கு மணவினை முடித்தமையை யெடுத்துக் கூறினன். அவனுக்கு உடனே நெருப்பில் நெய்யை விட்டதுபோலக் கோபம் பொங்கி யெழுந்தது; கண்கள் நெருப்புப் பொறியைக் கக்கின; திசாமுகங்கள் நடுங்கின; பற்கடித்து வாய்மடித்து அவன் உங்கரித்தபோது தாராகணங்களும் உதிர்ந்தன. சடியாசன் செய்கையீதாயின் அவன் வலிமையையும் இன்னே அறிகின்றேன் என்று சினந்து தன் கோபத்தை யாற்ற மலைகளை வேர்பறித்துப் பிடுங்கலாமா, அன்றிக் கடல்களை ஒன்றை மற்றொன்றிற் புகுத்தலாமா, உலகங்களை யுருட்டி அம்மானை யாடலாமா என்று பலவாறு தன்னுளே ஆலோசித்துச் சிறிது தாழ்த்துப் பின்பு தனது சதுரங்க சேனைகளை யுத்த சன்னத்தமாய்க் கொண்டுவரக் கட்டளை யிட்டனன். வித்தியாதர வேந்தர்கள் சேனை சமுத்திரங்களோடு விரைந்து வந்து சேர்ந்து அரசனை வணங்கி அவன் அடங்காக் கோபம்கொண் டிருப்பதையும் அவன் விழிகளினின்று கனற்பொறி பறப்பதையும் வைரக்கற் றூண் ஒன்று பொடிப்பொடியாய்த் தகர்ந்து கிடப்பதையும் நோக்கி மனத்தில் துணுக்குற்று, இத்தகைய வெகுளி இவனுக்கு இதற்குமுன் என்றும் வரக்கண்டிலேமே, இன்று எக்காரணத்தால் நேர்ந்ததோ? இக்கோபத் தீயால் எரிந்

தழியும் ஏழைகளும் எவரோ என்று திகைப்பாரா யினர். ஞாலத்திலுள்ள பல ஜீவன்களையும் கொன்று திரியும் காலன்மீது சினந்தனனோ, எனச் சிலர் செப்பினர். ஊழிக்காலத்தை இன்றே தோற்றுவித்து உலகங்கள் யாவற்றையும் ஒன்றாகவாரிப் பெரும்புறக்கடலுள்ளே தூர்த்து அழித்து விடுவானோ என்றனர் சிலர். முன்னே நடந்த வெம்போரில் தானவரும் அசுரரும், இராக்கதரும், முதுகிட்டோடித் தொலைந்தனர்; வானவர் எதிர்க்கும் ஆற்றல் இலராயினர். மாநுடர் மண்ணுடன் மண்ணாயினர். ஆதலின், இவனுக்கு இவ்விதம் கோபமூட்டியவர் எவரோ என்று சிலர் ஆராய்ந்தனர், இங்ஙனம் பலரும் பலவிதமாய் ஆலோசித்து நிற்கும்பொழுது அச்சுவகண்டன் அவர்களை நோக்கி, "வீரர்களே! தக்கிண சேடியில் வெள்ளிமலையரசன் சுவலனசடியென்பான் என்னை மறைத்துத் தன் மடமகளை நிலவுலகத்துள்ள மாநுடப் பதரொருவனுக்கு மணம் புரியக் கருதி அவனைத் தேடிச்சென்றனனாம். அம்மாநுடனும் நமக்குத் திறை கொடாது மறுத்து மாறுகொண்டவன். இவர்களை இன்னே அழித்து விடக் கருதியுள்ளேன். இவர்களை இப்பொழுதே தொலைக்காவிடில் நமது அரசாட்சிக்கும், ஆற்றலுக்கும் என்ன பெருமை?" என்று கூறினன். உடனே, அவர்கள், "மன்னனே! இவ்வற்பச் செயலுக்கோ வெகுள்வது?" என்று கதறினார்கள். அப்பொழுது சேனை முழுவதும் பேரொலி உண்டாயிற்று. சேனாவீரர்கள் ஒருங்குகூடி, நமதரசனுக்கு இவ்வளவு கோபமுண்டாகியும் நாம் அதனைப் பார்த்தும் சும்மா இருக்கிறோமே,

எழுவினுந்திண்ணிய நமது புயங்களால் யாது பயன்? யாம் இப்பொழுதே சென்று பகைவரைப் பொடிபடுத்துவோம், இல்லாவிடில் இறந்து பட்டு வானுலகமேறுவம். அரசன் உணவினை இத்துணை நாளும் தின்று கொழுத்த யாங்கள் அவன்பொருட்டு உயிர் விடாவிடின் மீளாநரகிற்காளாவோமே. அரசனுக்குத் தீங்கு நினைத்தோர் இன்னும் உயிர்த்திருப்பதால் எமக்கே எம்மிடத்தில் வெறுப்பும் இகழ்ச்சியும் உண்டாகின்றன. இனிப் பற்பலவிதமாய் வீரவாதம் பேசி யாரவாரம் விளைப்பதா லியாதுபயன்? உடனே சென்று அம்மாநுடப் பூச்சிகளையும் அவர்களைப் பெருமைப்படுத்திச் சென்ற வித்தியாதர வேழையையும் உடனே வென்று சிறைப் படுத்திக்கொண்டு வருவதோடு, அப்பெண்ணையும் கொண்டுக்கொணர்ந்து நமதரசன் பாதத்தில் விடுவோம், என்று பேரிரைச்சலோடு கூச்சலிட்டனர்.

அப்பொழுது அங்குநின்ற அச்சுவகண்டன் மகன் கனகசித்திரன் யாவரையும் கையமைத்து நிறுத்தி அரசனை நோக்கி, "அண்ணலே! நமது போர்வீரர்கள் தோள்களைப் புடைத்துத் துணைக்கரங்கொட்டி ஆரவாரிக்கின்றனர். சொல்லுவது யார்க்கு மெளியசெயலே; சொல்லியவண்ணஞ் செய்தலே அரியது. இவர்கள் சென்று அவர்களைச் செயித்தல் அத்துணை யெளிய செயலாகுமோ? தானவரும் வானவரும் மானவரும் ஒருங்கு சேர்ந்து பொருவரெனினும் அவர்களை வென்று புறங்கண்டுவருவ தெனது செயலன்றோ? வாட்போரிலும் மாயப்போரிலும் என்னை வெல்லு மாற்றலுடையார் எவருமிலரென்பது தாங்களறியாததன்று.

அதிகப் பேச்சினாற் பயனில்லை; யான் இப்பொழுதே சென்று அத்திவிட்டனையும் அக்கன்னியினையும் கட்டி ஈண்டுக் கொணர்கின்றேன். பின்னரே தமது சீற்றம் மாறுக; மேலும் மிருகேந்திர னெதிரில் குள்ளநரி யொன்று வீரம்பேசி யார்த்ததைப்போல ஏனோர் பேசுதலைக்கேட்க எனக்கு என்னை யறியாமல் நகைப்புண்டாகின்றது. என்னை உடனே அனுப்பிப் பின்பு என் வீரத்தைக்கண்டு மகிழ்வீராக," என்றனன்.

அதனைக் கேட்டபின் அச்சுவகண்டன், கோதிலா மாரிபெய்த கோடையங் குன்றம்போலச் சிறிது உள்ளங்குளிர்ந்து கோபமாறினான். அப்பொழுது அச்சுவகண்டன் இளவலாகிய வச்சிரகண்ட னெழுந்து வணங்கி நின்று, " அண்ணால்! எமது ஆண்மை தொலைந்ததோ அன்றி யாங்கள் இழிந்தனமோ? எம்மினும் மிக்க வலிமையுடைய பகைவரும் உண்டாயினாரோ? யாங்களிருப்பத் தாங்கள் அளவற்ற கோபத்தை மேற்கொள்ளுதலும் அவர்களை யடக்கப் போருக்குத் தாமே செல்ல நினைத்தலும் தகுதியல்லவே. கருங்கடலி லோடத்தகும் பெருநாவாய் சிறுகயத்துட் சேருமோ? மேற்செல்ல நினைக்கும் பகைவரோ தானவரல்லர் வானவரல்லர், வலி சிறிது மற்ற மாநுடர். ஆதலால் தாங்கள் அவர்பாற்போர்க்கேகன் முறைமை யன்று. எம்மையேவி வென்றி கொள்வீராக," என்று வேண்டினான். ஏனைய தம்பிமார்களும் அரசிளங்குமரர்களும் தத்தம் பெருமையைப் பலபடப் பேசினார்கள்; அச்சுவகண்டன் கொண்ட கோபமும் மாறினான். பின்பு யாவரையும் நோக்கி, அரசன் நீதியி லயர்வில்லாமற் செய்யும் செயல்

பலவுள்ளன, என்றுகூறி விடுத்துத் தான் மந்திரசாலை யைச் சென்றடைந்தனன். அங்கு நிகழ்ந்த விவரமும் யானறிவேன் அவற்றையுங் கூறுகின்றேன்.

அச்சுவகண்டன் மந்திரசாலையை அடைந்தபொழுது அங்கிருந்த அரிமஞ்சு சேனைத்தலைவர்களை நோக்கி, சடியரசன் புதல்வியின் பொருட்டு நமது மன்னற்குண் டான கோபத்தை யாவருங் கண்டீர்களே. இனி நாம் மேற் செய்யற்பாலனவற்றைக் கூறுங்கள், என்று கேட்க, அப்பொழுது மேககூட நகரத்தையாளும் தூம கேது வென்பவன் நன்ருக ஆலோசித்து, நமது வெள்ளி மலையிற் பிறந்த மாட்சிமையுள்ள பெண்கள் திலகமாகிய அருங்கலத்தை நமது அரசனே பெறுதற்குரியவன். அவனையன்றியோ ரெளிய மாநுடப்பூச்சிக்கு வலியச் சென்றளித்த சடியரசனே பெருங் குற்றமுடையான், என்று கனன்று பேசினன். அப்பொழுது அனலபுரத் தையாளும் அரசன் அங்காரவேகன் எழுந்து, இரத நூபுரமன்னன் எம்மைப் பெரிதும் இகழ்ந்துள்ளான். அவனைக் கிளைகளோடும் கொன்று குவிக்க யாமனை வோரும் போவோம் வாருங்கள் சிறிதும் தாமதித்தல் தகாதென்று படபடப்புடன் பேசினன். பிறகு, அச் சுவகண்டன் உயிர்த்தோழனுகிய அரிசேனனென்பவன் எழுந்து நாம் யாருமில்லாவிடத்தில் அசுவமேதம் செய் வதுபோல் வீண் பேச்சுப் பேசுவதால் யாதுபயன். பகைவரைத் தொலைக்கவேண்டுமானல் என்னை யனுப் புங்கள் யான் போய் ஜயித்து வருகிறேன். அரசர்க் குரிய ஸாமம் முதலிய உபாயங்கள் இறத்தலை யஞ்சு வார்க்கன்றே கூறப்பட்டன. மந்திராலோசனையினுல்

வருவனவெல்லாம் இங்குத் தகாதன. இவற்றை யெல்லாம் விட்டு சதுரங்க சைனியங்களோடும் பலவிதப் படைக் கலங்களோடும் சென்று போர்செய்வதே முடிவான தீர்மானம் என்றனன். அச்சுவகண்டன் மிகவும் மனமுகந்து அவனை மெச்சி இவன் கூறியதே தக்கதென்றனன். உடனே, கருடத்துவசன் என்பவன் எழுந்து சொல்லுவான், "இப்பொழுது, பகைவரோடு தாமதமின்றிப் போர்புரிவதே தகுதியென்று தீர்மானமாய் விட்டபடியால், நாம் அவர்களோடு செய்யும் போர் மாநுடப்போரா அல்லது தெய்வப்போரா அதனை ஆராய்ந்து சொல்லுங்களென்றனன். அதுகேட்ட திருநிலையகத் தரசன் சிரீபாலனென்பவன் படைக்கலங்களின் நிலைமைகளையும் அவற்றைவிடுக்கும் முறைமைகளையும் எடுத்து இயம்புவானுயினான். வீரர்களே! போரில் வல்ல பெரியார் கருத்துக்கு இணங்க யான் கூறுவேன். யுத்தங்களில் உபயோகிக்கப்படும் ஆயுதங்கள், மாநுடப்படை, தெய்வப்படை, ஸங்கீரணப் படை என்று மூவகைப்படும். ஆயுதங்களைப் பிரயோகிக்கும் தொழில்களும், அஸ்திரவித்தை, சஸ்திரவித்தை, மாயவித்தை என மூன்றாகும். அவற்றுள் அஸ்திரமென்பது கைவிடும் படை; அம்பு, சக்கிரம், எறிவேல் முதலியன. சஸ்திரமென்பது கைவிடாப் படை; வாள், கதை முதலியன. அவற்றுள் அஸ்திரவித்தை நால்வகைப்படும். சஸ்திரவித்தை இருவகைப்படும். இவற்றின் விரிவையெல்லாம் எடுத்துரைக்கிற் பெருகும். அவற்றைவிடுத்து முற்கூறிய மூவகைப் படைகளுள்ளும் மக்களுடன் போர்புரிவதற்கு மனிதப்

படையே தக்கதெனினும், ஆண்டு நாம் போர்செய்யு மிடத்து விஞ்சையரும் நம்மை எதிர்ப்பராதலால் தெய் வப்படையும், மாயப்படையும் பிரயோகித்தல் இழுக்கா காது. ஆதலால், மூவகைப்படையும் கொண்டு எவ் வகைப்போரு மியற்ற ஆயத்தமாகச் செல்லுதலே நியா யம் என்று கூறி முடித்தான். அச்சுவகண்டன் இவன் கூறினது முழுவதும் சரியென்று அங்கீகரித்து அப் படியே செய்யுங்களென்று ஆஞ்ஞாபித்துப் பிறகு தன் அரண்மனையடைந்தான். அதன்பின்னர் அவ்விஞ்சை யருட் சில்லோர் நமது தக்கிணசேடியை யெரியூட்டு வோம் என்று கருதிச் சென்றனர். ஏனையோர் ஈண் டுப் போருக்குவரத் தயாராயிருக்கின்றார்கள். இவற்றை யெல்லாம் கண்டபின் யான் ஓடோடியும் வந்து தங்க ளைக்கண்டு நடந்தவை முழுவதையும் கூறுதல் எனது பெருங்கடமை என்று கருதிப் போந்தேன். இதனை யரசே யறிந்தருள்க'' என்று தூதுவன் கூறி முடித்தான்.

விஞ்சைய தூதன் கூறியதைக் கேட்ட சுவலனசடி யரசன் தன் மகன் அருக்க கீர்த்தியையும் மருகர் விஜய திவிட்டர்களையும் பயாபதியரசன் சிரீபாலன் முதலி யோரையும், ஒருங்கு சேர்த்து உத்தரசேடியில் அச் சுவகண்டன் முன்னிலையில் நிகழ்ந்தவை பலவற்றையும் தூதுவன் உரைத்தாங்குரைத்து, இனி நாம் மேல் செய் யற்பாலன யாவை என அவர்களைக் கேட்டனன். அப் பொழுதங்கு நின்ற வீரர்கள் பலரும் மானமும், சின மும் மூண்டவராய்ப் பல வீரவார்த்தைகள் பேசினார் கள். அருக்ககீர்த்தி எழுந்து, "பிதாவே! யான் எனது கையில் உள்ள சிலையை வளைத்து அம்பினைச் சிதறிப்

பகைவர்களைக் கண்டதுண்டமாக்கி இரத்தவெள்ளம் எண்டிசாமுகமும் புரண்டோட இயற்றுவேன். போர்க் களத்தில் என் ஆற்றலைப் பார்க்கலாம். இப்பொழுது வீண்பேச்சினு லாவதென்ன ? என்று சொல்லி முடித் தான். பிறகு, சங்கவண்ணனாகிய விஜயனெழுந்து, "நம்மோடு போர்செய்ய இந்திரன் வருவானாயின், அப்பொழுது ஆலோசித்து யுத்தம் செய்தல் வேண்டும். இம்மலையிலிருக்கும் வித்தியாதரப் புழுக்களுக்கு நாம் எள்ளளவும் அஞ்சவேண்டியதில்லை. இவர்களேயின்றி வேறெவரும் ஒருங்கு சேர்ந்துவந்து எதிர்ப்பினும் அவர்களுடைய மார்பமென்னும் வயல்களை எனது கைக்கலப்பையால் உழுது அரத்தச் சேறுண்டாக்கி வெற்றியாகிய விதைவிதைத்துப் புகழாகிய பயிரினை விளைப்பேன்'' என்றனன்.

இவ்விதமாகப் பலரும் பலபடப்பேச, முடிவில் திவி ட்டநம்பி யெழுந்து, "ஐய! இப்பொழுது பேசி யாவ தென்ன, வருகிற சேனைகள் எனக்குக் கண்டு விஞ்சியன் ரோ மற்றவர்கள் பொருவதற்கு. இதைப்பற்றிச் சிறி தும் யோசிக்கவேண்டாம். பகைவர்கள் போருக்கு வரும்பொழுது வரட்டும்'' என்று கூறினான். சுவலனசடி மிகவும் களித்துத் திவிட்டனை நோக்கி, "அழகிய நறு மணங் கமழும் அலங்கலையுடைய அரசகுமாரனே! இன்னும் நீ யறிதற்குரிய வித்தைகள் இரண்டொன்று உள்ளன. அவை மாயவித்தைப் பயிற்சியும், மந்திரோ பதேசமுமே. அவற்றையும் இப்பொழுதே பெற்றுக் கொள்வாயாக'' என்று அவன் வலக்காதில் கிரமப்படி மாயமந்திரத்தையும் அவற்றைப் பயிலும் முறையினை

யும் உபதேசித்தருளினன். அரசகுமாரன் அம்மந்திரத்தைத் தனது நெஞ்சத்திலே பதித்து நினைத்தமாத்திரத்தில், மாயாதேவதை ககனமார்க்கமாய் அங்குவந்து ஏனையோர் கண்ணுக்கு அசரீரியாய் இவனது கட்புலனுக்கு வெளியாய் இவனைப் பணிந்துநின்று, நினக்கு யான் செய்யும் பணிவிடையாதென, அவன் அத்தெய்வத்திற்கு வந்தனை வழிபாடியற்றி, உன்னை யான் நினைக்கும்பொழுது என் எதிரில் வந்து உதவிபுரிக, என்று கூறி, அதனை அதனிடம் செல்ல விடுத்தான். இவ்விதம் மாயவித்தையிலும் தேர்ந்து கற்பலோகாதிபதியென்ன எல்லாவுலகும் தன்னடியின் கீழ்ப்பொருந்தத், திவிட்டகுமாரன் போதனமாநகரத்து யாவருடனும் களித்திருக்கும்பொழுது ஆகாயமார்க்கமாய் இரண்டு விஞ்சைய தூதர்கள் வந்து தோன்றி, நாராசம்போற் சில வார்த்தைகள் புகல்வாராயினர். "அரசர்களே! யாங்கள் உத்தரசேடியை யாளும் அச்சுவகண்ட மகாராஜனனுப்பிய தூதர்கள். யாங்கள் உங்களுக்குக் கூறவந்த விஷயத்தினை யாவரும் கேட்பீராக. நீங்கள் இரதநூபுர சக்கிரவாளகிரி யரசனாகிய சுவலனசடியரசன் கன்னியைத் தருகின்றீர்களா, அன்றி அக்கன்னியை மணந்த திவிட்டராஜன் சென்னியைத் தருகின்றீர்களா, இரண்டிலொன்று விரைந்து கூறுக" என்று கூறினார்கள். அப்பொழுது திவிட்டராஜனுக்குப் பொருங்கோபம் மூண்டது. கண்களில் தீப்பொறி பறந்தன. இதழ்கள் துடித்தன. தேகமுழுவதும் வெண்கதிர்முத்தமென வியர்த்தது. அப்பொழுது திவிட்டராஜன் அண்டமுகடுற வளர்ந்து தனது தெய்வத்தன்மையுள்ள விச்சுவ

ரூபம் எடுத்தனன். தேவர்கள் ஆகாயத்திற்கூடி மலர் மழைசொரிந்து அவனை வணங்கிப் போற்றினர். திவிட்டன், அச்சுவகண்டன் தூதர்களை நோக்கிப் பேதைகளே! அடாமொழி பிதற்றிய நீங்கள் தூதர்களாதலின் உயிரோடு தப்பினீர். இல்லாவிடில் உம் ஆவி நில்லாதொழியும். ஆதலின் நீங்கள் இங்கு இனி அரைக்கணமும் தாமதியாமல் ஓடி உமது அறிவறை போகிய அரையனாகிய குதிரைக் கழுத்தனிடம் சென்று இங்குப் போர்க்கு வரச்சொல்லுங்கள், என்று கூறி வெருட்டிவிட்டான். அவர்களும் நில்லாதகன்று ஓடினார்கள். மற்றைய அரசர்கள் திவிட்டராஜன் பெருமையை மகிழ்ந்து அச்சுவகண்டனுக்கு ஆயுள்நாள் குறுகியதாதலின் இத்தகைய தூதுவிட்டனன். பேதை பெரிதும் பிழைத்துளான், ஆதலின் இனிச்சிறிதும் பிழையான். அவனது ஆஜ்ஞாசக்கிரத்தையும் செல்வத்தையும் பறித்து இத்திவிட்ட குமாரர்க்கே யளித்தபின் நமது வல்லபத்தை யறிவான். அதற்குமுன் அறிதற்கு அரியான். இச்சடியரசன் கன்னி திவிட்டனை மணந்த செய்தியை முன்னரே யறிந்திருந்தும் அக்குதிரைக் கழுத்தன் தன் மலைமேலிருந்து வீரம் பேசுவது சிங்கஙளைப் பார்த்து நாய் குரைத்ததுபோலாகும். இதுவோ அவனது வீரமென்று பேசி, அவனை மூடனென்றும் மதிகேடனென்றும் வாயார ஏசி, அவனது தூதர்களை ஓடுங்களோடுங்களென்று கைவிரித்து வீசி, அவர்களை நோக்கி, மதிகெட்ட மன்னன் தூதுவர்களே, உமது அரசனுக்கு உயிர் வேண்டுமாயின் உடனே வந்து திவிட்டனைப் பணியச்செய்க, மானம் வேண்டுமாயின் விரைவில்

வந்து போர்புரிந்து மாளச்சொல்லுக, என்று கூவினார்கள். ஓடும் தூதுவர்கள் இவற்றையும் கேட்டுக்கொண்டே குதிகால் பிடரியிற்பட விரைந்து போயினர். அவ்வமயம் ஆகாயவாணி, “நாளையே இத்திவிட்டன் அச்சுவக்கிரீவனை வென்று வாகை சூடுவான்” என்று யாவரும் கேட்க உரைத்தது. அப்பொழுது அனைவருங் களித்தனர். தேவதுந்துபிகள் முழங்கின. போதனமாநகரமெங்கும் உவகைமிக்கு நிறைந்தது. திவிட்டராஜன் தனது திருமேனியைச் சுருக்கி வழக்கம்போல் எதிர் நின்றனன். அவனது திருமேனியிற் றிவ்விய தேஜோமயமான ஒரு சோதி திகழ்ந்தது. ஆடவர்க்கு வலக்கண்ணும் வலத்தோளும் துடிப்ப, மடவார்க்கு இடக்கண்ணும் இடத்தோளும் துடித்தன. யுத்தாயுதங்கள் பலவும் தாமே சோவையுற்று துலங்கின.

இவ்விதமாகிய நற்சகுனங்கள் போதனமாநகரத்தினிகழ, இவர்தம் மாற்றலனாய அச்சுவகண்டனுடைய இரத்தினபல்லவத்தில் பல தீச்சகுனங்கள் நிகழ்ந்தன. முரசவாத்தியம் முதலிய பறைகளில் சர்ப்பமாதிய விஷஜந்துக்கள் குடிகொண்டன. கொற்றவன் குடையினடுவில் உட்புறத்தில் தேன்கூடுகள் உண்டாகித் தொங்கின. தேர்ச்சிகரங்களில் அண்டங்காக்கைகள் கூடுகட்டின. நகரமெங்கும் இரத்தமழை தூறிற்று. வீதிகளிற் கவந்தங்கள் எழுந்தாடின. மாதர், தம் இயல்பு திரிந்து வாய் குளறி மெய்ம்மறந்து நின்றனர். அவர்தம் காதணியும் மங்கல நாணும் தாமே கழன்று விழுந்தன. ஆயுதவாய்கள் கருக்கிழந்து துருப்பிடித்தனவாய்க் கூர் மழுங்கின. ஆடவர் இடத்தோளும் இடக்கண்ணும்

துடிப்ப, மாதர்க்கு வலத்தோளும் வலக்கண்ணும் துடித்தன. சேனைகளினிடையே வானமீன்கள் உதிர்ந்தன. வீரர்கள் கையிலுள்ள வில், வாள், வேல், முதலிய படைக்கலங்கள் தாமே நழுவி விழுந்தன. இவைபோல எண்ணிலாத பல தீச்சகுனங்கள் நிகழக்கண்டும் ஏதம் யாதும் வாராதென்ன மதித்து, மானுபரணமே தலைக் கொண்டு அவ்வித்தியாதரர்கள் அனைவரும் எத்திசையும் யுத்தசன்னத்தராய் விளங்கினர். விஞ்சையபுரத்தில் இங்ஙனமாகப் போதனம் சென்று மீண்ட தூதுவர்கள் அரசனையடைந்து நடந்தவற்றைக் கூறினார்கள். அச்சுவகண்டன் படத்தின்மேல் அடிகொண்ட நாகம்போலழன்று சீறிக் கொடுவிடத்தைக் கக்கினாற்போலத் தன் முன்னின்ற சேனை வீரர்களை நோக்கி, "நீங்கள் போதனமாபுரம் சென்று புரவலனை பயாபதியையும் தவறுசெய்த தீயனாகிய சடியரசனையும் மற்றும் அவரைச்சார்ந்த மன்னர்களையும் கொன்று தொலைத்து வீரம்பேசிய திவிட்டனையும் சடியரசன் கன்னியையும் என்கையால் தண்டமிறுக்கும்படி உயிரோடு பிடித்து வாருங்கள்" என்று ஆஜ்ஞாபித்தான். உடனே வித்தியாதர வேந்தர்கள் யாவரும் கடல் கிளர்ந்தாற்போல நால்வகைப் படையுடன்வரப் போதனமா நகரை நோக்கிப் போருக்குப் புறப்பட்டனர். முரசதிர்ந்தன, சங்க முழங்கின, பறைகள் கறங்கின, வீரகண்டாமணி ஒலித்தன, குடை, கொடி, சாமரங்கள் எங்கும் நிறைந்தன. இவ்விதமாய்ப் பல விருதுகளோடும் வித்தியாதர சைன்னியங்கள் ஆகாயமார்க்கமாய்ப் படர்ந்து மங்கல மணக்கோலம் சிறிதும் மாறாதிருந்த போதனமா நகரத்தில்

வந்து இழிந்தனர். அதனைக்கண்ட திவிட்டன் படைகள் பொங்கி எழுந்து ஆரவாரித்தன. பூமியெங்கும் பூகம்பத்தில் அதிருவதுபோல் நிலைகுலைந்தன. யானை, தேர், புரவி, காலாள் எங்கும் நிறைந்து எள் விழுவதற்கும் இடம் சிறிதும் இன்றி இருத்தலான், அப்பொழுது வெற்றிடம் காண லரிதாயிற்று. இரண்டு சைனியங்களுக்கும் உடனே யுத்தம் மூண்டது. தேர் வீரரோடு தேர்வீரரும், களிற்றோடு களிறும், புரவியோடு புரவியும் மலையுங்கால், மலையோடு மலையும் முகிலோடு முகிலுங் கடலோடு கடலும் உருத்தெழுந்து வருவனம்போலத் தொந்தயுத்தம் செய்தனர். பதாதிகள் பதினெண்வகைப் படைக்கலங்களையும் பற்றி வெட்டியும், குத்தியும், அடித்தும், நசுக்கியும் தகர்த்தும், நொறுக்கியும், பல வேறு சமரம் புரிந்தனர். அப்பொழுது சடியரசன் மகன் அருக்ககீர்த்தி, படைமுகத்திற் சென்று நின்று தனது ஒரு சிலையினை இருகாலும் பொரவளைத்து பாணப்பிரயோகம் செய்தனன். அவனது பிறைமுகக் கணைகளால் பகைவர்சேனை, கரம் வேறு சிரம் வேறு கால் வேறு தோள் வேறு தொடை வேறு படை வேறாகச் சின்ன பின்னமாய் உடைந்து சிதறுண்டு வெந்நிட்டன. அருக்ககீர்த்தி தூணியினின்று பாணமெடுப்பதும் தொடுப்பதும் விடுப்பதும் ஒன்றையும் எவரும் கண்டிலர். பகைவர்கள் தொலைந்ததையே கண்டனர். எங்கும் இரத்தவெள்ளம் பரந்தோடியது. அருக்க கீர்த்தியோடு நெருக்கிப் போர்செய்யத் தனிவீரர் எவரும் இன்மையால் பலரும் ஒருங்குகூடித் தங்கள் கையிலுள்ள அஸ்திர சஸ்திரங்களை வீசி யெறிந் தார்ப்பரித்துப் போர்

செய்தனர். திவிட்டராஜன் படைஞர் அருக்க கீர்த்திக்கு யாதுவிளையுமோ என்று அஞ்சினர். அருக்க கீர்த்தியோ தான் ஏறிய தேரினைக் குயவன் திகிரிபோலத் திரித்துக் கோடிக்கணக்கான அம்புகளை நொடிக்குள் விடுத்து மாற்றார் எறிந்த படைக்கலங்களை வழியிலேயே வெட்டி வீழ்த்தித் தன்னை எதிர்த்தவர்களையும் சின்னபின்னமாகத் துண்டித் தெறிந்தனன். அவன், மேலும் மேலும் சாயகங்களைப் பாயத் தொடுத்தலில் நாற்புறமும் சூழ நின்ற பகைவர் சேனை ஒருமுகமும் நில்லா தொழிந்தது. பாற்கடலைக் கடைந்த மந்தரம்போல் அருக்ககீர்த்தி விளங்குவானாயினான். மாற்றார் சேனை அருக்கனைக்கண்ட பனிபோல் அவன் முன் நில்லா தழிந்தது. ஆகாயப்பரப்பு முழுவதும் அவன் விட்ட பிறைமுகச்சிலீமுகங்களேயன்றி வேறொன்றும் புலப்படாதாயிற்று. அவன் விடுத்த அம்புகள் பகைவர் யாங்குளர் என்று தேடித் திரிவனபோலத் திசைதொறும் சென்று மீண்டன. வந்த வித்தியாதரசேனை நிலைகுலைந்து மாண்டு தொலைந்தது. இறந்துபட்ட வீரர்களுக்கிடையே ஒளிந்துநின்ற சில வீரர் ஸமயம் பார்த்துப் புற்றினின்று வெளிக்கிளம்பும் விடநாகம் போல் போர்க்களத்தினின்று கிளம்பி ஆகாய மார்க்கமாய் ஓட்டமெடுத்தார்கள். இவற்றையெல்லாங் கண்ட விஞ்சைய தூதர்களிற் சிலர் விரைந்தேகி இரத்தின பல்லவத்தையடைந்து அச்சுவகண்டன் காலில் விழுந்து, ஐயனே! நமது சேனைவீரர் போதனமாநகரம் போய்ப் போர்செய்து அருக்ககீர்த்தியின் கையம்புகளால் மாய்ந்தொழிந்தார்கள். சேனைகள் சென்றவிடம்

தெரியோம். எஞ்சிநின்றவர் ஆகாயமார்க்கமாய்ப் போய் மலைக்குகைகளில் ஓடி ஒளித்தனர். மாற்றலர்கள் சேனை சிறிதும் சேதமடையவில்லை. ஒருவனே இத்தனைக் கோலங்கண்டனன், என்று சாலவும் ஓலமிட்டனர். தூதர்கள் கூறிய வார்த்தை உருக்கிய செம்பினைக்காதினில் வார்த்ததுபோல் உளம்பதைத்து மெய் கூசி அச்சுவகண்டன் எழுந்து மனமடங்காக் கோபம் கொண்டு அளவற்ற பல பராக்கிரமங்களுடைய படைகளோடும் தம்பிமார்களோடும் புதல்வர்களோடும் வீரவாதம்பேசிக் கிளம்பினன். அத்தறுவாயில் இரதநூபுரத்தின்மேற் சென்ற படை முறிந்து முதுகிட்டோடிய செய்தியைத் தூதர்கள் கூறி அழுதனர். அரசன் தனது படைகளை நடாத்தி அருங்கலமென்னும் பெரும்பேர் பெற்ற மலையொன்றினை யடைந்து, பாசறைவிட்டுத் தங்கினன். வரும் வழியில் அச்சுவகண்டன் தம்பிமாருள் முதல்வனுன இரத்தினகண்டன், நமது இறைவன் வருந்த இடர்புரிந்த சடியரசனை அவன் கிளைகளோடு சங்காரஞ்செய்து அவன் கன்னியையும் அவள் கணவனையும் சித்திரவதை செய்வோமென்றும், இன்றேல், உயிர்வாழ உடம்படோம், என்றும் உரத்துக் கூவினன். அவன் தம்பி நீலகண்டன், புவியிலுள்ள மாநடப் பூடுகள் எம்மோடெதிர்ப்பின் சூறைக்காற்றில் எதிர்ப்பட்ட இலவம்பஞ்செனு நாற்றிசையும் சிதறுண்டு போவதன்றி எதிர்த்துநிற்கும் வலிமையினவோ, என்று தன் வளைந்த கோரதந்தங்கள் வான்பிறையெனத் திகழ்ந்தொளிவீசப் பெருநகை நகைத்து உறுமினன். அவன் பின்னவனாகிய வைரமாகண்டன், யானை மருப்

பனைய நீண்ட கோரப்பற்களை யுடையான், தனது முன்னோரை நோக்கி, நீவிர் இங்கே இளைப்பாறுங்கள், யான் ஒருவனே பகைவர்மீது சென்று அவர்களைப்பற்றிச் செக்கிலிட்ட எள்ளைப்போல் நொறுங்கப் பிழிந்து வருவேன், என்று கதறினன். இவனது தம்பி சுகண்டன், பக்ஷிராஜனாகிய கருடனை யெதிர்க்கும நாகங்கள்போல மனிதரோ நம்மொடு எதிர்ப்பவர்? இது விந்தையினும் விந்தை, என்று கையோடு கைதட்டி மூக்கின்மேல் விரல் வைத்து அண்டகடாகமும் வெடிபட ஆர்ப்பரித்து நகைத்தான். இவற்றையெல்லாம் கேட்டு அச்சுவகண்டன் அகங்குளிர்ந்து அவர்களை நோக்கி, துணைவரே, நமது பெருமையினைச் சிறிதும் கருதாத பகைவரைப் போர்க்களத்துக் கொன்று குவித்து உங்கள் புகழினை எக்காலத்தும் அழியாது நிலைநாட்டுக, என்று பணித்துப் பகைவர்மேற் றனது சேனையை நடாத்தினன். திவிட்டகுமாரன் சேனைகளும் இவற்றுடன் நஞ்சுடன் நஞ்சு எதிர்த்துப் போர்புரிவதுபோலக் கைகலந்து யுத்தம் செய்தன. இருதிறச் சேனைகளும் இவ்வளவினவென்று மதிப்பிட்டுக் கூறுதல் முடியாதெனினும் பெரியார் கூறியபடி இரண்டும், இரண்டு கடலளவின என்று கூறின், சிறிதும் இடைவெளியில்லாத இப்படைகளுக்கு இடைஇடையே திடர்களையுடைய கடல்களையோ உவமைகூறுதல் நியாயமாகும்? இருபடைகளும் பலவேறு விதமான படைக்கலங்களைக் கொண்டு நெடுநேரம் போர்புரியாநிற்பச் சேனாவீரர்களும் தாம் தாம் நின்றவிடங்களிலிருந்தே கடுஞ்சமர்செய்து பகைவர்களைப் பலவிதமாகக் கொன்று திரிந்தனர்.

அப்பொழுது அச்சுவகண்டன் தோழனாகிய அரிசேனனென்பவன், வலக்கையில் தவஞ்செய்து வரமாகப் பெற்ற வாளாயுதத்தை யேந்தி இடக்கையிற் கேடகத்தைத் தாங்கி, இறக்க விதியுள்ளார்கள் எதிர்த்து வாருங்கள், தப்பிப்பிழைக்க வேண்டியவர்கள் ஓடவழிபாருங்கள், என்று இடிபோல அதிரமுழங்கிக்கொண்டு வந்தனன். அவனைக்கண்டு அருக்ககீர்த்தி தன் வில்லைவளைத்து நாணேற்றி அம்புவிடுக்க முயலும்போது அவன் சேனாவீரனாகிய வியாக்கிரரதன், ஐயா! இவனோ நினக்கு நிகர்; நேரில்லாதவனோடு போர்செய்தல் நியாயமா? யானே இவனோடு போர்செய்வேன், என்றுகூறி விடைபெற்றுச்சென்று அரிசேனனை எதிர்த்தனன். வியாக்கிரரதன் அரிசேனனைநோக்கி, ஏ! மூடா, நீ என்னை நெடுங்காலமாக அறிவாயே. ஆதலால் என்னை எதிர்த்துப்போர்செய்ய வருவாய், என்று அறைகூவி அழைத்தனன். அப்பொழுது அரிசேனன், அடே! வியாக்கிரரதா! உன்னை யான் நன்றாக அறிவேன். வித்தியாதர மங்கையினை ஓர் ஏழைமானுடனுக்குக் கொடுத்து மணநடாத்தின இந்த விவாகவீட்டில் ஆறுகாலமும் சோறுதின்னும் சுத்தவீரன் என்று உன்னை நான் நன்கறிவேன், என்று பழித்துரைத்தான்.

இதனைக்கேட்ட வியாக்கிரரதன் அரிசேனனை நோக்கி, அடே! பேதாய், மங்கையர் மணம் ஊழ்வினையின்படி நடக்கும். இஃது பெரியார்கொள்கை. இதனை யறியாமல் அச்சுவகண்டனோடு நிர்மூடனாகிய நீயும் போருக்கு வந்தனை. என்னாற்றலை இன்னும் நீ யறியாய். விரைந்து போர்செய், என்று நெருங்கினான்.

இருவரும் தத்தம் வாட்களையுருவி வீசிக் கேடகங்களை இடக்கைகளிற்றாங்கி இடசாரி வலசாரியாகக் காற்றாடி போலச் சுற்றித் தாம் கற்ற வல்லபத்தை யெல்லாங் காட்டினர். வாட்படையில் நிகரற்ற இருவரும் நெடு நேரம் போர்செய்தனர். அப்பொழுது வியாக்கிராதன் அரிசேனன்மேல் விரைந்துதாவி அவன்வீசும் வாட் படையை மாற்றி அவனை இருதுண்டங்களாகப் பிளந்து வீழ்த்தினான். இதனைக் கண்ட வித்தியாதரசேனை அஞ்சி யோடிற்று. திவிட்டன் படைகள் வெற்றி முரசறைந்து கடல்போல ஆரவாரித்தன. அப் பொழுது அச்சுவகண்டனைச் சார்ந்த குணசேனனென் னும் சேனாவீரன் முன்வந்து சேனைகளைச் சின்னபின்ன மாக நொறுக்கும்பொழுது அருக்ககீர்த்தியின் படைத் தலைவனாகிய இந்திரகாமன் அவனை எதிர்த்துத் தன் கைவாளினால் அவனைக்கொன்று வீழ்த்தினான். குண சேனன் இறந்ததைக்கண்ட அவன் நண்பன் வரசேன னென்பவன் கட்டார்ந்த வில்லினை இடக்கையினிற் பற்றி அம்பறாத் தூணியை முதுகிற் செறித்து நாணி தெறித்துக் கூரிய அம்புமழையினைச் சோனாமேகம் போலச் சொரிந்துவந்தனன். அதனைக்கண்ட அருக்க கீர்த்தியின் சேனைத்தலைவருள் ஒருவனாகிய காமுக னென்பவன் தானும் வில்லைவளைத்துக் கொடுஞ்சமரி ழைத்துத் தன் கைக்கணைகளால் அவனைப் பிளந்தெறிந் தான். வரசேனன் மரித்ததைக்கண்ட அச்சுவக்கிரீ வன் படைஞனாகிய அரிகேதனன், கொடியசூலம் ஒன் றையேந்தி படைகளைக் கலக்கிவந்தனன். அவனை வியாக்கிராதன் எதிர்த்து கடும்போர் செய்தனன். இரு

வரும் நெடுநேரம் மாயயுத்தம் புரிந்தார்கள். அரிகேதனன் தனது சூலத்தைச்சுழற்றிப் பகைவன்மீது எறிந்து ஆரவாரித்தனன். வியாக்கிரரதன் தன் கைவாளினுல் அச்சூலத்தினை இருதுண்டம் செய்து பகைவன் சிரத்தையும் தடிந்தான். அப்பொழுது வித்தியாதர சேனை அஞ்சிப் புறமிட்டோடியது. உடனே மேககூடாதிபதியான தூமகேதனென்னும் சுத்தவீரன், மதயானை ஒன்றின்மீது ஆரோகணித்து அழியாத வைரக்கவசம் ஒன்றைத்தரித்துக் காலனும் அஞ்சும் கடுந்தண்டமொன்றைக் கையிலேந்தித் திவிட்டராஜன் சைனியத்தைக் கலக்கினுன். கதாயுத்தத்தில் எவரும் தனக்கு இணைஇல்லையென்று பெரும் புகழ்படைத்த தூமகேதுவைக் கண்டவுடன் நமது திவிட்டன்சேனை பெருங்குழப்பமுற்றது. அப்பொழுது சடியரசனின் இளவலாகிய சுவலனரதன் மலையன்ன பெருங்கதை யொன்றைக் கையிலேந்தித் தூமகேதுவை எதிர்த்து கொடுஞ்சமராடினன். கதாயுத்தத்தில் வல்லவராகிய இருவரும் ஒருவருக்கு ஒருவர் இடையாமல், தட்டியும், குத்தியும், அடித்தும், தகர்த்தும், இடசாரி வலசாரியாகச் சுழன்று யுத்தகளமெங்கும் தாமேயாய்ச் சுழன்று வெஞ்சமராடினர். தேவர்களும் வியந்து கண்புதைத்தனர். இறுதியில் சுவலனரதன் கைத்தண்டால் தூமகேது முடிசிதறி விழுந்து வீந்தனன். புகைக்கொடியோனும் இப்புவியில் ஒருவன் கையால் இறப்பனோவென்று அச்சுவகண்டன் சேனை அஞ்சி ஓட்டம் எடுத்தது. அவ்வமயத்தில் அநலமாபுர மன்னவனுகிய அங்காரவேகன், ஓடும் சேனையைக் கையமைத்து நிறுத்தி மிக்க தைரியம்கூறி

மீளவும் உடன்கொண்டுவந்து எதிர்த்தான். அவனுக்கும் திவிட்டன் சேனுவீரனுகிய தேவசேனனுக்கும் பெரும்போர் மூண்டது. வாளையும் வடிவேலையும் கொண்டு இவ்விருவரும் தோள்வீசி வீரவாதம்பேசி ஆரவாரத்தோடு செய்தபோரின் வல்லபத்தை ஈராயிரம் நாவுடைய ஆதிசேடனுலும் நவிலமுடியாது. இவர்கள் நெடுநேரம் போர்புரிந்த பின்னர் அங்காரவேகன் இத்துணைநேரம் இவனோடு போர்புரிவதா என்று சினந்து தவருதவேல் ஒன்றினைத் திரித்துத் தேவசேனன்மீது வீசினுன். தேவசேனன் அதைத் தனது மணிகேடகத்தான் ஒருபுறம் விலக்கித் தனது வடிவாளினுல் இருதுண்டம் கண்டனன். எறிந்தவேல் இருகண்டமானதைக் கண்ட அங்காரவேகன் மற்ருெரு வடிவேலையேந்தி ஆர்ப்பரித்து மேல்வரவும், தேவசேனன் அவன் வேற் படைபிடித்த தோளைவெட்டி வீழ்த்தினுன். அங்காரவேகன் எஞ்சிய மற்ருெரு கையில் வாளெடுத்து யுத்தகளமுழுவதும் தானொருவனே வீரன் என்று கொண்டாடப் பகைவரைக் கண்டதுண்டமாக வெட்டித் தேவசேனன்மீது படநாகம்போலச் சீறிவந்தனன். தேவசேனன் அவன் இடக்கையாற் செய்யும் அரிய யுத்தத்திற்கு வியந்து மகிழ்ந்து மனமிரங்கி, "அங்காரவேக! நீ சுத்தவீரருட் சிறந்தோனென்பதற்கு ஐயமின்று. நீ ஒரு கையுடன் யுத்தம் செய்கின்றனை; வலக்கையை இழந் தெய்த்தனை. உன்னுடன் போர்புரிதல் தருமமன்று. இனி நீ போர்புரியவேண்டாம், போய்விடு" என்று சொல்லவும் சிறிதும் கேளாமல் மீளவும் எதிர்த்துப் பெருஞ்சமர் இழைக்குமளவில்

தேவசேனன் தற்காப்பினையுன்னி அவன் தலையினை வெட்டி வீழ்த்தினான். இங்ஙனம் மஹாபராக்கிரம சாலியான அங்காரவேகனைச் சடியரசன் மைத்துன னான தேவசேனன் தன் கைவாளால் தடிந்தான் என்று வித்தியாதரசேனை பேரிரைச்சலுடன் அலறிக்கொண்டு பின்னிட்டது. அதன்பின் விஞ்சையச் சிரேட்டனும் ஒப்பற்ற போரினைச் செய்பவனுமாகிய கருடத்துவசன் திவிட்டன் படைகளை எதிர்த்து சமர்செய்தனன். அப் பொழுது சுவலனசடியரசன் அரசுவா ஒன்றின்மேல் ஆரோகணித்துச்சென்று வில்லேவளைத்து அமோகமான பாணங்களைச் சிதறிக் கருடத்துவசனை எதிர்த்தனன். அப்பொழுது உவணகேது சடியரசனைநோக்கி, ஐய! நீவிர் வயது முதிர்ந்தகுரவர். ஆதலின் நம்மோடு போர்புரிதல் தக்கது ஒன்றன்று. நரைமேலிட்டு முதிர் ந்த யாக்கையினை யுடைய உம்மோடு யான் போர்புரிவது என் புகழுக்கும் அழகின்றித் தருமவிரோதமாகவும் உள்ளது. ஆதலின் இளையரும், வலியருமாகிய ஏனை யோர் என்னை வந்து எதிர்க்கட்டும், என்றனன். இத னைக்கேட்ட சடியரசன், அன்பனே! நீ கூறிய முறைமை தகுதியற்றது. குரவரென்னும் உபசாரத்தை அம்மட் டோடு நிறுத்துக. படுகளத்தில் ஒப்பாரி பார்ப்பவரும் உன்ரோ? எனக்காக நீ மனமிரங்கல் வேண்டாம். யாவரேயாயினும் எதிர்த்தவர்தம்மோடு போர்புரி தலே நீதி என்னும் யுத்தமுறைமை நீ நன்கு உணராய் போலும். போர்புரிந்த பின்னர் நான் வலியனோ வலி யிலனோ என்பதை எனக்கு உணர்த்துவாய், என்று சீறிக் கூரிய அம்புகளை அவன்மேல் விடுத்தனன். இரு

வருக்கும் அற்புதமான விற்போர் நிகழ்ந்தது. சிறிது நேரத்திற்குட் சடியரசன் தன்பகைவன் வில்முதலிய வைகளை அறுத்துத்தள்ளி அவன் இயற்றிய மாயத்தையும் குலைத்தனன். அதனைக்கண்ட கருடத்துவசன் விட்டேறு, சக்கிரம், பிண்டிபாலம் முதலிய ஆயுதங்களை வீசி ஆர்த்துப் போர்செய்தனன். சடியரசன் அவனெறிந்த படைக்கலங்களைத் தன்னம்புகளால் கண்டித்து, அவனேறிய யானையையும் கொன்றனன். கருடத்துவசன், மிகச் சினம்கொண்டு, வாளும் கேடகமும் கைக்கொண்டு, சடியரசன் மேற்றாவினான். சடி, திடீரென்று சில அம்புகளை ஏவி, மற்றவனுடைய வாள்பிடித்த கையையும் சென்னியையும் அறுத்துத் தள்ளினன். கருடத்துவசன் வானுலகேறியதைக் கண்ட வித்தியாதரசேனை மிகவும் வாட்டமுற்றுக் கலங்கி இனி எம்மாற் போராற்ற இயலாது, என்று கூறிக்கொண்டே போர்க்களத்தைவிட்டு ஓடிப்போயின. அச்சுவகண்டன்சேனை இங்ஙனம் ஓடுவதையும் திவிட்டராஜன்சேனை மனக்களிப்புடன் குதூகலிப்பதையும் கண்டு ஒப்புயர்வற்ற வீரனாகிய ஸ்ரீசேனனென்பவன் கரைபுரண்டுவரும் கடல்போல் ஓடும் சேனையைத் தடைப்படுத்தி நிறுத்தி ஓ! விஞ்சைய மன்னர்களே, வாளும் வேலும் முதலிய படைக்கலங்களை ஏன் வீணுக்குச் சுமந்தீர்? யுத்தகளங்களில் வந்துதோற்று ஓடுகின்ற நீங்களும் ஆண்மக்களோ? இங்ஙனம் புறமிட்டோடினால் நாளை உங்கள் பன்னியர் கண்ணில் எங்ஙனம் விழிப்பீர்? அழியும் இவ்வூனுடலைச் சுமந்து எக்காலத்தும் அழியாத புகழினை விட்டோடுகின்றீர்களே, உங்கள் பேதைமை என்

னே. மானத்தைவிட்டு மண்ணில் வாழுவதினும் உலகிற் புகழினைநிறுத்தி வீரசுவர்க்கம்மேவி எல்லையற்ற போகத்தினை அனுபவித்தல் பெருமையுடைத்தன்றோ? தன் மயிர் ஒன்றினை இழப்பினும் உயிர்வாழாத கவரிமாவினைக் கண்டிலீர்களோ? மீண்டுசென்று போர்புரிய என்னுடன் வாருங்கள், என்று ஸ்ரீசேனன் கூறியதைக் கேட்ட வித்தியாதரசேனை அவனுடன் மீண்டது. ஸ்ரீசேனன், தன்வீரமாகிய பிரகாசத்தினைப் பரப்பிப் போர்க்களமுழுவதும் தன் புகழ் விளங்கச்செய்தனன். இருபடைக்கும் கடும்போர் நிகழ்ந்தது. அப்பொழுது இருதிறத்தாரிலும் பலர் மாண்டனர். ஸ்ரீசேனன், தந்துவாம்பரி ஒன்றின்மேல் இவர்ந்து பலவித மாயப் போர்களை யியற்றி, என்னுடன் போர்புரிய வல்லவர்கள் பொரவருக, என்று அறைகூவி அழைத்தனன். அப்பொழுது திவிட்டன் சேனாபதியில் ஒருவனான ஸ்ரீபாலன் என்பவன், தானும் ஓர் குதிரைமேலேறி அவனை எதிர்த்து அமராடினன். இருவரும் நெடுநேரம் பற்பலவித யுத்தங்கள் புரிந்து முடிவில் ஆகாயத்திற்சென்று போர் செய்தனர். ஸ்ரீபாலன் கைவாளினால் ஸ்ரீசேனன் தலையற்று விழுந்ததை யாவரும் கண்டனர். அப்பொழுது வித்தியாதரசேனை மீட்டும் முதுகுகாட்டியோடிற்று.

இதனைக்கண்ட அச்சுவகண்டன் மகன் கனகசித்திரன், அஞ்சி ஓடுபவர்களைத் தகைந்து அனேக வசைமொழி பேசி மீட்டுக்கொண்டுவந்து, தானவரும் வானவரு மின்றி எளிய மானவருக்கே நம்மவர் அஞ்சி ஓடினர். இஃது விந்தையினும்

விந்தை, என்று பெருங்கோபம் கொண்டு, தான் தவம் செய்து கடவுளருளாற்பெற்ற வடிவாளினைக் கையிற் பற்றித் திவிட்டராஜன் சேனையிற் புகுந்து எவரையும் கண்டதுண்டமாய்வெட்டி வீழ்த்தி அரிய யுத்தம் செய்தனன். போர்க்களத்தில் யாண்டு நோக்கினும் கனகசித்திரனே விளங்கினான்; அவன் உருவமே எங்கும் தோன்றிற்று. அவனை எதிர்த்த அரசர்கள் சின்ன பின்னமாய் வெட்டுண்டு தொலைந்தனர். யானைகளும், குதிரைகளும், அளவின்றி மடிந்தன. மேருவனைய இரதங்கள் பல பொடிப்பொடியாய்த் தகர்ந்தன. போர்க்களத்தில் உதிரவெள்ளம் அலைவீசி ஓடிற்று. திவிட்டன் சேனை இவன் ஒருவனுக்குச் சிறிதும் ஆற்றாது முதுகு காட்டி ஓடிற்று. கனகசித்திரன் ஒன்றியாய் வாட்போராடச்சென்ற விஷயத்தினைக் கேள்வியுற்ற அச்சுவகண்டன் தம்பியர் நால்வரும் அவனுக்கு உபபலமாக வேண்டி, யானைகளின்மேல் ஏறிக்கொண்டு சமர்க்களம் புக்கு அவனுடன் சேர்ந்து என்றும் கண்டறியாத பெருஞ் சமரியற்றினர். அவண், ஆற்றாது தோற்று ஓடிய வித்தியாதர சேனையும் அவ்வமயத்திற் றிரும்பிவந்து போர்செய்தது. திவிட்டன் சேனை முழுவதும் அல்லோல கல்லோல மாயிற்று. சடியரசன் முதலியோர், அவர்கள் இயற்றும் போரினுக்கு ஆற்றாது மனமுளைந்து ஒருபுறம் நின்றனர். இத்துணைநேரம் யுத்தவேடிக்கை பார்த்துக் கொண்டு வாளாவிருந்த விஜயராஜன், இனிச் சும்மாவிருத்தல் கூடாதென்று தீர்மானித்துத் தனது நாஞ்சிற் படையைக் கையிற்கொண்டு தரியலனது சேனையிற்

புகுந்து பகைவர் உடலங்களை உழுது புகழ்ப்பயிர் விளைப்பானாயினான். அப்பொழுது அச்சுவகண்டன் தம்பியரும் புதல்வரும் ஒருங்கு சேர்ந்து, நம்மைச் சிறிதும் மதியாது கலப்பை யாயுதத்தை வீசி வரும் இவ்வெள்ளையன் யாவனோ, என்று அதிசயித்தனர். அப்பொழுது ஆண்டு உள்ளார், இவனே பயாபதி அரசன் குமாரருள் மூத்தவனாகிய விஜயராஜன் என்று உரைக்கக் கேட்டு, மனமடங்காக் கோபங்கொண்டு, அந்நால்வரும் கனகசித்திரனும் ஒருங்கு சேர்ந்து, தாம் ஏறிய யானைகளைச் செலுத்தித் தம் படைகளோடு அவனை வளைந்து கொண்டு மிகவும் குரூரமான யுத்தம் செய்தனர். அப்பொழுது வித்தியாதரர்களுக்கு விஜயராஜன் தோற்றழிந்தனன் என்ற வதந்தி போர்க்கள முழுவதும் எக்காரணத்தினாலோ பரவிற்று. அப்பொழுது கடற்றிரை மடங்கி விழுந்தாற்போலப் பயாபதி அரசன் படை முழுவதும் தோற்று ஓடிப்போயிற்று. அக்காலத்தில், விஜயனுக்கு வாகனமாய் ஒரு தெய்வத்தன்மையுள்ள கோளரி ஒன்றும், இடியினும் கொடியதாய் மின்னும் புதியதோர் அலாயுதமும், தெய்வகதியாய் விஜயராஜனிடம் வந்து சேர்ந்தன. விஜயன், அச்சிங்கராஜன்மீது ஏறிக்கொண்டு வந்த அலப்படையை வலக்கையிற் றிரித்து வீசியெழுந்தான். அவன் ஏறிய மடங்கல், அண்டமுகடுடைய ஒருதரம் கர்ஜ்ஜித்தது. பகைவர்சேனை யுள்ளார் பலரும் இவ்வோசையால் மதிமயங்கிக் கட்குடியர் போல் அறிவிழந்து கீழேவிழுந்து மூர்ச்சித்தனர். பகைவர்கள் பலரும் விஜயன்மீது பற்பலவித படைக்கலங்களை எவி யார்த்தனர். அவன் அப்படைகள்

யாவற்றையும் அழித்து அவர்கள் ஏறிய யானைகளையும் அவர்கள் விசாலமான மார்பங்களையும் கைக்கலப்பையால் உழுது கொன்று தொலைத்தான். விஜயன் ஒருவனாக நின்று வித்தியாதரசேனை முழுவதும் கொன்று, வஜ்ஜிரகண்டன், நீலகண்டன், சுகண்டன் என்னும் மூன்று வீரர்களையும் வானுலகேற்றிய வல்லபத்தைக் கண்டு கனகசித்திரன் தன் வடிவாளைக்கொண்டு, விஜயனை எதிர்த்துப் போர்செய்தனன். அவரிருவருக்கும் நெடுநேரம் போர் நிகழ்ந்தது. கடைசியில் விஜயராஜனது நாஞ்சில் கனகசித்திரன் மார்பிலும் பாய்ந்தது. அவனும் மாய்ந்தான். இவற்றையெல்லாம் ஒன்றியாய் நின்று கண்ட இரத்தினகண்டன், இம்மானுடர் செய்யும் போர் நன்று நன்று, என்று பெரிதும் வியந்து அவரது போரையும் ஆண்மையையும் ஒருங்கு தொலைத்துவிடத் தீர்மானித்து, மேருமலையனைய ஒரு பெருவரையினைத் தன் கைகளாற் பிடுங்கிக்கொண்டு யாவரும் அஞ்ச, வரிந்த கச்சையும் முரிந்த புருவமும் வளைந்த தாடியையும் உடையனாய்ப் பிரளயகாலாக்கினி என்று யாவரும் மதிக்கத் திவிட்டன் படைமேல் எதிர்த்துச் சென்றனன். இவனைக்கண்ட பலரும் ஓடிப்போயினர். அப்பொழுது அருக்ககீர்த்தி தன் கையிலுள்ள வில்லை வளைத்து வைரவாளி ஒன்றினை யேவி, அவன் ஏந்திவந்த வரையினைத் தகர்த்து, அவன் உடலத்தையும் கிழித்தெறிந்தனன். எடுத்த கருவரையோடு மற்றொரு பெருவரையும் புவியில் விழுந்து புரள்வதுபோலப் போர்க்களத்தில் விழுந்து இரத்தினகண்டன் மாய்ந்ததைக்கண்ட ஒற்றர்கள் ஓடோடிச்சென்று வித்தியாதர சைன்னிய முழுவதும்,

அவன் தம்பிமாரும், புதல்வனும், விஜயன் கைக்கலப்பை யாலும் அருக்கன் கைக்கணையாலும் மாய்ந்தொழிந்த தன்மையினை அச்சுவகண்டனுக்கு எடுத்துக் கூறினார் கள். இவற்றையெல்லாம் கேட்ட அச்சுவகண்டன் இடியேறுண்ட அரவம்போலத் தனிவருந்தி இனிச்சும் மாவிருப்பதாற் பயனின்று, என்று எண்ணி, இவ்வுலகி லுள்ள சராசரப்பொருள்களை ஒருங்கு வாரிச்சென்று பெரும்புறக்கடலில் இடவல்ல மாயாதேவியினை மனந் தாற் றொழுது நியானித்தனன்.

அப்பொழுது சண்டவேகைப் பெயரிய மாயாதே வதை அவன் முன் பிரத்தியக்ஷமாகத் தோன்றி யானி யற்றும் பணியாதென வினவினள். அச்சுவன் அத் தெய்வத்தினை நோக்கி, அணங்கே! ஈண்டு இப்புவியில் என்னுடன் எதிர்த்து நிற்கும் பகைவர்கள் ஒருவரை யும் விடாமலழித்துப் பேருதவி செய்வாயாக, என வேண்டினான். அன்னோன் பணிக்கிசைந்து புறப்பட்ட சண்டவேகை கூற்றுவனை அழைத்து, சக்கிரேசுவரன் ஆஜ்ஞையால் இவ்வுலகத்திலுள்ள உயிர்கள் முழுவதும் இன்று சூரியன் படுமுன் என் வாயினுட்பட்டு முடிவினை யெய்தும்; ஆதலின் நீயும் உன் தொழிலினைக் குறை வின்றி நடாத்துவாயாக, என்று தன் கூர்மைபொருந்திய வெள்ளெயிறிலங்க நக்குக் கூறி, ஊனை விரும்பிய பிசா சங்களும், கூளிகளும், இன்று யாம் அனைவரும் விலாப் புடைக்க உண்டு மகிழ்வோம், என்று துணங்கைக் கூத் தாடிக்கொண்டு பயங்கரமான சூலங்களைக் கையேந்தித் தன்னைச் சூழ்ந்துவரப் பயாபதி அரசன் சேனையின்மீது எதிர்த்துவந்தனள். முட்டிதட்டும் முழங்கால்களும், பரு

த்த கணைக்கால்களும், நீண்ட பாதங்களும், ஒட்டியவயி றும், வற்றிய உடலும், நீண்ட நகமும், நகத்தில் மயிரும், பிளந்த வாயும், கழற்சிக்காய்போலச் சுழலும் கண்களும் உடையனவாகிய கூளிச்சேனை உலகநடுங்க ஆர்ப்பரித் தது. அப்பொழுது மலைகள் யாவும் மண்ணிலுருள ஒரு பிரசண்டமாருதம் வீசி யெழுந்தது. அதனுடன் ஊழித்தீயும் கலந்தெரிந்தது. எல்லையற்ற கடல்கள் பூமி மேலெழுந்து மலையென அலைகளை வீசின. எழுந்த சண்டவாயு சராசரங்களைக் களைந்து வீச, ஊழித்தீ யவற்றை எரிக்கக் கடல் யாவற்றையும் உண்டு மகிழ்ந் தது. இவ்வகை மாயங்கள் பலவற்றையும் இயற்றி மேலோங்கி எழுந்த சண்டவேகை, ஒரு பெருங் கரிய வரை யொன்றைப் பெயர்த்தெடுத்து உலகமடங்கக் கவிழ்த்து மூடியது. அப்பொழுது யாண்டும் இருளே பரந்தமையாற் பயாபதி அரசன் சேனைகள் போதற் கிடமின்மையானும் கண்ணொளி இழந்தமையானும் ஒரு வரொருவர் முட்டிக்கொண்டு நிலைகுலைந்து அல மந்தன. அப்பொழுது திவிட்டகுமாரன் தனது மைத் துனன் அருக்ககீர்த்தியை நோக்கி, இப்படிப் பயங்கர மாயும் பேராரவாரத்தோடும் மாயம் புரிந்து வருவது யாதெனக் வினவ, அவன் கூறுவான்:—

அச்சுவகண்டன் ஏவலைமேற்கொண்டு சராசரப் பொருள்கள் யாவற்றையும் ஒருங்குண்ணும் சண்ட வேகை யென்னும் மாயாதேவதை தன் கூளிப் படையோடு நம்மேல் வருவதுபோலும். இஃது அனைவரையும் ஒருங்கே அழித்தாலன்றி மறிந்து செல்லாது. இதனைத் தடுக்கும் ஆற்றலினை யுடையார்

எவரும் இல்லை. இதன் அளவிறந்த ஆற்றலையும் மாயையினையும் யாவரும் கணித்தறிய வல்லரல்லர், என்று கூறினான். இதனைக்கேட்ட இளையநம்பி தன் மைத்துனனை நோக்கி நகைத்து, நன்று நன்று, ஒரு பேய் நம்மேல் ஆரவாரத்தோடு வருமாம், அதற்கு சுத்தவீரர்கள் அஞ்சுவாராம், அதற்கு நீரும் அஞ்சினீரே, என்று கூறித் தான் முன்கொண்ட ஆகாயமும் சிறிதென்று யாவரு மஞ்சதக்கதோர் விச்சுவ உருவினை மேற்கொண்டு நின்றனன். அப்பொழுது உற்றுழி உதவும் நற்றோழனே போல, அவன் வலதுகை யில் பாஞ்சசன்னிய மென்னும் சங்கமும் இடதுகை யிற் சார்ங்க நாமவில்லும் வந்து சேர்ந்தன. அப்பொழுது அவன், சந்திரன் ஒரு பால்விளங்க, இந்திரவில் மற்றொரு பாற்றிகழ நீருண்ட கார்மேகம் ஒன்று, மண் மிசையினின்றும் விண்மிசை யோங்கியதுபோல விளங்கினான். அவன் பாஞ்சசன்னியத்தை அட்டதிக்கும் செவிடுபட வாய்வைத்தூதி, இடக்கையில் சட்டார்ந்த வில்லை வளைத்துக் குணத்தொனி யெழுப்பி, எல்லாவுலகமும் அதிரத் தன் வாயினால் உங்காரம் செய்தான். அப்பொழுது யாவருமஞ்சவந்த அச்சண்டவேகை தான் கொண்ட கோலத்தை விடுத்துப் பண்டையுருவோடு நின்று தன் கூளிப்படையுடன் பறந்தோடியது. இவ் விதமாகப் பேருருவோடு தன் பேழ்வாய்திறந்து யாவரையுந் தின்னவந்த அப்பேய், இருந்தவிடந் தெரியாமல் ஓடிப்போயிற்று.

இங்ஙனம் சண்டவேகை யோடியதைக்கண்ட அச்சுவகண்டன் தன் கையோடு கைபுடைத்து, இப்பேயின்

ஆற்றல் இவ்வளவோ வென்றிகழ்ந்து நகைத்துத் தன் கண்களினின்று கோபப்பொறி சிதற இதழ்மடித்துப் பற்கறித்துத் தன் பாங்கிலுள்ளாரை நோக்கித் தூங்கு கையினையும் ஓங்கு நடையினையுமுடைய தனது அரசு வாவினைக் கொண்டுவரப் பணித்தனன். அவர்களங் ஙனமே கொண்டுவர அவன் அதன்மீது ஆரோகணித்து யுத்தஞ்செய்யச் சன்னத்தனாய்ப் பற்பல தெய்வப் படைக் கலங்களையும் கைக்கொண்டு போர்க்களம் புக்கனன். அவனைக்கண்ட திவிட்டன் சேனை முழுவதும் அஞ்சி யோடியது. அப்பொழுது திவிட்டன் தன் சார்ங்க வில்லினை வளைத்து நாணினைப் பூட்டினன். அவ்வமயத் தில் வளைந்த மூக்கும் பொன்போற்கிளர்ந்த மேனியும் செந்நிறச் சிறகும்பெற்ற உவணராஜன் ஆகாயப்பர ப்பு முழுதும் அடைய மூடினாற்போலத் தன் இறகுகளை விரித்துக் ககனமார்க்கமாய் வந்து சேர்ந்தனன். திவிட் டன் கருடபகவானை வலங்கொண்டு அவன்மேல் ஏறிக் கொண்டனன். இவ்வற்புதத்தைக் கண்ட பின்னும் அச்சுவகண்டன் சிறிதுமதியனாய்த் திவிட்டனை நோக்கி, ஓ, ஏழை மாநடப்பதரே! நீயோ என்னுடன் சமர் செய்வது? யானை யேற்றம், குதிரை யேற்றம் அறியாத குற்றத்தால் எளிய பறவைமேல் ஏறிக்கொண்டனை போலும்; உன் உயிர்மேற் பற்றுடையையாயின், நீ செய்த பிழையனைத்தையும் பொறுத்துக்கொள்ள எம்மை வேண்டிச் சிறிதுபொழுதும் தாழாமற் பணிந்து போற்றுவாயாக, என்றனன். இவ்வெற்றுரையைக் கேட்ட திவிட்ட நம்பி சற்றே குறுநகைசெய்து, அடே! மூட, நீவல்லையாயின் சமர்புரிக, வீண்பேச்சொழிக,

என்றனன். அச்சுவகண்டன் தன் வில்லை வளைத்து நாணினைப் பூட்டிக் குணத்தொனி யெழுப்பி அம்புமாரி பொழிந்தனன். அப்பாண வருஷத்தினைக் கருடராஜன் தன் இறகரால் உதறிவிட, அவையாவும் இடையிடையே முறிந்து விழுந்தன. அச்சுவகண்டன் அதனைக்கண்டு இளைய நம்பியின்மீது தேவதாஸ்திரங்களைப் பிரயோகிக்க எண்ணி நாகாஸ்திரத்தை முதலில் பிரயோகித்தனன். அக்கணை ஆயிரங்கோடி நாகங்களாக ஆகாய முழுவதும் பரந்து, அழனஞ்சினை வாய்கள்தோறும் கக்கிக்கொண்டு திவிட்டராஜன்மீது வந்தது. திவிட்டராஜன் தன் வில்லை வளைத்துக் காருடாஸ்திரத்தை யேவினான். அது சென்று வந்த நாகாஸ்திரத்தை தனது துண்டத்தால் இருதுண்டங்கண்டது. அச்சுவகண்டன் மீளவும் உலகமுழுவதும் ஒருங்கழிக்கும் ஊழித்தீயனைய ஆக்கிநேயாஸ்திரத்தினை யேவினான். திவிட்டன் அதனையடக்க வாருணாஸ்திரத்தினை விடுத்துப் புன்னகை செய்து வாளாவிருந்தனன். இங்ஙனம் அச்சுவகண்டன் விடுக்கும் பற்பல அஸ்திரங்களுக்கும் மாறான அஸ்திரங்களைத் திவிட்ட நம்பி தொடுத்துத் தடுத்தான். அச்சுவகண்டன இறுதியில் யாவரையும் மயங்கிக் கொல்லும் மோகனாஸ்திரத்தை மந்திரபூர்வமாக மனத்தாற்றொழுது திவிட்டன்மேற் செலுத்தியபொழுது உலகமெல்லாம் உறங்கிற்று. திவிட்டன் ஏறிய கருடனும் சிறிது மயங்கினன். இதனை யுணர்ந்த இளைய நம்பி உடனே ஞானாஸ்திரத்தைப் பிரயோகம் செய்தனன். மோகனப்படை தொலைந்தது; உலகமுழுவதும் துயில் விட்டெழுந்தனர் யாவரும். திவிட்

டனைக் கொண்டாடினார்கள். தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். இவற்றையெல்லாங் கண்ட அச்சுவகண்டன் பெருஞ்சீற்றங்கொண்டு நாம் விடுத்த தெய்வப் படைகளனைத்தையும் இவன் பயனிலவாய்ச் செய்தனன். இனி இவனைக் கொல்லுவதற்கு இதுவே வழியென்று தன் கையிலுள்ள ஆஜ்ஞாசக்கிரத்தை மனத்தாற்றொழுது வந்தித்து வாயார வழிமந்திரித்துப் பகைவனை வெல்கவென்று ஆஜ்ஞாபித்துத் திவிட்டனை நோக்கி, காக்கவல்லையேற் காத்துக் கொள்ளுதியென்று திரித்து விடுத்தான். அச்சக்கிரப்படை தன் பல்லாயிர வாயினின்றும் அனற்பொறிகளைக் கக்கிக்கொண்டு படபடாத்காரத்துடன் திவிட்டன்மேல் வந்தது. அதன் அக்கினிச் சுவாலையால் மறைப்புண்ட திவிட்டராஜனை யெவருங் கண்டிலராய்த் திகைத்தனர். தேவர்களும், மனமயங்கிப் பரிதபித்தனர். சென்ற ஆழிப்படையோ இளைய நம்பியின் எதிரில் வந்து அவன் அடிகளிற் பணிந்து எழுந்து அவனை மும்முறை வலஞ்செய்து அவன் வலப்பக்கத்தில் வந்து நின்றது. திவிட்டராஜன் அப்படையினை வலக்கையான் வாங்கித் திரித்து அச்சுவகண்டன்மீது ஏவினான். அச்சக்கிரம் அச்சுவகண்டனது மார்பினைப் பிளந்து சிரத்தினை அறுத்து அவனேறிய அரசுவாவினையும் கொன்று வீழ்த்தியது. மலைச்சிகரத்திலிருந்து மேகம் புரளுமாபோல் அச்சுவகண்டன் நிலமீது புரண்டான். சன்மார்க்கத்தினில் தவறாத நீதிமானொருவனுக்கு அறிவிலியொருவன் செய்த தீமை அந்நல்லோனை ஒன்றும் செய்யாது தீங்கியற்றியவனையே கெடுப்பதுபோல அச்சுவகண்டன்

விடுத்த ஆழி அவனையே தடிந்தது. இதனைக்கண்டோர் பலரும் அவ்வச்சுவகண்டனது பெருமையையும் ஆற்றலையும் நெடுநாளாக அறிந்துள்ளாராதலின், யாக்கை நிலையாமை, செல்வநிலையாமை, ஆற்றல் நிலையாமை, வனப்பு நிலையாமை முதலியவற்றைப் பேசி, எல்லாம் ஊழ்வினையின்படியே நடக்கும் என்று தீர்மானித்தார்கள்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந்தான் முந்துறும்"

என்று பெரியார் கூறியதற்கு இவ்வச்சுவகண்டனே திருட்டாந்தமாக விளங்கினான், என்று யாவரும் அனுதாபப் பட்டனர். அத்தருணத்தில் அவனது மனைவியாகிய கனகசித்திரை தன் தோழியரோடு ஆண்டுவந்து போர்க்களத்திலே தன் கணவன் உயிர் நீத்து வறுநிலத்தில் விழுந்துகிடப்பதைக் கண்டு கையற்றுப் பலவாறு புலம்பிக் கண்ணீர் வெள்ளத்துண் மூழ்கி அவனது உடலத்தின்மீது வீழ்ந்து தன் உயிரையும் நீத்தனள். ஏனைய காதன்மகளிர் பலரும் அம்பு பட்ட மயில்போல நிலத்தில் வீழ்ந்து புரண்டு பலவாறாய் அச்சுவகண்டன் பெருமையை எடுத்துப் பிரலாபிக்கலாயினர். பின்னர் அவர்கள் ஒருவாறு தேறி மஞ்சுதோயும் மணிவரையை எஞ்சலில் காலம் அரசாண்ட அச்சுவகண்டனையும் அஞ்சுதலில்லா நெஞ்சினராகிய அவன் சகோதரர்களையும் கனகசித்திரனாதிய புதல்வர்களையும் மற்றும் பல வேந்தர்களையும் அனலிவிட்டு தீக்கடனாற்றிய பின்னர் யாவரும் தமது விஞ்சையர் ஊரையடைந்து மங்கலநாண்க ளின்றிக் கைம்மை

விரதத்தை மேற்கொண்டவராய்க் கடவுளை நோக்கி நோன்பு இயற்றுவாராயினர். ஈதிங்ஙனமாக நெருப்புமிழும் ஆழியைப்பெற்ற திவிட்ட குமாரன்மீது அமரர்கள் மலர்மழை பொழிந்து வாழ்த்தினர். பஞ்சதுந்துபிகளும் முழங்கின. அப்பொழுது, திவிட்டன் அச்சுவகண்டன் விடுத்த தேவதாஸ்திரங்கள் எவற்றையும் சிதைத்து அவன் ஏவிய சக்கிரப்படையினைக் கைக்கொண்ட இவ்வற்புதத்தினைக் கண்டு யாவரும் கொண்டாடுங்கள், என்று ஆகாயவாணி அனைவருங் கேட்க மொழிந்தது. இறவாதுநின்ற விஞ்சையர் பலரும் திவிட்ட நம்பியைப் பணிந்து அவன் அருள்பெற்று வித்தியாதர உலகினையடைந்து அவன் வழியினின்று வாழ்ந்தனர். திவிட்டராஜன் தானேறிய கலுழனை விட்டிழிந்து அரசுவாவொன்றன் மேலேறிப் பற்பல மன்னரும் தன்னைச் சூழ்ந்து போற்றிவணங்கப் பாசறையையடைந்து மூத்தநம்பி விஜயனோடும் சென்று பயாபதியின் பாதங்களிற் பணிந்தனன். பயாபதி மன்னன் வந்த அரசர் பலரையும் நோக்கி, அரசர்காள்! இக்குமரர்களைப் பெற்றதால் எவரும் பெறுதற்கரிய பாக்கியமடைந்தேன். இஃது யான் முற்பிறப்பிற் செய்த மாதவத்தின் பலனும். ஆதலின் உங்கள் முன்னிலையில் இவ்விருவருக்கும் அரசுரிமைக்குரிய மணிமகுடங்களைச் சூட்டி என் கண்ணாரக் காணவேண்டுமென்பதே எனது பெருவிருப்பு. நீவிர் யாவரும் இங்கிருந்து மகுடாபிஷேகத்துக்கு வேண்டிய நன்முயற்சிகளைச் செய்து என்னைக் கௌரவப்படுத்துமாறு கேட்டுக்கொள்ளுகின்றேன், என்று மிக்க அன்புடன் பேசினான். சடியரசன்

முதலாயினோரும் மற்றுமுள்ள மன்னர், மண்டலீகர், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர் ஆதியோரும் பெரிதும் மனமுவந்து பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய முயற்சிகளை எடுத்துக்கொண்டு இந் நல்விஷயத்தை நகரமாந்தர்கள் இனிதறிய முரசறைவித்தனர். பின்னர் நிலவுலக மன்னர்கள் கங்கை, ஸிந்து, யமுனை, நருமதை, கோதாவரி, கிருஷ்ணை, காவேரி ஆதிய புண்ணிய தீர்த்தங்களின் நீரை சுவர்ண கலசங்களில் முகந்து வந்து மங்கல வாத்தியங்கள் கோஷிக்க, அந்தண ரிருடிகள் ஆதியோர் ஆசிகூற இரு மைந்தரையும் திருமஞ்சனமாட்டினார்கள். வித்தியாதரர்கள் தமது மலைச்சிகரங்களிலுள்ள புனித நீரினை அரதன கலசங்களிற் பெய்து வந்து மங்கலவாழ்த்து முழங்க அபிடேகம் செய்தனர். தேவர்கள் திருப்பாற் கடலினின்றும் அமுதத்தினைப் பெருங்கடங்களிற் பெய்து வந்து இருவருக்கும் பெருக்க முற ஆட்டினார்கள். பின்னர் இலக்குமி வந்தடைதற்குரிய திருவுருவினாலும், எழிலினாலும், செவ்வியாலும் திவிட்ட நம்பியை உலக பாலனஞ்செய்யும் சக்கிரவர்த்தியாகத் தக்கவனென்று தீர்மானித்து அவனுக்குப் பகல் கான்று எழுதரும் பல்கதிர்ப் பரிதியினும் ஒளிமிக்கோங்கிய இரத்தின கிரீடத்தை அவன் தலையின்மேற் சூட்டினர். யாவரும் வெலற்கரிய அச்சுவகண்டனை மாய்த்து அவனாழியைத் தன் கையேற்றவனாதலின் இவனே வாசுதேவன் என்று பலரும் புகழ்ந்துப் போற்றிக் கொண்டாடினார்கள். மூத்தநம்பி விஜயகுமாரனை உருவினாலும், படைக்கலத்தாலும், ஆற்றலினாலும் இவனே பலபத்திரன் என்று சாற்றி அவனையும் போற்றிக் கொ

ண்டாடி முடி சூட்டினார்கள். பெரியார் பலரும் ஆசிகூற மடமங்கையர் மங்கலவாழ்த்துப்பாட ஏனையோரடியோ ற்ற முரசு முதலிய வாத்தியங்கள் எண்டிசையும் அதிர முழங்கத் திவிட்டநம்பி மணிமுடியணிந்து ஏகசக்கிரே சுவரனாய் அரியாசனத்தில் வீற்றிருக்கும்பொழுது முன் னமே வந்து சேர்ந்த சங்கு, சக்கிரம், விற்களோடு தண் டும் வாளும் வந்து சேர்ந்தன. அப்பொழுது இளைய நம்பி தண்டு வாள் பணில நேமிதனுவாகிய கௌமோ தகி, நாந்தகம், பாஞ்சசன்னியம், சுதரிசனம், சார்ங்கம் என்னும் பஞ்சாயுதங்களைத் தரித்துக் காக்கும் கடவு ளாகிய கமலக்கண்ணனே என்று யாவரும் தெளிய அற் புதம்வாய்ந்த திப்பிய ஒளியுடன் திகழ்ந்து விளங்கினான். இவையேயன்றிச் சங்கநிதி, பதுமநிதியாகிய நவநிதி களும் சிந்தாமணி, சூளாமணி முதலிய தெய்வமணிக ளும் அவனிடம் வந்து சேர்ந்தன. இவற்றையெல் லாம் பயாபதி அரசன் கண்டு களிபெருமுவகை கொ ண்டு ஆனந்த பரவசனாயிருந்தனன். இங்ஙனம் பட்டா பிஷேகம் நடந்து முடிந்தவுடன் ஆழியங்கடவுள் வீற் றிருக்க ஆலயம் ஒன்றமைத்து, ஏனைய ஆயுதத் தெய் வங்களுக்கும் கோயில் சமைத்துக் கருடபகவானுறைய மாளிகையும் ஏற்படுத்தி, இவைகளுக்கு ஆறுகால பூஜை யுமியற்றி அணிவிழாக் கொண்டாடி வந்தனர்.

இங்ஙனம் சிலநாட்செல்ல ஒருநாள் புராணங்களை முற்றக்கற்ற புலவர்கள் இளையநம்பியை நோக்கிப் பண்டு தொட்டு இன்றளவும் உலகாண்ட பார்த்திபர் சரிதங் கள் கூறப்பட்ட புராணங்களுள், தமது திவ்விய சரித மும் கூறப்பட்டுள்ளது. தாங்கள் பலபத்திரனோடு கூடிச்

செகுத்தற்கரிய அச்சுவகண்டனுதிய பகைவரைக் கொன்று வென்று பஞ்சாயுத கருட ஸ்ரீதேவியாகிய எழுவகைப்பட்ட அருங்கலத்தையும் இரு நிதியையும் பதினாறாயிரம் நகரங்களையும் வேந்தர் கூட்டங்களையும் பெறுவீரென்றும், அதன் பின்னர்க் கோடிக் குன்றமென்னும் மலையினைப் பெயர்த்தேந்துவீர்களென்றும் புராணங்கள் கூறுகின்றன. எதிர்கால உணர்ச்சி உணர்ந்த முனிச்சிரேட்டர்களால் கூறப்பெற்ற இப்புராணங்கள் பொய்யாகமாட்டா. ஆதலின் ஈண்டுக் கூறியுள்ள பல சக்கிரவர்த்திகளுள்ளும் நீவிரே சிறந்தவராவீர், என்று புகழ்ந்து பேசினார்கள். இதனைக்கேட்ட திவிட்டநம்பி புன்னகைசெய்து, ஐயன்மீர்! புராணங்கள் கூறுவன உண்மையேயெனினும் இப்புவியில் அரசுசெய்த மன்னர்கள் கடற்கரையிலுள்ள மணலினும் பலரே; யானும் அவர்களிலொருவன் அல்லனோ? எமக்கு முன்வந்த எவரும் துஞ்சினாரென் றெடுத்துத் தூற்றப்பட்டாரல்லால் எஞ்சினார் இவ்வுலகத்திலரன்றே. இன்னுமிவ்வுலகம் யார் யாரைக்காண விருக்கின்றதோ, என்று அப்புலவர்களின் மனவெழுச்சி யடங்கக் கூறி, தானேறிய சிம்மாசனத்தினின்றும் இழிந்து, யாவரும் தன்னைச் சூழ்ந்து வரக் கோடிமாசிலை யென்னும் பெயரிய பெரிய மலையருகில் வந்து வாகுவலையங்களணிந்த இரண்டு கரங்களையும் நிலத்திலூன்றி அம்மலையினைப் பெயர்த்தெடுத்துக் குடையெனக் கையிலேந்தி நின்றனன். இதனைக்கண்ட பலரும் இவன் இறைவனே யென்று வாழ்த்தி அகமகிழ்ந்து வணங்கினார்கள். அரசர் பலரும் இவனே வாசுதேவன், இதற்குச் சிறிதும் ஐயமின்று, என்று அவன்

பொன்னங் கழலிணைவணங்கி யேத்தினர். திவிட்டன் அம்மலையை மீளவும் பண்டுபோல நிற்க அமைத்து ஆண்டுத் தன் பரிசனங்கள் கொணர்ந்த அரசவாரணத் திலேறிப் பலரும் போற்றிசெய்ய இன்னிசைத் தூரிய முழங்கச் சாமரை இரட்ட வலம்புரி குமுறப் பெண்கள் நீராஞ்சனம் சுழற்றத் திருமகளின் அம்சமாகிய சுயம் பிரபைச் செல்வியோடும் போதனமாநகரம் புகுந்தான். அந்நகரமாந்தர் வெண்முத்தங்களால் தமது மாளிகை களை அலங்கரித்துத் தாமரைக் கொட்டையின் வடிவின வாக வெண்மூளைப் பாலிகைகள் நாட்டி வெண்ணெற் கதிர்களால் அணியப்பட்ட பூரண கும்பங்களைத் தூக்கி, வாழை, கரும்பு, கமுகு, முதலியன நிறுத்தி வாயில் தோறும் தோரணங்களமைத்து மலர் மாலைகளை நால விட்டுச் சந்தனம் பனிநீர் நறுஞ்சுண்ணம் முதலியவற் றைக் கையேந்தி எழுலகமும் மணநாற இறைவனை எதி ர்கொண்டழைத்தனர். திவிட்டநம்பி இவற்றையெல் லாம கண்ணாரக்கண்டு மகிழ்ந்து அந்நகருட்செல்லு கையில் மடமாதர் பலர் சிலம்புகளொலிக்க எதிர்வந்து வணங்கி மன்னனையும் அவன் பன்னியையும் பலவாறு புகழ்ந்து போற்றினர். மைந்தர்கள் மலர்களையும், சுண்ணப் பொடிகளையும் கலந்துவீசிக் களியாட் டயர்ந் தனர். இச்சிறப்புக்கள் யாவற்றையும் பார்த்த வண் ணம் திவிட்டநம்பி தனது கோயிலை யடைந்தனன். பரி தியும் மேற்றிசை யடைந்தான். விஞ்சையரும் ஏனைய மன்னவரும் தத்தமக்கென் றேற்பட்ட விடுதிகளிற் சென்று வசித்தனர். இளையநம்பி பின்னர்ச் சுயம்பிர பைக்குப் பட்டத்துத் தேவியென்று நாமம் சூட்டும்

மங்கலநாள் நாளையேயென்று நகரமெங்கும் முரசறை வித்தான். தோழியர் சுயம்பிரபை நங்கைக்கு மங்கலக் காப்புப்பணி யணிந்தனர். சூரியோதயமான பிறகு அவளைப் புனித நறுநீரினால் அபிடேகம்செய்து இன்னி யம் பலவும் முழங்கச் சோடசோபசாரங்களுடன் பட் டத்துத் தேவியென்று நாமமும் புனைவித்தனர். அதன் பின் திவிட்டநம்பி தன் மாமன் சுவலனசடிக்கு வேண் டும் சிறப்பினைச்செய்து, நீவிர் உத்தரதக்கிண சேடிக ளிரண்டையும் ஒருங்காளக் கடவீர், என்று ஆஜ்ஞா பித்து அனுப்பிவிட்டு மற்றுமுள்ளார் பலரையும் அவ் வவர் ஊர்களுக்கேக விடையளித் தனுப்பினான். திவி ட்டநம்பி தனது முன்னவன் அருகாசனத்திருப்பப் பஞ்சாயுதங்களுந் தன்னைப் புறங்காப்பக் கருடன் முத லியோர் தன் ஏவலினை எதிர்பார்த்து நிற்க, யாவரும் போற்றிசைப்ப அரசுபுரிந்து, அருகனடியை அனவரத முமறவாது தனது பட்டத்துத் தேவியோடு எல்லை யற்ற இன்பத்தை யனுபவித்து வாழ்ந்திருந்தனன்.

## அத்தியாயம் 8

விஞ்சைய வேந்தருக்கு விடைகொடுத் தனுப்பிய பின் னர்ச் சிந்தாமணி முதலிய எழுவகை இரத்தினங்களும், சங்கநிதி முதலிய நிதிகளும் வேண்டிய வேண்டியாங் குதவப் பதினாறாயிரம் தேவதைகள் பத்துத் திக்கிலும் காவல்புரிய மண்ணுலகமன்னர் பதினாறாயிரவர் அவன் பொன்னடிதாழ்ந்து போற்ற, நூற்றுப்பத்து வித்தியா தர அரசர்கள் தன்னாணைக் குட்பட்டொழுகச் சகல

சாம்பிராச்சியங்களோடு திவிட்டனும் ஏக சக்கிரேசுவர ஞய் அரசுபுரிந்து வந்தனன். அளவற்ற பல பராக்கிர மங்களையுடைய திவிட்டராஜனை, மயிலினைவென்ற சாய லும் அன்னமும் நாணுநடையும் பண்ணைவென்ற மொழியும் திப்பிய ஒளிதிகழும் திருமேனியும் உடைய ளாய சுயம்பிரபை நங்கை தன்வழிப்படுத்தி வென்றி கொண்டனள். வித்தியாதர மங்கையாதலின் தன் விஞ் சையின் வல்லபத்தால் அன்னணம் வென்றனள்போ லும். இவ்விதம் வாழுநாளில், ஒருநாள் சுயம்பிரபை தன் பிதா சடியரசனுடைய நந்தன வனத்திலிருந்து ஈண்டுப் போதனத்திற் கொணர்ந்துவைத்த பாரிஜாத விருக்ஷம் அரும்புதலைக் கண்டு, அப் பாரிஜாதத்திற்குக் காமவல்லிக் கொடியினை மணம்புரிவித்துத் திருவிழாக் காணவேண்டுமென்னும் வேட்கையினை உடையளாய்த் தன் உயிர்த்தோழி அமிர்தமாப்பிரபையை அழைத்து, நீ அரசன் பாற்சென்று பாரிஜாதம் அரும்பிய செய்தி யை உரைத்து, யாமதற்குக் காமவல்லியினைக் கடிமண மியற்றும் திருவிழாக்காண அவரை அழைத்துவருதி, என்று கூறி விடுத்தனள். அவள் வணக்கத்தோடும் சென்று நம்பியை வாழ்த்தி, ஐயா! நீங்கள் வித்தியாதர நந்தனவனத்தினின்று அடியேங்கள் பொருட்டு ஈண் டுக் கொணர்ந்த பாரிஜாதம் அரும்பியது. அப்பாரிஜாத புத்திரர்க்குக் காமவல்லி மங்கையை வதுவையாற்ற நமது அரசி எண்ணங்கொண்டுள்ளாள். தாங்கள் அத் திருவிழாவினைக் கண்டு களிகூரும்பொருட்டு இதனை விண்ணப்பஞ்செய்க, என்று எம்பெருமாட்டி என்னை ஏவி யருளினாள், என்று உரைத்தனள். திவிட்டராஜன்

புன்னகைசெய்து, அணங்கே! மிகவும் நன்று, நாமும் நமது நங்கைமகளை அங்குவந்து காண்போம், என்று கூறி அவளை விடுத்தனன். பாங்கி, அரசன் வருவதாக ஒப்புக்கொண்டதை அரசிக்கு அறிவித்தனள்.

திவிட்டன், அவனது மனைவியின் வேண்டுகோட்கிணங்கிப் பாரிஜாதோத்ஸவங்காண மலர்ப்பொழிலுக்கேக எழுந்தபொழுது, அவன் விதூஷகனாகிய அந்தணப்பாங்க னொருவன் அவனை வந்தணைந்தனன். அவன் தனது காதிற் குண்டலங்களும் வளையமும் ஒளிவீசக் குடுமியில் மலர் மாலைகளை நிரம்பப் புனைந்து இடுப்பில் ஒருகையினை வைத்துக்கொண்டு மற்றொரு கையால் அங்கவஸ்திரத்தைப் பற்றிக்கொண்டு புன்னகைகாட்டி அரசனெதிரில் நின்றனன். அரசனது உள்ளமகிழ விநோதங்காட்டித் தனது சரீரத்தினை வளைத்துக்கொண்டு, இனிய குரலெழுப்பிப் பாடியும், பாட்டிற்கேற்ப ஆடியும், அவன் நடனஞ்செய்தனன். அவ்விநோதக் கூத்தி னிடையிடையே சமயோசிதமாகிய விநோத வார்த்தைகளால் நவநவமாய் அசதியாடினன். இதனைக் கண்ட நம்பி பெருமகிழ் வடைந்து, நன்று நன்று, நின்னவையிலாக்கூத்து என்று கூறி நகைத்தான். அப்பொழுது குறுங்கைகளையும் பெருவயிற்றினையு முடைய பார்ப்பனன் தன் வயிற்றைப் பிசைந்துகொண்டு நிலத்தில் விழுந்து புழுதியிற் புரள்வானாயினான். அவனை நோக்கித் திவிட்டன், ஐயனே! இவ்வயிற்றைப் பற்றிக்கொண் டழுகின்றனையே, உனக்கு யாது சம்பவித்தது, என்று அன்புடன் வினவினன். அதற்கு அவன், அரசே! அளவற்ற மோதகங்களை யுண்ட வாதையினால் என்

வயிறு ஊதி ஊதி மோதுகின்றது. வயிற்றில் மோதகங் கள் மூழ்கி மூழ்கி மிதக்கின்றமையால் அவ்வலியினை ஆற்றகில்லேன், என்று கூறினன். மோதகம் என்று தின் றனை, என்று அரசன் கேட்க, அதற்கு, அரசி இன்று புரியும் விழாவினில் அளவற்ற மோதகங்களைத் தின்னப் போகின்றேன்; அதனை நினைத்து என் வயிறு முக்குளிக் கின்றதென்றனன். திவிட்டன் புன்னகைசெய்து, மறை யோய்! வேதாத்தியயனம் செய்த வேதியருக்கே யன்றி ஏனையோருக்கு மோதகம் கொடுக்கமாட்டார்கள், என்று கூற, அதற்கு விதூடகன், மன்னவ! வேதியர் பலரை யும் வாதத்தில் வெல்லும் என் வல்லபமும் எனது பெருமையும் மகாராணி நன்கறிவள். எல்லா மோ தகமும் எனக்கே கிட்டுமென்றனன். அப்பொழுது திவிட்டன், அந்தண, நீ வேதமறியாயே, நீ எவ்வாறு வேதியரை வாதத்தில் வெல்லுவை, என்று கேட்ப, அதற்கவன், அந்தணர் தங்கள் வாயால் வேதத்தை ஓதினால் யானும் அவர்களை என் கைத்தண்டாலே மோதுவேன், என்று பகர்ந்தனன். அரசன், நல்லது நீ வாதம் புரியும் வல்லமையை இனி நாம் கண்டு மகிழ் வோமென்று கூறி, அவனையுமுடன் கொண்டு சோலைக் குச் சென்றனன். சோலையினிடத்து இனிய கனிகளை விதூடகவேதியன் கண்டு, ஆகா! இவற்றை வயிறார உண்டு எனது உள்ளங்குளிரேனே, அரசே! இவற்றைக் கண்களினால் கண்டதிலேயே எனது ஆசைதீருமா? என்று பழமரத்தடிகள்தோறு நின்று நின்று இனிய கனிகளைக் காண்டொறும் அவற்றைக் கையெடுத்துக் கும்பிட்டும் வாயிலளவற்ற நீர் ஊறுவதனால் அக்கனி

களைக் கையினாலள்ளி வாயிலிடுவான் போலப் பாவனை செய்துகொண்டும் அரசன் பின்னால் ஓடோடி நடந்து வந்தனன். அவன், அரசனை நோக்கி, தலைவ! தங்களு க்கு வியாதி ஏதேனுமுளதோ, இனிய பழங்கள் தங்கள் வாய்க்குக்கைக்குமோ, இரண்டொன்றினை உண்டு பார்க் கலாகாதா, வேண்டுமாயின் நான் நல்ல கனிகளாகப் பறித்து முன்னாடியே ருசிபார்த்துப் பரீக்ஷைசெய்து உயர்ந்தவைகளைத் தங்களுக்குச் சமர்ப்பிக்கிறேன். தயவு செய்து அனுமதி யளிக்கவேண்டும், என்று கெஞ்சிக் கேட்டனன். இறையவன் அவனைப் பார்த்து, மறைய வனே, இவற்றினுமுயர்ந்த நல்ல நல்ல கனிகள் அள வின்று முன்னாடியிருக்கின்றன. மெல்ல மெல்லப் போ வோம்வா வென்று கூற, அவனும் பெரிதும் அகமகிழ் ந்து ஆடிக்கொண்டும், பாடிக்கொண்டும் அரசனுடன் சென்றனன். அச்சோலையிலுள்ள மலர்களினின்றும் மதுத்துளி பிலிற்றுதலால் அவ்வந்தணன், ஐயையோ அரசே! பெருமழை பொழிகின்றதே, இருவரும் குடை எடுத்து வந்திலமேயென்று கூறினன். மாங்கனிகள் தோறும் வண்டினம் மொய்ப்பதைக் கண்டு, அடடா! இனிய பழங்கள் அநியாயமாய் கெட்டுவிடுகின்ற தென்று கதறுவான். பொழிலில் ஒருபுறத்தில் காய் களும் கனிகளும் கடிப்புண்டும் வெடிப்புண்டும் மரத் தடிகளிற் சிந்தி இருப்பனவைகளைக் கண்டு, அவ் வந்தணன் உள்ளம்பதைத்து, கைகளை உதறிக்கொ ண்டு, சூரியனும் உட்புகுதற் கஞ்சுகின்ற இச்சோலை யினுள்ளே காலெடுத்துவைக்கக் கள்வருக்கு எங்ங னம் மனந்துணிந்ததோ வென்று மிகுந்த கோபத்

துடன் அரசனை நோக்கி, காவல! நினது காவல் நன்று நன்று, உனது கோட்டை கொத்தளங்களில் பலவீரர் வாளாயுதங்களைக் கையகத்தேந்தி வாளா திரி தருகின்றனரே. அங்குநின்று எதனைக் காக்கின்ற னரோ? இனிய கனிகள்நிறைந்த இக்காவகத்துக் காவல் வேண்டாமென்று கருதினையோ; அன்றி, வைத்த காவ லாளிகளே இவ்வடாதசெயல் செய்தனரோ வென்று வாய்குளறி மெய்ந்நடுங்கிப் பேசினான். பின்னர்ச் சில மரங்களின் கிளைகளில் உரத்தகைகளும் கால்களும், நீண்ட வால்களுமுடையனவாய்ச் செம்முகமந்திகளும் கருமுகக் கடுவன்களும் அணிவகுத்து வீற்றிருப்பன வற்றைக்கண்டு மன்னவன் பாதத்திற்பணிந்து எழுந்து நின்று கைகளாற் காட்டி மெல்லிய குரலுடன், ஐயை யோ! இதோ கள்வர் பலரும் மரத்தின் மேலேறியிருக் கின்றனரே, என்று சமிஜ்ஞைபண்ணினன். அரசன் அவனை நோக்கி, அந்தணை! ஆண்டுள்ள கள்வர் பல ராதலின் அவர்களை யாம் ஒன்றும் செய்தல் ஒண் ணாது. யாம் இவ்விடத்தினின்று விரைந்து நீங்கிச் செல்லுதலே தக்கதென்றுகூற, அவ்வேதியன் தனது பெரிய வயிறுகுலுங்கச் சிறிய கைகளை ஆட்டிக்கொண்டு பேருயிர்ப்புடன் உடல் படபடக்க ஓடுவானாயினான். செல்லும் வழியிற் றழைந்து தாழ்ந்த தமாலச்சோலை யினைக்கண்டு ஐயா! இவ்விருளினுட் சென்றால் நமக்குக் கண் தெரியுமோ, என்று கவலுற அதற்கு மன்னவன் இது தமமன்று தமாலமே, என்றுகூற அவன் மனத் தைச் சிறிது தேற்றிக்கொண்டு சென்றனன். அப் பொழுது அவன் திடீரென்று எதையோ கண்டு மருண்

டவன்போல் விம்மி விம்மி அழத்தொடங்கினன். ஏன் அழுகின்றாய், என்று அரசன் கேட்க, ஐய! இதோ தெரியும் இந்த மகிழமரம் இருப்புக்கவசம் தரித்து நம் முடன் போர்க்கு வந்துவிட்டதே. ஆராமமும் போராட முடியுமா, என்று வாய் குழறினன். அதற்கு மன்னன், ஏ மூட! சிறிதும் கவலற்க, இந்த மகிழமரத்தின் வயவு நோய்கெட நமது மகளிர்கள் தமது பவள வாயிலுள்ள அஞ்சுவை நறவத்தை அதன்மீது கொப்பளித்ததனால் அந்த நறவின் நாற்றமே அம்மரமுழுவதும் கமழ்கின்றது. அதனால் அம்மரமுழுவதும் சுரும்பினங்கள் நெருங்கி மொய்த்துக் கிடக்கின்றன. கவசமென்று மருளற்க, என்று அவன் உள்ளத்தைத் தேற்றினன். அந்தணன், மற்றொரு புறநோக்கி, ஐய! ஈதோ ஓர் அற்புதங்கண்டீரோ. அசோகமரம் தன் கிளைகளில் இளந்தளிர்விடுவதேயன்றிக் காய்ந்த அடியிலும் சிவந்ததளிர் பூப்பதுண்டோ? ஈதென்னவிந்தை யென்று கூறித் தன் விலாவிறச் சிரித்தனன். அரசன் அவனை நோக்கி, ஏ! அறிவிலி, இவ்வசோகினடியிலே தோன்றுவது இளந்தளிரன்று, இதன் வயவுநோய் கெட மாதர்கள் வைத்த அலத்தகச்சீறடிச் சுவடேயாம், என்று கூறினன். அதனைக் கேட்டலுமவன், நினது தேவியார் சீறடி நினது சென்னியிற் சேர்த்திய அளவில் முகமலர்கின்ற நின்னைக்காட்டிலும், அவருடைய சீறடி தன்னடியிற்பட்ட ஞான்றே தளிர்க்கும் அவ்வசோகம் பெருமையுடையதன்றோ? இச்செயலையின் செயல் நின்செயலை வென்றது. தோல்வி நின்னதேயென்று கூறினன். அரசன் தன் கையிலுள்ள புஷ்பமொன்றினால் அடிக்

தான். உடனே அந்தணன் கோபங்கொண்டவனாய் நீ அரசனானால் என்னை அடிக்கலாமோ, எந்த நீதியாற் றண்டித்தனை? அசோகினை உதைத்த யாரோ ஒருத்தியின் செயலினை மறைந்து நின்றுகண்டு அவ்விவரத்தையும் எனக்குக் கூறின நினது செயலினை நினது அரசிக்குத் தெரிவித்து நின்னைத் தண்டிக்கின்றேன், என்று நகையாடிப் பேசினன். அரசன் தன் இரண்டு கைகளாலும் அவன் கரங்களைப் பற்றிக்கொண்டு இனியவனை இங்ஙனமடிப்பதில்லை யென்றுகூறி ராணியினிடம் கலகஞ் செய்யாதிருக்க வேண்டினன். இவ்விதமாகப் பேசிக்கொண்டே சென்று திவிட்டராஜன் ஆண்டுள்ள படிகமேடை யொன்றின்மீது ஏறி உட்கார்ந்தனன். அருகினின்ற அந்தணன் அச்சிலாதலத்தினை நோக்கினவண்ணம் நின்று, உடனே தன் கைகளை நெறித்துக்கொண்டு வெருவிய மனத்தனாய்க் கண்கள் புரள உடல்நடுங்கப் பெரிதும் வியர்த்து, ஓவென வாய்விட்டுக் குழறி ஓடினன். அரசன், அவனை அழைத்து ஏன் அஞ்சுகின்றனை, யாதுகண்டனை, என்றுவினவ அவனரசனை நோக்கி, ஐயனே! நீவிர் அந்த மணிச்சிலாதலத்திலிருக்க வேண்டாம்; அதனுள் ஒருபூதம் வாழ்கின்றது. அங்கிருந்தால் ஏதம் விளையும். நம்மிருவரையும் அதுசேர விழுங்கிவிடும். யாதும் தீதுவிளையுமுன் போதுவோம், போதுவோம், எழுக, எழுக, என்று கதறினன். அரசன் அதன் உருவம் எப்படியுள்ளது என்று கேட்க அவன் கூறுவானாயினன். அரசே! என்னவென்று சொல்லுவேன்; அதன் பயங்கரமான உருவத்தை நினைத்தாலும் என் மனம் நடுங்குகின்றது.

ஒளிவிடும் பொற்குண்டலங்களையும், வளையங்களையு மணிந்த காதுகள் இருபுறமும் தொங்கிஅசைய, அதனது பெரியகண்கள் காண்போரை அச்சுறுத்துவனபோல் நாலாபக்கமும் இடைவிடாமற் சுழலுகின்றன. குறுகிய கைகளையும் தாழிபோல் நீண்டுசரிந்து தொங்கும் வயிற்றினையும் பார்க்கப் பார்க்க எனக்குப் பயங்கரமாயிருக்கின்றது. அதனது பெருவயிற்றில் நம்மைப் போலப் பத்துமனிதர் குடியிருக்கலாமே. உடனே அவ்விடம் விட்டெழுங்கள், என்று பரிதபித்துக் கூறினான். திவிட்டநம்பி அவனைநோக்கி, அடே பெருமூடா! அது நின்னுடைய நிழல் என்பதை அறிகிலையோ, சந்திரகாந்தச் சிலாதலத்திற் றோன்றும் நினது பிரதிபிம்பத்தினைக்கண்டு நீயே அஞ்சுகின்றனையே, என்றுகூறி நகைத்தனன். உடனே வேதியன் நம்பியைநோக்கி ஐயனே, நீவிர் கூறுவது சிறிதும் பொருத்தமற்றது. என்னுடைய வயிறு இவ்வளவு பெரிது இருக்குமா. என்வயிற்றின் பரிமாணம் எனக்கே தெரியாதா. மேலும் ராமேச்சுவரஞ் செல்லினும சனீச்சுவரம் விடாதென்று கூறுவதுபோல் யான் யாண்டேகினும் என் நிழல் என்னைவிட்டுத் தொலையுமா? அது கல்லுக்குள் எங்ஙனம் புகுந்துகொண்டிருக்கும், என்று கரைந்து அழுவானாயினன். திவிட்டன் அவனைப் பார்த்து, அடே பேதாய்! நீ செய்யும் தொழில்கள் யாவற்றையும் உன்னுடைய நிழலுஞ்செய்வதைப் பார்த்து அஃது தங்ஙனமாதலை யறிக, என்று கூறினன். உடனே விதூடகன் தன் கைகால்களை யசைத்துக்கொண்டு அச்சிலாதலத்தினெதிரே நின்று கூத்தாடினன். அவ்விதமே

அவனது நிழலும் அசைவதைக்கண்டு ஒருவாறு தெளிந்தனனாயினும் அப்பூதம் தன்னைப்போல் நடித்துக் கோரணி காட்டுகின்றதோ என்ற ஐயம் அவன் மனத்தில் ஒருபுறமிருந்தது. என்றாலும் அரசன் தன்னுடைய நிழலே யென்று கூறியதனால் ஒருவிதந்தேறி அச்சிலாதலத்தின் ஓரத்தில் ஒருபுறமுட்கார்ந்தனன். இப்படி இருவரும் இருக்கும் சமயத்தில் சுயம்பிரபை தனது தோழியர் புடைசூழ அச்சோலையை யடைந்து அரசனறியாமல், தான் அவனோடு விளையாட விரும்பித் தனது விஞ்சையின் வல்லபத்தால் தன் உருவத்தைப் பிறர்க்குப் புலப்படாவண்ணம் மறைத்துத் தன் தலைவன் அருகிற்போய் நின்றனள். அப்பொழுது விதூடகன் அரசனைநோக்கி, வேந்தே! ஈண்டுநிற்கும் இவ்வசோக மரம் தளிர்க்கும் வண்ணம் இதன்மீது தனது அலத்தக மூட்டிய பாதத்தினை வைத்த மாது யார்கொலோ, எவ்வுலக நங்கையோ வென்றுவினவ, அவற்குத் திவிட்ட நம்பி, விதூடக! சிவந்து செறிந்து திரண்ட விரல்களையுடைய இவ்வடியினழகினை நோக்குங்கால் இஃது அரசனுக்குரிய விஞ்சைய மடந்தையின் மெல்லடி யென்பதற்கு ஐயமேயில்லை. அவளையும் நன்கறிவேன், என்று கூறினன். இதனை மறைந்து கேட்டுக்கொண்டிருந்த சுயம்பிரபை தன்னிலும் வேறாய் ஓர் விஞ்சையமடந்தை அரயனுக்குரியளோவென்று வெகுண்டு கண் சிவந்து நுதல் வியர்க்க அரசன்முன் தனது சுயரூபத்தோடு நின்றனள். கோபத்தோடு திடீரென்று தோன்றிய சுயம்பிரபையினைக் கண்ட விதூடகன் பயந்து சோலைக்குள் ஓடிப்போயினான். அவள் கோபத்தைக்

கண்ட நம்பி அவளுக் கின்மொழிகூறி உபசாரஞ் செய்தனன். அவள் சிறிதும் சினம் மாறாது அவனை நோக்கி, "சிவந்து, செறிந்து, திரண்ட விரல்களோடு கூடின அடியின் சுவட்டினால் அறிந்துகொண்ட விஞ்சையன் மடமகள் எவளோ அவளோடு நீ விளையாடி மகிழ்க. யான் என் கன்னிமாடம் புகுகின்றேன்" என்றனள். அவன், "அம்மகள் நீயே ஆதலின் என்னினின்று பிரிந்தேகுதல் தக்கதன்று" என்று அவளைத் தேற்றுமாற்றால் தேற்றினான். அவள் கோபம் சிறிதாறி, ஓடிய பார்ப்பானைப் பிடித்துவரத் தன் சேடியர்க்குக் கட்டளையிட்டனள். மாதர்கள் சென்று அவனை வலிந்துபற்றி இழுத்து வந்தார்கள். அவன் மிக்க பேதமையுடையவனாய்க் கண்கள்புரள நாற்புறமும் விழித்து ஒருபுறமொதுங்கி அஞ்சி அஞ்சி வருவதைக்கண்ட விஞ்சையன் மடமகள் நெஞ்சகங் குளிர்ந்து புன்னகைசெய்து தன் சேடியரை நோக்கி, பார்ப்பானைப் பூமாலைகளால் கட்டி இழுத்துவர ஏவினள். அப்பொழுது அரசன் பேசிய இனிய மொழிகளால் கோபமுற்றினு மாறிய அம்மங்கை, அப்பார்ப்பான் ஏன் ஓடினான், யாது தவறு இழைத்தனன், கூறுக என்று கேட்க, அவனும், மாதர்மணியே! இம்மாதவன் தீதொன்றும் புரிந்திலான், சிறிதும் ஏதமிலான் என்று கூறினான். அவளும் மனங்களித்து அவ்வேதியனைக் கட்டிய மாலைகளை அறுத்தெறிய ஆஜ்ஞாபித்தனள். குறிப்பறியும் அந்தணன் அரசியின் முன்னர் அவள் மனமகிழுமாறு அற்புதமான ஆடல், பாடல்களோடு ஆசியஞ்செய்யத் தலைப்பட்டனன். அச்சோலையின்கண் இனிமைமீறிய

கனிகளின்மேலே தன் மனமேறுவதையும் வாய் ஊறுவதையும் கையாற் சைகைசெய்து கூறுவதோடு நில்லாது வாயாலும் இன்னிசை யெழுப்பிப் பாடுவானாயினான்.

"ஓடு மேமனம் ஓடுமே
கூடு மேதணி கோதையாய்!
காடு சேர்கனி காண்டொறும்
ஓடு மேமன மோடுமே."

"ஊறு மேயெயி றூறுமே
வீறு சேர்விரி கோதையாய்!
சேறு சேர்கனி காண்டொறும்
ஊறு மேயெயி றூறுமே."

"வேண்டு மேமனம் வேண்டுமே
பூண்ட பொன்னணி மார்பினாய்!
நீண்ட மாங்கனி நேர்தொறும்
வேண்டு மேமனம் வேண்டுமே."

என்று கைதட்டிக்கொண்டு குதித்துக் குதித்துப் பாடினான். இதைப்பார்த்துச் சுயம்பிரபை அவன் வேண்டிய கனிவகைகளை ஏராளமாக வரவழைத்துத் தந்து அவற்றை அவன் வயிறாரத் தின்று மனங்களிக்குமாறு செய்தனள். பின்னர் அவள் பாரிஜாத மகனுக்குக் காமவல்லிக் கன்னியினை மணம் செய்யுந் தொழிலில் ஊக்கமுடையாளாய்த் தன் தலைவனையும் அவன் பாங்கனையும் அழைத்துக்கொண்டு, இரத்தினவேதிகையின்நடுவில் வைத்துப் பனிநீர்விட்டு வளர்க்கப்பெற்ற பாரிஜாதத்தருவினையடைந்தார்கள். அப்பொழுது அவள்சேடியர் குழாங்கள் பலவாத்தியங்களைக் கோஷித்துக்கொண்டு அவளை வந்து சூழ்ந்தன. பின்னர், மகளிர்கள் ஒருங்குகூடி பாரிஜாதத்

திற்கும் காமவல்லிக்கும் பனிநீரினுல் மங்கல ஸ்நானஞ் செய்து இரத்தினுபரணங்களைப் பூட்டிச் சாந்தங் குங்கும மாதியவற்ரு லலங்கரித்து அவற்றிற்கு முறையே பொழிலரசு, பொழிலரசி என்ற பட்டங்களை இட்டுக் கொண்டாடினுர்கள். பிறகு யாவரும் பெருங் களிப்புடையராய்த் தத்தம் விளையாட்டின்மேற் சென்றனர். திவிட்டனுக்கும், சுயம்பிரபைக்கும் அப்பொழுது மக்களைப் பெறவேண்டுமென்ற விருப்பம் பெரிது முண்டாயது. "இன்னகைப் புதல்வர் செல்வம் யாவரே யினிதென்ருதார்." பின்னர்ச் சுயம்பிரபையும் ஏனைய மடமாதர்களும் பொழில்விளையாட்டு விளையாடி நிற்குமளவில் திவிட்டனும் அந்தணனும் மாயவித்தையால் மறைந்து நின்று அன்னோர் புரியும் விளையாடல்களைக் கண்டு மகிழ்ந்தனர்.

மாதர்கள் மலர்கொய்தும், பிணையல்கள் புனைந்தும், அவற்றையணிந்தும், பின்னர்க் களைந்தெறிந்தும், மலரா மரங்களை மலர்வித்தும், மலர்ந்த மரங்களிலேறி விளையாடியும் பொழில் விளையாடுதலைப் புரிந்து, பின்னர் ஆங்குள்ள செய்குன்றுகளில் ஏறித்திரிந்தும், சிலம்பெதிர் கூவியும், அம்மனை கழங்கு பந்து முதலியவைகளைக் கொண்டு விளையாடியும், பாடியும் பொழுது போக்கி யிருக்குமளவில், திவிட்டன் ஒரு மாயாதெய்வத்தை அழைத்து அதனை ஓர் களிருக அம்மாதர்கள் முன்வர ஏவினன். மங்கையர்கள் யாவரும் அதனைக் கண்டு வெருவி விரைந்தோடினர். அப்பொழுது சுயம்பிரபை அச்சம் பெரிதுமடைந்து, தனது காதலனைக் கூவினுள். அவனும் அவள்முன் தோன்றி யானையைத்

துரத்தித் தேவியைத் தேற்றி அவளது நிலைகுலைந்த கோலத்தைச் செவ்வனே திருத்தி அவளை மனங்களிக்கச் செய்தனன். சூரியன் உச்சிப் பொழுதையடைய மாதர்களின் நுதலில் முத்தனைய வியர்வையைக் கண்ட திவிட்டன் அவர்களை யழைத்துச்சென்று சந்தனவாவி, செங்குவளைவாவி, பன்னீர்வாவி, முதலிய தடாகங்களில் நீர்விளையாடல் புரிந்து மிகவும் அகங்களிகூர்ந்தனன். பிறகு யாவரும் அச்சோலையின் நடுவணுள்ள சந்திர காந்த மண்டபத்தினை யடைந்து ஈரம்புலர்த்தி எழிலாடை புனைந்து களபமணிந்து பனிநீர் தெளித்த நறுமலர் மாலைசூடி அமிழ்தினுமினிய போனகங்களை யுண்டு நெடுநேரம் விளையாடிக்கொண்டிருந்தனர்.

அப்பொழுது இரதநூபுரசக்கிரவாளத்திலிருந்து ஒரு தூதன் ஆகாயவழியாக வந்து அரசனையடைந்து அவனடிபணிந்து நின்றனன். அரசன் அவனை நோக்கிச் சடியரசன் முதலியோர் க்ஷேமமோவென்று குசலம் வினவினான். அத்தூதனும், வாழிய, அனைவரும் க்ஷேமமென்றுகூறித் தான் கொணர்ந்த சடியரசன் திருமுகத்தை அரசன் கையில் நீட்டினான். அவன் அதனை வாங்கிச் சுயம்பிரபையினருகு நின்ற அவளது உயிர்த்தோழியாகிய அமிர்தமா பிரபையினிடங் கொடுத்து அதனை வாசிக்கச் சொல்லினன்.

அவளும் அங்ஙனம் செய்தனள். அதிற் கண்டிருந்த விஷயம், ஸுரேந்திர காந்தமென்னும் உத்தரசேடி நகரத்தினை அரசாளும் மேகவாகனன் மகள் ஜோதிமாலையென்னும் அணங்கினைச் சடியரசன் மகன் அருக்ககீர்த்திக்கு மணம்புரிந்த விவரமே. இதனைக்கேட்ட

யாவரும் எல்லையற்ற இன்பத்தில் மூழ்கி அத்தூதற்கு வேண்டிய ஆடையணி முதலியன ஈந்து மனமுவப்ப விடைகொடுத் தனுப்பினார்கள். அவனும் அவர்களை வணங்கிச் சென்றனன். அப்பொழுது சூரியன் அஸ்தமித்தனன். இராக்காலமானபின் திவிட்டனும் அரசகன்னியரும் பற்பல ஆடல் பாடல்களினால் மனங்களித்துப் பின்பு அரசனும் அரசியும் சயனக்கிரகத்தில் அழகிய மஞ்சமேறித் துயில் கொண்டனர். சுயம்பிரபை தூங்குகையில் களங்கமற்ற பூரணசந்திர னொன்று தன் வாயினுட்புகுந்து வயிற்றினிற் சென்றதாகக் கனவு கண்டஞ்சி எழுந்து அக்கனவினைத் தன் காதலற்குக் கூறினள். அவன் அவளை அஞ்சலையென்று தேற்றி இஃதோர் நன்னிமித்தமே. ஏகசக்கிராதிபதியாக இவ்வுலகத்தினை ஆளும் மைந்தனைப் பெறுவாய், என்று கூறினான். அப்பொழுது ஆகாயத்திலுள்ள சந்திரன், தான் அவள் வயிற்றினுட் புகுந்தது உண்மைதானென்று உலகங்கருதச் செல்லுவான்போல அஸ்தமனமாயினன்; சூரியன் அவள்வயிற் றோன்றும் புதல்வன் பேரொளியினைக் காட்டுவான்போலக் கீழ்த்திசையில் உதயமாயினன். அன்றுமுதல் சுயம்பிரபை கருப்பவதியாயிருந்து தக்க காலத்தில் கோள்களும் நாள்களும் வலியுறச் சுவாதி நட்சத்திரத்தில் ஒரு புதல்வனைப பெற்றெடுத்தனள். அவன் பிறந்தபொழுது பற்பல நற்சகுனங்களும் நிகழ்ந்தன. மங்கல தூரியமெங்கும் கடலொலிபோல் முழங்கின ; நகரமாந்தர் மாலை தோரண மாதிபவற்றால் நகராலங்காரஞ் செய்தனர். இறைவன், மறுமன்னரிடம் ஏழு வருடமளவும் இறை வாங்காதொழிக, பொன்னை

யும் மணியையும் யாவருங்கொள்ள வாரிவீசுக, காவலி லிருந்த குற்றவாளிகள் பலரையும் சிறைவீடு செய்க, என்று எங்கும் முரசறைவித்தனன். அருகனாலயத் தில் பலிகளிட்டுத் திருவிழாக் கொண்டாடினர். மாக ளிர்கள் ஒருங்குகூடி வீதிகள்தோறும் எண்ணெயும், களப முழம், இழுதும், நானமும், சுண்ணமும் தூவி விளையா டினர். பிறகு புண்ணியாகவாசனம்செய்து அக்குழ ந்தைக்கு விஜயனென்று நாமகரணஞ்சூட்டி வளர்ப்பா ராயினர். அப்புதல்வன் நாளொருமேனியும், பொழு தொருவண்ணமுமாய்ச் சுக்கிலபக்ஷத்துத் தாராபதி போல் இனிது வளர்ந்தனன். இம்மங்கலச் செய்தி யைத் தக்கணசேடிக்கு அறிவிக்கத் திருமுகத்தோடு தூதனை விடுத்து, அவன் வரவினை எதிர்பார்த்திருக்கு மளவில், விமானமொன்று விசும்பாறுக விஞ்சையருலகி னின்று மண்ணிடையிழிந்தது. இஃதென்னையென்று யாவரும் யோசித்து இருக்குமளவில் விமானத்தினின்று இழிந்துவந்த தூதர்கள் திவிட்டநம்பியை நோக்கி, ஐய! நம்மரசன் அருக்ககீர்த்தியின் மனைவி சோதிமாலை நித் திரைசெய்யும் அமயத்தில் மதியமொன்று இழிந்து வந்து தன்வயினடைந்ததாகச் சொப்பனங்கண்டு அது முதல் கருப்பவதியாயிருந்து நல்ல சுபமுகூர்த்தத்தில் அமிர்தசேசனென்னும் பெயரிய புதல்வனைப் பயந்த னள். இம்மங்கலத்தை நுமக்குரைக்கும் பொருட்டு எம்மை எண்ணெயும் சுண்ணமும்கொண்டு இவண்வர அரசன் ஆஜ்ஞாபித்தனன். இதுவே எம் வரலாறென் றுரைத்தனர். இதனைக்கேட்ட திவிட்டராஜன் உள்ளம் மகிழ்ந்து வந்தவர்கட்கு உபசாரங்கள் செய்து

அளவிறந்த ஆடையாபரணங்கள் அளித்து விடைகொடுத் தனுப்பினான்.

ஈதிங்ஙனமாக, சரத்காலத்துப் பூர்வபக்கத்துத் திங்களைப்போல் வளர்ந்த விஜயன் ஐந்து வயதினனாய்க் கல்விகற்றற்குரிய பருவத்தினை யடையப் பெரியார் பலர் ஒருங்குகூடி நல்ல சுபமுகூர்த்தத்தில் நானாவித வாத்தியங்களுங் கோஷிக்க அவனுக்கு நல்லாசிரியர் முன்னிலையில் வித்தியாரம்பம் செய்வித்தனர். அவன் கல்வி கற்று வருநாள் திவிட்டநம்பியின் அருளினைப் பெற்ற சுயம்பிரபை விஜயனுக் கிளையாளாய் இளையாட்கு இளையாளாகிய புதல்வியை பெற்றெடுத்தனள். பெற்றோர் அக்குழவிக்கு ஜோதிமாலையென்று நாமகரணஞ்செய்து இம்மங்கலச் செய்தியை வித்தியாதர வுலகிற்கும் அறிவித்தனர். அப்பெண்மணியும் காமவல்லியோ, தாமரைச் செல்வியோ என்று யாவருங் கருதப் பேரழகுடன் வளரப் பல கலைஞ்ஞானங்களையும் போதித்தனர். அவளும் திருமகளேயன்றிக் கலைமகளையும் பொருவுவாள் இவளெனயாவருங் கூற எல்லா விஞ்சைகளிலும் வல்லவளாயினள். ஒருநாள் இவள் தன் சேடியரோடு பந்து விளையாடிக் கொண்டிருந்தபொழுது திவிட்டராஜன் அவளைக்கண்டு தன் அருகே யழைத்துத் தன் மடிமீதிருத்தி நெற்றியிலுண்டாகிய குறுவேர்வையைத் துடைத்துச் சீராட்டினன். அப்பொழுது அவள் மங்கைப் பருவமடைந்ததை யுணர்ந்த அரசன், தன் மனைவி சுயம்பிரபையோடு தமது மடமகளின் மணவினையைப் பற்றி ஆலோசித்துச் சுயம்வரநாட்டுதலே தக்கதென்று தீர்மானித்து, இன்னநாள் சுயம்வர தினமென்று ஏற்படுத்

திப் பற்பல தேயமன்னருக்கும் தூதரைப் போக்கி, நகர மெங்கும் முரசறைவித்தனன். சுரமைநாடெங்கும் அமரருலகம்போலப் பேரொளி பரந்து நின்றது. சுயம் வரத்திற்கு பற்பல தேயமன்னரும், மண்டலீகரும், பட்டவர்த்தனரும், மகுடவர்த்தனரும், விஞ்சையர், அமரர், கருடர், கின்னரர், கிம்புருடர், கந்தருவராதியோரும் வந்து சேர்ந்தனர். போதனமாநகரமெங்கும் இடம் போதாதாயிற்று. திவிட்டராஜன் மைத்துனன் அருக்ககீர்த்தியும் தன் மனைவி ஜோதிமாலை, மகன் அமிர்ததேசன், மகள் சுதாரையாகிய இவர்களோடு போதனமாநகரம்வந்து சேர்ந்தனன். திவிட்டராஜன் அவர்கள் யாவரையுமழைத்து உபசரித்தனன். சுயம்வர தினத்தன்று பற்பல வாத்தியங்களும் கடல்போலொலிக்க வந்த அரசர் முதலியோர் சுயம்வர மண்டபத்தை யடைந்து தங்கள் தங்களுக்கென் றியன்ற மஞ்சங்களில் ஏறியிருந்தனர். அவர் தம்முள் இக்ஷுவாகு குலத்தோன்றலாகிய அயோத்திமன்னனும், குருகுலம் பெருமை யுறப் பிறந்த அத்தினபுரி அண்ணலும், நாதவபுரக் கொழுந்தாகிய குண்டலபுர மன்னனும், உக்கிரசேன குலச் செம்மலாகிய வாராணசி நிருபனும், அரிகுலத்திற் சேர்ந்த சூரியநகர் நராதிபதியும், சந்திரகுலோத்தமனான மதுரையம்பதிப் புரவலனும், இன்னும் பற்பல தேயமன்னர்களும் சுயம்வர மண்டபத்தில் எள் விழுதற்கு மிடமின்றி நிறைந்திருந்தனர். அப்பொழுது அருக்ககீர்த்தியின் குமாரனாகிய அமிர்ததேசனாதிய வித்தியாதர குமாரர்களும் அம்மண்டபத்தை யடைந்து தத்தம் ஆசனங்களில் வீற்றிருந்தனர்.

பின்னர், திவிட்டராஜன் கட்டளைப்படித் தாதியர்கள் ஜோதிமாலைக்கு மணவணிபுனைந்து மாலைசூட்டி அச் சபைக்குக் கொண்டுவந்தனர். அப்பொழுது மங்கல வாத்யங்கள் அளவின்றிக் கோஷித்தன. அவள் நடந்துசெல்லும் வழியில் இடையறாது மகரந்தப்பொடிகளைத் தூவினர். அவள் அன்னம்போல் மென்மெல நடந்துசென்று சபையிற் புக்கனள். மன்னர்கள் யாவரும் அவள் பேரழகினைக் கண்டு வியந்து, இவளது கைம்மாலையைப் பெறுங்காளையே நல்லபாக்கியவான், அவன் யாவனோ, என்று பெருங்கலக்க முற்றிருந்தனர். அப்பொழுது ஜோதிமாலையின் அருகிலிருந்த உயிர்த்தோழி அவளுக்கு அங்கு வந்திருந்த இக்குவாகுகுலத்திறைவன் முதலான நிலவேந்தர்களைப் பிரம்புகொண்டு சுட்டிக்காட்டி, அவரைப்பற்றியும் அவர் நாடுநகரங்களைப் பற்றியும் விவரமாய் எடுத்துக் கூறினாள். இதோ நவரத்தின கசிதமாய் விளங்கும் இரத்தின ஸிம்மாசனத்தில் அழகிய பருவதாகிருதியான புயங்களோடு விளங்குபவன் இணையற்ற இக்குவாகு குலத்தரசன். இவன் தருமசக்கிரப் பிரவர்த்தகனாகிய அருகக் கடவுளின் பத மலரை மறவாதவனாய் விருஷப தீர்த்தங்கரரின் அருளினால் இரத்தின கிரீடத்தைப் புனைந்து அரசாண்டு வருபவன். இவனுக்கு நிகராகப் பராக்கிரமத்தையுடைய அரசர் எவருமில்லை. அவன் பக்கத்துவிளங்குபவன் அழகிய சக்கிரங்களுடைய இரதத்தின்மேலேறி ஸமுத்திரத்தின்மேலும் அதனை ஓடச்செலுத்திப் பகைவரை வென்று அளவற்ற நிதியினையும் மணியினையும் அணிகலங்களையும் கப்பமாகக்கொணர்ந்து உலகம்யாவும் ஒரு

குடையின்கீழ் உறங்கக் காத்த பரதராஜன் வழித் தோன்றல்; இவனால் நிலமடந்தை துயர்நீங்கி வாழ் கின்றனள். இவனது குணத்தின் நலத்தினையும் அழ கின் பெருமையையும் யாவரே எடுத்துரைக்க வல்லார். இவனது இடப்பாகத்தில் வீற்றிருப்பவன் குருகுல மன்னவன். இவன் அருகக் கடவுளின் திருவருளால் அகனிலம் உய்யுமாறு தனது ஆழியைஉருட்டி, மண்ட லாதிபர்கள் எவரையும் வென்றிகொண்டு, தன்னடிப் படுத்திய வயவீரன். தேவர்கள் ஒருங்குசேர்ந்து சப்த மேகங்களையேவிப் பெருமழை பொழிந்தகாலத்தில் இவன் சரக்கூடங்கட்டி ஒரு துளியுமுட்புகாமற் செய்த பெருமுரவோன். இவன் பெருமையை எடுத்து இயம்ப வல்லவர் எவருமிலர். இவன் பக்கத்தில் தவளக்ஷத்திர நிழற்ற வெண்கவரி இருபுறமுமசைய வீற்றிருப்பவன் வடமலைமேலரசாண்டு உலகுதுறந்து பெருந்தவம் புரி ந்த சயம்பூவின் வழித்தோன்றல். சக்கிரவர்த்திகள் வரிசையாகப் பிறந்து உலகாண்ட உக்கிரசேன ராஜ வம்சத்தின் சிறந்தோனாகிய இவ்வள்ளலின் திருவழகினை இனிது நோக்குவாயாக. அதோ தெரிகின்றவன் நாதவ குலத்துத் தோன்றலாகிய குண்டலபுரத்தரசன். இவன் சோழன், இவன் பாண்டியன், இவன் கலிங்கன், இவன் தெலுங்கன், இவன் கோசலத்தான் மற்றவன் காபுரத் தான் என்று மன்னர் பலரையும் அன்னவர் கீர்த்தியை யும் எடுத்துக்கூறிப் பின்னர் தேவகணங்களோ டொரு புறமிருந்த விஞ்சையர் வேந்தரைக்கூறி வந்தனள். அப் பொழுது பாங்கி, அருக்ககீர்த்தியின் புதல்வன் அமிர்த தேசனைச் சுட்டிக்காட்டி அவனை இன்னான் என்று

உணர்த்துமுன்னரே, ஜோதிமாலையின் கண்கள் அக் காளையின் பேரழகாகிய வலையிற் சிக்குண்டதனால் அவள் அக்கோதிலாக் குமரர்க்கே தனது பாணியால் தாதுலாமாலைசூட்டி நாணினால் தலைவணங்கி நின்ற னள். ஊழ்வினையின் வல்லபத்தினை எவரே உய்த்துணர வல்லார். திவிட்டநம்பி, தனதுமகள், தன்னுடைய மைத் துனன் மகன் அமிர்ததேசனுக்கு மணமாலை சூட்டி யதையறிந்து மனமகிழ்ந்து, அவர்களைக் கங்கைபாதிப் புனித நீர்களால் மஞ்சனமாட்டி மங்கல தூரியமுழங்க அந்தணர் செந்தீவளர்ப்ப விவாஹமஹோத்ஸவத்தைப் பலரும் கண்டு களிகூர இனிது இயற்றினன். அருந் ததி தரிசனமும், பூரணாகுதிகளும், நடந்தபின்பு தம்பதி களிருவரும் தம் மாளிகை யடைந்தனர். விவாக முடி ந்தவுடனே விஞ்சையராஜகுமரான் அருக்ககீர்த்தி தன் மடமகள் சுதாரைநாம சுந்தரிக்குச் சுயம்வரமென்று யாண்டும் முரசறைவித்து அரசர்களை மண்டபத்திற் சேர்த்து நல்ல முகூர்த்தத்தில் தன் மகளைச் சுயம்வர மண்டபத்திற்குத் தோழியர் புடைசூழ வரவழைத்த னன். தோழிகள் அம்மங்கைக்கு அரசர்கள் பலரையும் ஒவ்வொருவராக இன்னார் இன்னாரென்று எடுத்துக் கூறிவரும்பொழுது, அந்நங்கை திவிட்டராஜன் புதல்வ னாகிய விஜயகுமாரனுக்கே மாலைசூட்டினள். பின்பு சுதாரைக்கும் விஜயனுக்கும் முறைப்படி அக்கினி சாக்ஷியாக விவாகம் நடந்தேறியது. யாவரும் பேரா னந்தத்தில் மூழ்கினர். விஜயகுமாரனும் அவன் மனைவி சுதாரையும் போதனமாநகரில் இனிது வீற்றிருக்க, ஜோதிமாலையும் அமிர்ததேசனும் இரதநூபுரத்தினை

யடைந்து பேரானந்தம் அனுபவிப்பாராயினர். திவிட்ட ராஜன் ஏகசக்கிராதிபதியாகவும் அவன் மகன் விஜயன் இளவரசாகவும் மறுமண்டலாதிபர்கள் தம்மை வணங்கிப் பணிகேட்ப அரசுவீற்றிருந்தனர்.

## அத்தியாயம் 9

இங்ஙனம் திவிட்டராஜன் சுயம்பிரபைமங்கையை மணந்து ஸர்வலோக நாயகனாகி இந்திராதியரும் அனுபவித்தற்கரிய இணையிலாப் பேரின்பத்தினை அனுபவித்தலையும், எல்லா நகரங்களிலும் போதனமாநகரமே சிறப்படைந்து விளங்குவதையும் பயாபதி அரசன் கண்டு களிகூர்ந்திருந்தனன். ஒருநாள், திவிட்டன் புதல்வனும் புதல்வியும் பயாபதி அரசன் பாங்கணையப் பயாபதி அரசன் அவர்களைப் பலவிதமாகப் பாராட்டிச் சீராட்டிச் சிறப்புச்செய்து அவர்களுடன் களித்திருக்கும்பொழுது, அவனுக்கு அடியிற்கண்டபடி ஓர் எண்ணம் தோன்றியது. 'உலகிலுள்ள அரசர் பலருள்ளும் நான் பெரிதும் மேம்பட்டுவிளங்க எனக்குத் திருமாலின் அவதாரமான திவிட்டன் மகனாகத் தோன்றியதும், விஞ்சையராஜன் தனது மகளை அவனுக்கு வலியக்கொணர்ந்து கொடுத்துச் சிறப்புச் செய்ததும், இவர்தம் குழந்தைகளாகிய விஜயனும் ஜோதிமாலையும் மாநுடர்க்கரிதாகிய வித்தியாதர பதவியினையடைந்ததும் ஆகிய இவையெல்லாம் நான் முற்பிறப்பிற்செய்த தவத்தினாலன்றோ. ஆதலின் இப்பொழுதும் நான் தவமியற்றினால் இன்னும்மேலான பத

வினையடைந்து பெரும்பேறு பெறலாம். இவ்வுலகத்தில் இதற்குமுன் அரசாண்ட பராக்கிரமமுடைய அரசர் பலரும் மாய்ந்தனரே யன்றிச் சிரஞ்சீவியாய் வாழ்ந்தவரார்? அறுவகைச் சுவையினையுடைய உண்டிகளை மாறி மாறி யுண்டு இரத்தினாபரண பூஷணங்களை அணிந்து, நாம் நாம் என்று பேரபிமானத்துடன் வளர்ந்த இவ்வுடலமும் வாலிப யௌவன கௌமார நிலைமைகளைக்கழிந்து நரை திரை மூப்புப்பிணிச் சாக்காடடைந்து மேகத்தில்விழுந்த இந்திரதனுவைப்போல் போக்குவரவினை அறியற்பால வாகாப் புணர்ப்பினை யுடையதாய்க் கழியுமாதலின், அதனை நம்புதல் பேரிழுக்கினைத் தரும்.

“எரிபுரை யெழில தாய
விளந்தளி ரிரண்டு நாளின்
மரகத வுருவ மெய்தி
மற்றது பசலை கொண்டு
கருகிலை யாகி வீழ்ந்து
கரிந்துமண் ணாதல் கண்டும்
வெருவிலர் வாழ்து மென்பார்
வெளிற்றினை யிலக்க லாமோ.”

“தொகைமல ரலங்கல் சூட்டித்
தூநறுஞ் சுண்ண மப்பிப்
புகைநனி கமழ வூட்டிப்
புறஞ்செயப் பட்ட மேனி
சிகையினோர் சிறுமுட் டீண்டச்
சிதைந்தழுக் கொழுகு மாயின்

நகைபெரி துடைத்து நாளு
மிதனைநா மகிழ்த னெஞ்சே,"

என்று இவைபோன்ற பலவற்றைச் சிந்தித்து, நிலையில்லாதவற்றைக் கொண்டே நிலையுள்ள தருமத்தைச் செய்கவென்று வேதங்கள் கூறுகின்றமையால் நாம் இந்தச் சரீரமுள்ளபோதே இம்மை மறுமைகளை யளிக்கும் தருமத்தைச் செய்யவேண்டும். காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளாதவன் பேதையினும் பேதையாவான். ஆதலின், உண்மைஞானத்தைப் பெறவேண்டுவது அத்தியாவசியகம், என்று தீர்மானித்துப் பயாபதி அரசன், தன் மந்திரிகளை வரவழைத்து மந்திரசாலையை அடைந்து, அவர்களை நோக்கிப் பின்வருமாறு பேசுகின்றனன் :—

மந்திரிகாள்! பகைமன்னராற் கொள்ளப்படாததாயும் கள்வராலும் அபகரிக்க முடியாததுமாகிய நிலைபெற்ற செல்வம் ஒருவருக்குக் கிடைக்குமாயின், அதனை எங்ஙனம் காப்பாற்றலாம்? அதனைக் கெடுக்கவரும் இடையூறுகள் யாவை? என்று கேட்ப, அதற்கு அமைச்சர்கள், அரசே! நற்குணமுடைய ஒருவன் தன் முயற்சியா லீட்டிய செல்வத்தினை நல்வினை உளதேல் இனிதனுபவிக்கலாம். அதற்கு இடையூறாக எதிர்வது கூற்றமே, என்று கூறினர். அதற்கு அரசன், அக்கூற்றத்தால் கொள்ளப்படுவது யாது? அதனைக் கூறுமென, அவர், அரசே! நாளுலந்தகாலத்துக் கூற்றுவன் மேல் வந்து ஆன்மாவினைக் கவருவான், என்றனர். அரசன் எவ்வுபாயத்தால் அக்கூற்றுவனை வெல்லலாம், என்று கேட்ப அதற்கு அவர், ஐயனே! பல பிழைகளையு மியு

ற்றிப் பலவிதமான பிணிகளாகிய சேனைகள் சூழவந்து உயிரின் வாழ்நாளை அபகரிக்கின்ற கூற்றுவனை வெல்லும் உபாயத்தை யாங்கள் அறிந்திலோம், என்று கூறினார்கள். பயாபதி அவர்களைநோக்கி, அமைச்சரே! நமது செல்வமெல்லாம் காலன் கையிலுள்ளது. ஆன்மா இவ்வுலகத்து வாழும் வாழ்க்கை, மான்கன்றொன்று தன் மேல் கொடியவேங்கை ஒன்று பாய இருக்கும்பொழுது இளம்புல்லை ஆய்ந்துமேயும் தன்மையினை நிகர்க்கும், என்று கூறினன். அமைச்சரும், தாங்கள் கூறுவதுண்மையே, யாம் அனைவரும் யானைவாயிற் கவளம்போலக் காலன்வாயில் அகப்பட்டு விழிக்கின்றோம், என்றுகூற, அரசன், அக்காலன் வாயினின்றும் தப்புமாறு உறுதி கூறும் தக்கோர் யாவர்? என்று வினவினன். அதற்கவர்கள் உலகவாசையைத் துறந்து அருகன் திருவடிப் போதினை அனவரதமும் அகத்திற்கொண்ட முனிவரரே அதற்குத் தக்கோர். அமலன் அடியைத் தியானிக்கும் அறிவுடையோரினும் பெருமையுடையோர் எவருமிலர். ஆதலின், அருகக்கடவுளின் திருவடியை அடைக்கலம் புகுதலினும் உயிருக்கு உறுதிபயக்கும் அரண் வேறொன்றும் இல்லை யென்று கூறி முடித்தனர்.

இதனைக்கேட்ட பயாபதிஅரசன் அவிர் சுடர் விளக்கில் நெய் விட்டாங்கு அகமிக மகிழ்ந்து தன் பரிசனங்களை நோக்கி மலர்மிசைவதியும் வானவர்க்கு இன்று அணிவிழா அயரும் நற்றினமென்று நகரமெங்கும் முரசறைய ஏவினன். இதனைக் கேட்ட மாந்தர் பலரும் நகரினைப்புனைந்து பொன்னுலகினும் அணிபெற அலங்கரித்தனர். நவமணிகள் புதை

த்த மாடங்கள்மிசை அகிற்புகை வதியும் தோற்றம், மேருமலையின் சிகரத்தில் இளமழை தவழ்வதொத்து விளங்கியது. பயாபதி அரசன் தூயநீர்படிந்து புனிதனாய் அருகனாலயம் செல்லப் புறப்பட்டனன். அப்பொழுது வெண்துகிலுடுத்து வெண்மாலைசூடி வெண்சாந்துபூசி வெள்ளணி யணிந்து வெண்மருப் பிரண்டுடைய வேழங்களிலிவர்ந்து வேதியர் பலரும் ஆதிநாதன்ஓதிய போதநூல்பயிலும் வாயினராய்க் கடவுளைப் பரவிவந்தனர். அரசர்கள் பலரும் செவ்வாடை தரித்துச் செம்மலர்மாலைசூடிச் செவ்வணியணிந்து செஞ்சாந்து பூசி அரசுவாக்களின்மேல் ஆரோகணித்துப் பின் தொடரலாயினர். செங்குவளை மலர்சூடிச் செம்பொற்சாந்து பூசிப் பொன்னணி புனைந்து பீதாம்பரங்கள் தரித்து வைசியரும் சூத்திரரும் இவர்கள் பின் நெருங்கிவந்தனர். இங்ஙனம் யாவரும் தன்னைச் சூழ்ந்துவரப் பயாபதி அரசன் பட்டத்துயானையின் மீதேறி, நீர்ப்பலி, விரைப்பலி, மலர்ப்பலியாகிய இவற்றை யெடுத்துக் கொண்டு வேலனகண்மடவார் இருபுறமும் கவரிவீசப் பால்போலும் வெண்ணிறமுடைய ஆதபத்திரம் மேலே நிழற்றச் சினகரத்தைச் சென்றடைந்து, அருகனை மனமொழி மெய்களால் வணங்கிப் பூஜைசெய்து சினகரத்தை வலம்வந்து அருகக்கடவுளின் எதிர்நின்று வாயாரத் துதித்து வாழ்த்தினன். பின்னர், கடவுளின் திருமாலிய சேடத்தையணிந்து அயலிலுள்ளதோர் மண்டபத்தில் தியானச் சோதியுடன் அமர்ந்திருந்த ஓர் முனிவரைக் கண்டு வணங்கி அவர் பதமலரைச் சிரமேற்சூடி, ஐயனே! அடியேன் உய்யுமாறு பிறவிப்பிணியை நீக்கும்

உபாயத்தினை அருள் செய்யவேண்டும், என்று பிரார்த்தித்தனன். அம்முனிவரும் அரசனைநோக்கிப் பின்வருமாறு உபதேசம் செய்தருளினர்.

அரசனே! உலகில்வாழும் ஆன்மகோடிகள், நரககதி விலங்குகதி மாநுடகதி தேவகதி என நால்வகைப்படும். அவற்றுள் நரககதி பாவஞ்செய்தோர் மேவும் உலகமாம். அந்நரகம் எழுவகைப்பட்டு ஒவ்வொன்றும் எவ்வேழு பாகங்களை யுடையதாய் நாற்பத்தொன்பதாய் விரிந்து நிற்கும். சிலநூல்கள், அவை எண்பத்துநான்கு பிரிவினையுடையனவென்றும் கூறுகின்றன. அவை இருள்நரகம் முதல் கும்பிக்குழி ஈறாக வாயினாற் சொல்லவும் மனத்தினால் நினைக்கவும் அருவருப்பினைத் தரத்தக்கவைகளாம். அந்நரகங்களை யடைந்தவர் படுந்துயரங் கணக்கில. அவரவர்கள் பூமியிற்செய்த பாவச் செயல்களுக்குத் தண்டனையாக பற்பலவிதமான துயரங்களை அவர்கள் அநுபவிப்பார்கள். எமகிங்கரர்கள் சிலரைக் கொதிக்குமநெய் புகைந்துகொண்டிருக்கும் செப்புக்கடாரத்திவிட்டுப் பொரிப்பர். சிலரைப் பழுக்கப் பழுக்கக் காய்ந்த இருப்புப்பாவையைத் தழுவென அடிப்பார்கள். இருப்புமுளைகள் பதித்த பெரிய தண்டாயுதங்களால் சிலர் உடலங்களைப் பஞ்சாய்ப்பறக்க அடித்து நொறுக்குவார்கள். சிலர்வாயில் தாமிரத்தை உருக்கி வார்ப்பார்கள், சிலர் நாவினைப்பிடுங்கியும், சிலர் கண்ணைச்சூன்றும், சிலர் உடலங்களைச் செக்கிலிட்டுத் திரித்தும், தோலைஉரித்து நெருப்பில்வாட்டியும், கோடாலிகளால் மார்பினைப் பிளந்தும், கழுமரங்களிலேற்றியும்,

தண்டம் புரிவார்கள். இங்ஙனம் தண்டிக்கப்படுபவர்க ளுள் தண்ணீர் வேட்கையால் அலறுபவர்களுக்குக் காலதூதர் நச்சுப்பொய்கைகளில் நீருண்ணச்செய்து அவர்கள் நாவினை அழுகி விழும்படி இயற்றிக் கொடுமை புரிவார்கள். இன்னும் எத்துணையோ விதமான வேதனை கள் பல அங்கே உண்டு. கீழ்நரகங்கள் ஒவ்வொன்றினும் அதன் அதன் மேலுள்ள நரகிற்படும் துயரங்களுக்கும் தண்டனைகளுக்கும் இரட்டிப்பு இருந்துகொண்டு இருக் கும். முதல் நரகில் அனுபவிப்பவருக்கு அற்பகாலம் பதினாயிரம் ஆண்டு, அதிககாலம் ஒரு ஸமுத்திரவருட மாகும். அதன் கீழ்நரகங்களில் கிடப்பவர்கள் அவ்வவ் விடங்களில் துயரனுபவிக்கும் சிறுகாலஎல்லை, தமக்கு மேல் நரகத்தாருடைய பெருங் காலமாம். கீழ் ஆறு நரகங்களினும் இருப்பவர்களுக்கு அதிக காலமாவது மூன்று, ஏழு, பத்து, பதினேழு, இருபத்திரண்டு, முப் பத்துமூன்று என்னும் கடற்றொகை அளவினவாம். அரசனே! அந்நரகங்களை யனுபவிப்பவர்கள், பிறர்மனை விழைந்தோரும், அழுக்காறுடையோரும், உயிர்க் கொலை செய்தோரும், அல்லவழியாற் பொருளீட்டியோ ரும், அறங்கொன்றோரும், அறத்தினை யிகழ்ந்தோ ரும், பிறஉயிர் செகுத் ததனை யுண்டோரும் முதலாகிய பாவத்தொழில் புரிந்து வந்தவர்களே. இவர்கள் நர கிற்கிடந்து பலகாலம் அனுபவித்த பின்னர், இவ்வுல கத்தில் மீண்டும் மீண்டும் பிறந்து முன் வாசனையின் தொடர்பால் பாவங்களைப் புரிந்து மீளாநரகிற் காளாகு வர்.

இனி, ஓர் அறிவு உயிர்முதல் ஐயறிவு உயிர் ஈறாக

விலங்கு கதியின் பாற்படும். அவை ஐவகைப்படும். அவை தம்முள் ஓரறிவுயிர்கள் சில அசைவுடையன வாகவும், சில அசைவில்லாதனவாகவும் பொருந்தும். இவ்வோரறி வுயிர்களில் அனந்தம் பேதங்கள் உண்டு. அவற்றின் பெயரும் யாவரும் அறியார்களெனின் அவ ற்றைப் பற்றிய விவரங்கள் கணக்கிலடங்கா. ஈரறிவு முதல் ஐயறிவு இறுதியான நான்கு ஜீவன்களும், தாம் தாம் முற்பிறப்பிற் செய்த பாவத்தால் விலங்காய்ப் பிறந்து ஊர்ந்து சென்றும் நிலங்களை உழுதும், பாரங் களைச் சுமந்தும், ஊனின் பொருட்டுக் கொல்லப்பட்டும், அரசர் வேட்டையில் அகப்பட்டும் பலவாறழிந் தொழி யும். அரசனே! கன்னியர் வேட்கையும், கடவுளின் தகைமையும், பிணியின் கொடுமையும், விலங்கின் துய ரமும், முற்றத்துறந்த முனிவரே யன்றி ஏனையோர் அறியற்பாலரல்லர். இத்தகைய விலங்கினங்களாகப் பிறந்து துயருழப்போர் எவரெனில், தவசிகளைப் போல வேடம்பூண்டு மாயம்புரிந்து உலகினை வஞ் சித்துத் திரிவோரும், இரஸவாதம் முதலியன புரி ந்து பெரும் பொருள் தருவதாகச் சிறு பொருளு டையோரை யேமாற்றிக் கைப்பொருள் பறித்துத் திரி வோரும், ஜீவன்களுக்குண்டான இடர்களைக் கருதாத வரும், முதலில் ஒரு பற்றினல் நட்புப்பூண்டு பின்பு கோபத்தினல் அந்நண்பினர்க்குத் தீமை யியற்றினே ரும் உறவின்முறையாரை ஒறுத்தவரும், கடவுளும் இல்லை ஆன்மாவும் இல்லை பாவபுண்ணியமில்லை, பிற ப்பு, இறப்பு, நன்மை தீமையாதிய இல்லை என்று சூதர்

க்கவாதம் பேசித்திரியும் கொழுப்புடையோரும் ஆகிய இவர் முதலாகிய பலருமாம்.

மன்னவ! இனி மாநுடகதியை யான் கூறக்கேள்; மக்கட்கதியென்பது ஒரேகதியாயினும் அம்மக்களினுள்ளும் சேகர், மிலேச்சர், மனிதர், திப்பியர், போகமனிதர் என்னும் பலவித விகற்பங்கள் உண்டு. சேகரும் மிலேச்சரும், பிறப்பினும் உருவத்தினும் மாநுடரைப் போல்வராயினும் அறிவு முதலியவற்றால் விலங்கினத்தை யொத்தவர். சிற்சில இடங்களில் நீண்ட வால்களோடும் தேகமுழுவதும் அடர்ந்து நீண்ட உரோமத்தோடும் விளங்குகின்றனர். மாநுடருள்ளும், மனிதருள்ளும், நடுவுநிலைமையின்றி நீங்கிக் குதர்க்கவாதம் மேற்கொண்டு இந்திரியங்கள் வழிநடக்கும் மனமுடையராய் ஊனுண்டு கொடுந்தொழிலைப் புரிவோர் ஆதியோரும் விலங்கின் பாற்படுவர். இவர்களையன்றி நற்குலத்தில் நற்றேயத்தில் பிறந்துளாராயினும் தக்கவின்ன, தகாதன வின்னவென்று ஒக்க ஆராயும் பகுத்தறிவு இல்லாத மாநுடரும் மக்களுட் பதராவர். இவையின்றி முன்னியற்றிய தவத்தினால் நற்குலத்தில் உற்பவித்தாலும் ஊமை, செவிடு, முடம், குருடு, பேடி, அலி முதலியனவாக மக்களுட் பிறப்பினும் அஃது இழுக்குடைத்தாகும். மேலும் கருவிலழிதல், பிறந்தவுடன் மரித்தல், இளமையில் இறத்தல், முதலிய அகாலமிருத்துவோடு இடையிடையே அனுபவிக்கவரும் நோய் முதலியனவும் இல்லாமலே, நல்லொழுக்கம் தலைக்கொண்ட மனிதரே மாநுடவகுப்பில் சிறந்தவராவர். இத்தகைய மனிதர் அனுபவிக்கும் இன்பமானது அற்பசுகம் என்று

கருதப்படவேண்டும். ஒருவன் மகாரணியமொன்றில் வழிதப்பி அலைந்துதிரிகையில் புலியொன்று துரத்த மரமொன்றின் மேலேறி இராப்பொழுதைக் கழிக்க நினைத்தவன், ஒரு கிளையில் தூங்கிக்கொண் டிருக்கும் பொழுது கைதவறிக் கீழேவிழ, விழும்பொழுது ஆண்டுத் தொங்கிய இரண்டு கொடிகளைப் பற்றிக்கொண்டு இழியுமளவில் இழியுமிடம் ஒரு பெரும் பாழுங்கிணறாய் இருந்தது. அதினின்றும் ஐந்துதலை நாகம் ஒன்று கடுவிடத்தை உமிழ்ந்து அவன்மேல்வரக் கிணற்றினின்றும் வெளியேறப் பார்த்தபொழுது வெளியில் நின்று மதயானை ஒன்று பாய்ந்து சாடிவர,அவன்மேலும் போக முடியாமற் கீழும்செல்ல முடியாமற் கொடிகளைப்பற்றித் தொங்கி யிருக்குமளவில் வெள்ளை எலி யொன்றும் கறுப்பு எலி யொன்றும் அவன் கைப்பற்றிய கொடிகளைக் கடித்துவிட, அச்சமயத்தில் மரத்தின் கிளையொன்றிற் கட்டியிருந்த தேன் கூட்டினின்றும் இரண்டொரு துளிகள் அவன் வாயில் தற்செயலாய் விழ, அவன் அதற்குப் பெரிதும் மனமகிழ்ந்தனன். எத்துணையோ துன்பங்கள் மலைமலையாய் அளவின்றிச் சம்பவியாநிற்க அவைகளுக்கிடையே அனுபவிக்கப்படும் இவ்வுலக இன்பமானது மேலேசொன்ன கதையிற் பாழுங்கிணற்றில் விழுந்த மனிதன் தேன் றுளியை நக்கி மனமகிழும் சுகத்திற்குச் சமானமாகும். எனின், மானுடஜன்மத்தாற் பயன் சிறிதும் இல்லையோ என்னும் ஆசங்கை உண்டாகலாம். நற்குணத்தை மேற்கொண்டு தானம், தவம், பூஜை, என்று நல்லொழுக்கமுடையாய் இந்நிலவுலகத்திற் காலங்கழித்தவர் பின்னர்க்

கற்பக நிழலையுடைய போக பூமிகளில் அளவற்ற இன்பம் துய்ப்பர். தானம் ஈவோரும் ஏற்போரும், உத்தமர், மத்திமர், அதமர், என மூவகைப்படுவர். ஈயப்படும் பொருளும் மூவகைப்படும். ஐம்புலன் ஒடுக்கினோரிலும் மனவமைதி உடையர்களாய்த் தானமேற்போர் இருத்தல் வேண்டும்; ஒப்புரவு, அடக்கம், பிறர்க்கு நன்மைசெய்தல், உற்றார் உறவினரை ஓம்புதல், உண்மை வழிநிற்றல், ஆதியவைகளே ஏற்பார்க்குள்ள குணமாம். காலத்தில் ஈதலும், கண்ணோட்டமுடைமையும், ஈதலின் ஆசையும், இரவலர் மாட்டன்பும், பொருளினிடத்துப் பற்றின்மையும், வறுமையையறிந்து ஈதலும், ஈவோர்க்குள்ள குணமாம். ஆதுலரைக் கண்டஞான்று கன்றினைக்கண்ட கறவையெனமனமுருகி விரைவிற்சென்று வலிய உபசரித்து ஈவோர், நிலவுலக மன்னராய் நீடூழி வாழ்வார். அத்தகையோரே மனிதருட்சிறந்தோர். அஃதன்றி உயிர்களுக்கு இடையூறு செய்து திரியும் கொடியோருக்கு ஈயும் தானம், கைப்பொருளை இழப்பிப்பதோடு நரகத்தினையும் அடைவிக்கும். ஆகாயத்திற் செல்லும் சனியனை யாரே விலைக்கு வாங்குவார்? இதுநிற்க, உத்தமோத்தமரான முனிவராருக்கு ஈந்த தானப்பயன் ஈவோனைத் தேவருள் ஒருவனாக வைக்கும். இது விசேஷ தருமம். இவ்விசேஷ தருமத்தை உண்டாக்குவதற்குக் காரணமான சாமானிய தருமங்கள் பல உள. அவை அருள், அறிவு, நற்குணத்திலாசை, தவம், ஞானம், தியானம், புகழ்புரிதல், ஆகிய இவ்வேழுமாம். அவற்றுள் அருள், மன்னுயிர் துன்புறுங்கால் அதனைக்கண்டு மனமிரங்கி

அத்துன்பினை ஒழிக்கத் தோன்றும் நற்குணமாம். விருப்பு வெறுப்பின்றி மெய்யுணர்வோடு இருப்பதே அறிவாம். அறிவுடையார்மாட் டன்புவைத்து முனிவரர் ஒழுக்கத்தைப்புகழ்தல் முதலாகிய செயல்கள் நற்குணத்திலாசை. நற்றவம் இழைத்தல், நல்லொழுக்குடையராயிருத்தல் முதலியன புகழ்புரிதலாம். தவமெனப்படுவது ஆசியம், இரதி, அரதி, சோகம், பயம், சுகுத்ஸையாகிய அறுவகைத் துவர்ப்புக்களும் நீங்கி உத்தம ஒழுக்கத்தை மேற்கொள்ளுதலாம். ஞானம் என்னப்பட்டது இறைவனாலே உணர்ந்து நுண்ணறிவுடையோரால் அறியப்பட்டு அஜ்ஞான இருள் நீக்குவதாய் மெய்ப்பொருளை விளக்குவதே. தியானநிகழ்வு, ஆர்த்தம், இரௌத்ரம், சுக்கிலம், காட்சியென நால்வகைப்படும். இவைமுறையே ஜனனமரணங்களுக்கு ஏதுவாயும் போகமோக்ஷத்தைக் கொடுப்பதாயும் உள்ளன. காட்சி என்னும் தியானவிளக்கை ஏற்றினவர்கள் மேலேசொன்ன விரதானுட்டானங்கள் இலராயினும் பிறப்பிறப்பின்றி எக்காலத்தும் இடையறாத போக மோக்ஷங்களையே அனுபவிப்பர். இவர்களிங்ஙனமாகப் போகமனிதரெனப்படுவோர் உனது புதல்வர்களான விஜயன், திவிட்டன் முதலாகிய பதினெட்டுப் பேர்கள் உளர். நின்குல முதல்வனாகிய பரதனும் நீயும் அவர் தம்முட் சேர்ந்தவரே. அருகனும், வீடடைந்த துறவோரும் இப்போகிகளுள்ளே தலையாயவர். தகுதியான தானம் முதலியவற்றைச் செய்து போகபூமியை யடைந்தவர்கள் அளவிலா இன்பம் துய்ப்பர். அந்நிலத் துறைவோர்க்குக் குழந்தைப்பருவம் நாற்பத்தொன்பதுவயது.

அதன் பின்னர்க் காளையராகவும், கன்னியராகவும் அமைவர். அங்ஙனம் அமைந்த தலைவனும் தலைவியும் தத்தம் ஊழ்வினையாற் பொழிலினையடைந்து தெய்வங் கூட்ட ஒருவரையொருவர் கண்டு காமுற்று, மூன்று பல்லமென்னும் கால அளவு முடியும்வரைப் பலவகைச் சுகானுபவங்களை நுகர்வர். குறித்தகாலம் முடிந்தவுடனே அவர்கள் மேற்கதி யடைதலல்லது கீழ்நோக்குவது இல்லை.

புண்ணியமேலீட்டினால் ஆன்மா தெய்வபதவி யடைந்து அமரரின்பம் அனுபவித்தலுண்டு. அத்தேவர்கள் பவணர், வியந்தரர், சோதிடர், கற்பகர், என்று நால் வகைப்படுவர். இவர்கட்குமேல் மூவகையினர் விளங்குவர். பவணர் ஆயிரம் அணிமணிப் பணுமுடியையும் அழற்சிகையினையும் உடையார். கின்னரர், கந்தருவர் முதலியோர் வியந்தர ரெனப்படுவர். இவர் இப்பூவுலகத்து எங்கும் இயங்குபவராய், யாழ்முதலியன கைக்கொண்டு இசையறிகுநராய்க் களித்துத் திரிவர்; திருவிழா உள்ளவிடத்தில் அவர் இருப்பர்; தெய்வமன்னரைச் சேர்ந்து வழிபடுவர்; அட்டகுலகிரிகளிலும், சோலைகளிலும், வாவி கூப தடாக ஸாகராதிகளிலும், த்வீபங்களிலும், வெள்ளிடைகளிலும், நகரங்களிலும் ஒளிந்தும், வெளிப்பட்டும் திரிவார்கள். சந்திர, சூரிய கிரகநக்ஷத்திராதிகளே சோதிடரெனப் படுவர். இவர்கள் மேருவை வலம்செய்யும் வேலை மேற்கொண்டொழுகுவர். இவர்களுக்குமேல் கற்பலோகவாஸிகளே கற்பகராவர். இவர்களே இமையா நாட்டத்தவர்; வாடா மாலையும் கெடாததுகில்களு முடையராய்த் துன்பஞ்

சிறிதுமின்றி இன்பமே யனுபவிக்கும் இயல்பினையுடையர். இவர்களுலகம் இரவும் பகலுமின்றி எக்காலத்தும் பேரொளியுடையதாய்த் திகழும். சுரர்கள் அணிமா மகிமா முதலிய அட்டமாசித்திகளினும் வல்லவராவர். அரசனே! நான்குகதிகளையும், அக்கதிகளிலுள்ளார் இயல்பினையும், நரகத்திலும் விலங்குகதியிலும் செல்லாமல் நற்காட்சியுடையராய் அருந்தவம் புரிந்தோர் பெருமையுடையவராவர் என்பதையும், ஈண்டு ஒருவாறு எடுத்துக் கூறினேன். இவற்றை உய்த்துணர்வாயாக, என்று அம்முனிவரர் பயாபதி மன்னனுக்கு விரிவாய் எடுத்து உபதேசித்தருளினார். இந்தத் திவியோபதேசத்தைக் கேட்டு பயாபதி அரசன் இனிநான் அரைக்கணமும் தாமதியாமல் வீட்டுலக இன்பத்தினை மேவ விரைந்து தவம் செய்வேனென்றுகூறி எழுந்தான். அமைச்சர்கள் இவ் வுலகபாலனத்தினை விடுத்துச் சேறல் நீதியன்றென முதலில் மறுத்துரைத்தனர் என்றாலும், அரசன் மனவுறுதியை நன்குணர்ந்தபின்னர் அவன்கொண்ட கோட்பாடே தக்கதென்று உகந்து மனம் ஒப்பினார்கள்.

## அத்தியாயம் 10

மந்திரிகள் பயாபதியரசனை நோக்கி, அரசசிகாமணியே! பல ஊழிக்காலம் மேற்கூறிய நரகங்களினிடையே உழன்று வருந்திய ஓரான்மா தான் எப்பொழுதோ செய்த நல்வினைப் பயத்தால் அவ்விருளாதிய நரகங்களைக் கடந்து மேற்கதியடையப் போகும் தருணத்தில் அதனை வழிமறித்து மீளவும் நரகிலுய்ப்பேன், அஃதே நன்மை தரும், என்று விலக்கின், அதற்கு அவ்வான்மா உடன்படுமோ? மன்னனாற் சிறை

வைக்கப்பட்ட ஒருவன் அச் சிறைத்துன்பத்தினைப் பெரிது மனுபவித்துப் பின்னர் நீங்கியகாலத்தில் அவன் மீளவும் அச்சிறையுட்புகக் கருதுவானோ? அங்ஙனமே அனாதிகாலமாய் ஆன்மாவைப் பிணித்திருக்கும் இப் பிறவிப் பிணியை அஞ்சி, அதனை நீங்கி அழிவில்லாத தாய், ஒப்புயர்வற்றதாய், எக்காலத்தும் ஒருபடித்தானதாய், தெவிட்டாததாயுள்ள வீட்டுலக வின்பத்தை விரும்பித் தவம்செய்யத் துணிந்தவர்கள் ஆசைக்கடலுள் அமிழ்த்தும் தொடர்பினையுடைய பந்து மித்திர புத்திர களத்திராதிகளைச் சிறிதும் விரும்பார்கள். இருவினைப் பற்றற்றவர் எய்துதற்குரிய நிரதிசயாநந்தத்தையடையக் கருதியவர் நிலைபேறில்லாத ராஜபோகத்தைக் காலில் ஒட்டிய தூசியாகக் கருதுவார்கள். ஆதலின், மன்னவ, இனிச்சிறிதும் தாங்கள் தாமதிக்காமல் அரசுரிமைச் சின்னமாகிய அணிமுடியை நீக்கி அருந்தவம்புரிய ஒருப்பட்டெழுதலே முறைமையென்று விண்ணபித்தனர். பின்னர்ப் பயாபதி அரசன், தன் புதல்வரை அழைத்து, "மைந்தர்களே, பொருளில்லாதவர்க்கு ஐம்புலன் வாயிலாய் அனுபவிக்கப்படும் இன்பமில்லை. அருளில்லாதவர்க்கு முத்தியுலக வின்பம் இல்லை.

"பொருளிலார்க் கிவ்வழிப் பொறியின் போகமு
மருளிலார்க் கறத்தினும் பயனு நூல்வழி
யுருள்விலா மனத்தவர்க் குணர்வும் போன்மனந்
தெருளிலார்க் கிசைவில டிருவின் செல்வியே."

கல்வியில்லாதார்மாட்டு நுட்பமான அறிவு காணப்படாதவாறுபோல, நற்குணமும் அறிவும் இல்லாதா

ரிடத்துத் திருமகள் சேராள். திருமகளினது இயல்பினை யும் யான் கூறுவல், அமைவுடன் கேட்பீராக. அவள், பலகாலம் தன்னொடு பழகியவரையும் இகழ்ந்து நீத் துச் சமயம் வாய்க்குமிடத்து மற்றவர்களை விரும்புவாள். யாவரிடத்தும் நிலைபெற்றிராள்; செல்வமுள்ளளவும் அப்பொருளை முன்னிட்டுத் தானும் கலந்திருந்து செல் வம் நீங்கியகாலத்தில் விட்டுநீங்கும் பரத்தையைப் போல், அத்திருமகளும் புண்ணியமுள்ளளவும் ஒருவன் மாட்டிருந்து அஃது குறைந்தகாலத்து அவனை அகல் வாள். அவள் எவனை அணுகுகின்றனளோ, அவனிட த்திலுள்ள நற்குணங்களை மறைத்து அகங்காரம், கோ பம் முதலிய துர்க்குணங்களை வளரச் செய்வாள். கற்ற வர், நற்றவர் முதலியோரை உற்றவரென்று கருதாத வள். கணிகை மாதினை விரும்பியவன் கைப்பொருளிழ ந்து தவிப்பதுபோலத் திருமகளினை விரும்பினோனும் தனது நற்குணங்கள் தொலைந்து வருந்துவான். ஆதலின் அவள்மாட்டு என்றும் நீங்கள் அன்பு கொள்ளன்மின். அவளை அயலாளென்றே எப்பொழுதும் கருதுவீராக. உங்களிடத்து எக்காலத்தும் அன்புடையராக இருப்பவ ர்கள் கல்வியறிவிற் சிறந்த உத்தமரே. அவர்கள்பால் என்றும் அன்புவைத்து வாழ்வீராக. இனி நிலமடந்தை யின் இயல்பினையும், யான் கூறக்கேளுங்கள். அவள் குணம், குலம், செல்வம், இவற்றை யொன்றையும் கரு தாத தன்மையினையுடையாள், ஆற்றலும், சூழ்ச்சி யும் உடையார் மாட்டு அவாவிச்செல்லும் இயல்பினள். அவளை யடைந்து இன்புற்ற அரசர் ஆழிவாய் மணலி னும் பலராம். அவர்தம்முள் ஒருவருடனும் கூடச்

சென்றவளல்லள். தன்னை ஊழிக்காலம் ஆண்டுவந்த மன்னவன் இவனென்று எவனிடத்தும் பற்றுவையாது எவன் தன்னைக் கைப்பற்றுகின்றனனோ அவனையே சாரும் கற்பிலி. சிறிதுநேரத்திற்கு முன் தன்னை மணந்தாசாண்ட மன்னவன் போர்க்களத்தில் விழுந்து மடிய, அவள் சிறிதும் இரக்கமிலளாய் அவனை வதைத்த வனையே உடனே மணந்து மகிழும் மானமிலி. இவ ளுடைய பாதிவிரத்தியம் இங்ஙனம் உள்ளது. ஆதலின் இவள்பால் அன்பு சிறிதும் வையாதீர்கள். நீங்கள் சும க்கும் பூபாரத்தை உமது புதல்வர் தக்கபருவமடைந்த காலத்து அவர்பால் விறக்கிவிட்டு உங்கள் உயிர்க்கு உறுதியினைப் பயக்கும் தவத்தினைச்செய்து முத்தியின் பத்தை யடைய விரும்புவீர்களாக.

மைந்தர்களே, யான் இவ்வரசாட்சியை இனி வேண் டேன். எவரும் கெட்டுதற்கரியதாய் அழிவில்லாததாய், ஒரே நிலைமையினை உடையதாய் விளங்கும் முத்தியுலக அரசாட்சியினையே விரும்பி மேவுவேன். இன்று முதல் இம் மாநிலக்காவல் நும்வயத்ததே. நீவிர் என்னுடன் இனியிருந்த நாள்களோ சில, இனிக்கழியவேண்டிய நாள்களோ பல. கற்றறிவிற் சிறந்தவர்களான நீங்கள் எனது பிரிவிற்காக அணுவளவும் வருந்தலீர். யானோ யாவற்றையும் துறந்து பெருந்தவம் செய்யத் துணிந் துளேன், என்றுகூறி முடித்தான். குமாரர்கள் இத னைக்கேட்டு அஞ்சலியஸ்தராய் அவன் அடிமலர் பணி ந்து, ஐயே, யாங்கள் அடிகட்கு எத்தவறு இழைத் துளோம், எங்களைவிட்டு இங்ஙனம் நீங்க, என்று கவ ன்று உரைத்தனர். பயாபதி மன்னன், நீவிர் ஒரு

பிழையும் இழைத்திலீர், என்றுகூறி, அவர்கட்கோர் அயலவன் போலாயினான். பின்னர், இந்நாளளவும் தனக்கு ஆவியும், அமுதமும் போன்றவரான மனைவியரை வரவழைத்து, தேவியரே! யான் தவஞ்செய்யத் துணிந்தேன். நும்கருத்து என்னையோ வென்று வினவ, அன்னோர், தாமும் தவஞ்செய்தற்கு ஒருப்பட்டு அவனுடன் செல்லத் துணிந்தெழுந்தனர். இதனைக்கண்ட அமைச்சர்களும் தாமும் தவத்தின்மாட்டு அன்பு கொண்டவராய்த் தமது அமைச்சுரிமைத் தொழிலைத் தம்மைந்தர்மாட்டு ஒப்புவித்துத் தாமும் தவஞ்செய்யப் புறப்பட்டனர். அவ்வமயத்துப் பயாபதி அரசன் திருப்பாற்கடலினின்றும் தேவர்கள் கொணர்ந்த அமுத நீரில் மூழ்கித் தன்னரசக்கோலத்தை நீத்துத் தவக்கோலம் மேற்கொண்டனன். அக்காலத்து அவன் ஆணைவழிநின்று அடிபணிந்து வாழ்ந்த குறுநிலமன்னவர் ஓராயிரவர், தாமும் தம் அரசாட்சியைத் துறந்து தம் மைந்தருக்கு மகுடாபிஷேகம் செய்துவிட்டுத் தவஞ்செய்ய ஒருப்பட்டனர். விஜயனும் திவிட்டனும் தமது பிதாவின் துறவிற்காக முதலில் வருந்தினவராயிருப்பினும் பின்னர் இயல்பான தம்மறிவின் மேம்பாட்டினானும், உடனிருந்த முனிவரர் உரைத்த தேற்றத்தினானும் மனந்தெளிந்தவராய் வருந்துதலொழிந்து, நித்திய இன்பத்தை அடையமுயலும் தமது பிதாவினை வணங்கி விடைபெற்றுத் தம் நகரையடைந்தனர். மற்றுமுள்ளோரும் இவ்வுலக வின்பத்தைத் திரணமென்று நினைத்துத் துறந்த அம்மன்னனைப் பெரிதும்வியந்து, அவன் அடிபணிந்து விடைபெற்று மீண்டனர்.

பயாபதி மன்னன் முனிவர்கூறிய நன்னெறியில்

நின்று ஐம்புலன்களையு மடக்கிக் காமாதி யறுவகைப் பகையையும் கடந்து, பேரின்பவாரிதி சூழ்ந்த முத்தி யுலகினைக் கைப்பற்றிப் பெருவாழ்வுடன் வீற்றிருந்த னன். இங்ஙனம் இமையவருள் ஒருவனுய்க் கடவு ளின் நிலைமையை யடைந்து அறவாழியுட்குளித்து ஆரொளி பரப்பிநின்ற பயாபதி மூர்த்தியை அமரர்கள் அடிபணிந்து வாழ்த்தி மலர்சொரிந் தேத்தித் தத்தம் உலகு சென்றனர். பயாபதி தனது கேவலப் பேரொ ளியால் உலகமெல்லாம் விளங்க அருங்கதிர் பரப்பு மோர் சூளாமணியாய்த் திகழ்ந்தனன். யாவராலும் கடத்தற்கரிய மயக்கமாக்கடலை யொழித்துத் தேவ ர்கள் தன்னடிபோற்றப் பயாபதி அரசன் பிரம லோகத்தை இனிதாண்டு வீற்றிருக்க, திவிட்ட ராஜன் உலகமுழுவதும் தன் ஆணைவழிச்செல்ல ஒருகுடை நீழலின்கீழ் மன்பதை உவந்து வாழ்வெய் தத் தனது தேவியும் மக்களுமகளித்து வீற்றிருக்க அறவாழி அந்தணனை அனவரதமும் அகத்தடக்கி நீடூழிகாலம் அரசாண்டு மகிழ்ந்திருந்தனன்.

"வலம்புரி வண்ணனு மகர முந்நீர்
மணிமேனி
யுலம்புரி தோளினனு முலக மெல்லா
முடன்வணங்கச்
சலம்புரி வினைவென்ற தங்கோன் செந்தா
மரையடிக்கீழ்
நலம்புரி விழவியற்றி நாளு நாளு
மகிழ்கின்றார்."

சுபம்.

---

முற்றிற்று.

# அரும்பதவகராதி

அகம் : மனம்.
அங்காந்த : வாய்திறந்த.
அசதி : நகைமொழி, விநோதப் பேச்சு.
அசலம் : மலை.
அஞ்சனம் : மை.
அட்டமங்கலம் : "சாமரை தீபம் தமனியப் பொற்குடம், காமர் கயலினிணை முதலாத், தேமருவு, கண்ணாடி தோட்டிக் கதலிகை வெண்முரசு, மெண்ணிய மங்கலங்களெட்டு." [தமனியம்—பொன் ; காமர்—அழகு ; தேம்—இனிமை ; தோட்டி—அங்குசம் ; கதலிகை—கொடி.]
அடர்த்து : எதிர்த்து.
அடிகள் : ஆசாரியர்.
அடுதல் : கொல்லுதல்.
அண்டகடாகம் : அண்டத்தின் மேற்புறணி.
அண்ணல் : பெரியோன்.
அண்மி : நெருங்கி.
அணங்கு : தெய்வப்பெண்.
அணிகலம் : ஆபரணம்.
அதரம் : கீழுதடு.
அந்தி : மாலை.
அநங்கன் : மன்மதன்.
அநலம் : நெருப்பு.
அமைச்சர் : மந்திரிகள்.
அமோகமான : அளவற்ற.
அயர்வு : சோர்வு, இளைப்பு.
அயில் : வேல்.
அயினிநீர் : சோற்றுத் திரளைகள் பெய்த நீராஞ்சனம்.
அரசுவா : உத்தம இலக்கணமுள்ள யானை.
அரண் : காப்பு.
அரதி : வெறுப்பு.
அரிமான் : சிங்கம்.
அருங்கலம் : அரிய ஆபரணம்.
அருப்புக்கணை : புஷ்பபாணம்.
அல்லவழி : தீயவழி, துன்மார்க்கம்.
அலக்கண் : துன்பம்.
அலங்கல் : மாலை.
அலத்தகம் : செம்பஞ்சுக் குழம்பு.
அலாயுதம் : கலப்பைப் படை.
அவதி : எல்லை.

அவகிஞானம் : முடிந்த ஞானம்.
அவை : சபை.
அளகம் : முன்நெற்றி மயிர்.
அளவளாய் : கலந்து.
அற்றம் : குற்றம்.
அறத்தாறு : தருமமார்க்கம்.
அறவாழி : தருமசக்கிரம்.
அனவரதம் : சதாகாலம்.
அனைய : போன்ற.
அஸ்தகடகம் : கைவளை.
அஸ்திரம் : கைவிடும்படை.
ஆகுளி : சிறுபறை.
ஆசியம் : நகை.
ஆட்சி : ஆளுகை (ஆள்—பகுதி; சி—விகுதி).
ஆதபத்திரம் : குடை.
ஆதிய : முதலாகிய.
ஆதுலன் : வறியவன்.
ஆமோதித்தல் : ஒப்புக்கொள்ளல்.
ஆராமம் : சோலை.
ஆரோகணித்தல் : ஏறுதல்.
ஆலவட்டம் : வட்டவடிவமான விசிறி.
ஆவி : உயிர்.
ஆழி : சக்கிரம், கடல், மோதிரம்.
ஆற்றல் : சக்தி.
இங்கிதம் : நன்மை.
இடியேறு : பேரிடி.
இடுக்கண் : துன்பம்.
இந்திரதனு : வானவில்.
இமையவர் : தேவர்; விசேஷமுள்ள இமையினையுடையவர்; இமையாத கண்களை யுடையவர்.
இயக்கம் : சஞ்சாரம்.
இயங்காது : நடைபெறாது.
இயங்கும் : சஞ்சரிக்கும்.
இயம் : வாத்தியம்.
இரட்டுதல் : வீசுதல், முழக்குதல்.
இரதி : விருப்பம்.
இரவலர் : யாசகர்.
இலங்குதல் : விளங்குதல்.
இலச்சினை : முத்திரை.
இலேககன்: எழுத்துக்காரன்.
இவர்தல் : ஏறுதல்.
இழிந்து : இறங்கி.
இழுது : நெய்.
இளவல் : தம்பி.
இளையாள் : இலக்குமி.
இன்னன : இவைபோன்ற.
உசாவி : கேட்டு.
உடலுதல் : பகைத்தல்.
உடு : நக்ஷத்திரம்.
உதரம் : வயிறு.
உதிரம் : இரத்தம்.
உயங்குதல் : வருந்துதல்.
உராய்தல் : அதட்டுதல்.
உரியபருவம் : தகுந்தகாலம்.

உருத்து : கோபித்து.
உலத்தல் : அழிதல்
உலம் : கற்றூண்.
உவகை : களிப்பு.
உவணம் : கருடன்.
உழுவை : புலி.
உழையர் : ஏவல்புரிவோர்.
உளை : பிடரிமயிர்.
உற்பாதம் : தீச்சகுனம்.
உறங்கும் : தூங்கும்.
உறழும் : போலும்.
உன்னி : நினைத்து.
ஊடல் : பிரணய கலகம்.
ஊழித்தீ : பிரளய காலாக்கினி.
ஊறு : துன்பம்.
எய்த்தல் : இளைத்தல்.
எயிறு : பல்.
எழில் : அழகு.
எழு : இருப்புத்தூண்.
ஏதம் : குற்றம்.
ஏற்றம் : உயர்வு.
ஏனைய : மற்ற.
ஐயணை : இலவம்பஞ்சு, வெண்பஞ்சு, செம்பஞ்சு, மயிர், அன்னத்தின் தூவி, இவற்றானியன்ற சயனங்கள்.
ஐவகைத்தாயர் : நற்றாய், செவிலித்தாய், ஊட்டுந் தாய், முலைத்தாய், கைத் தாய்.
ஒண்ணாது : முடியாது, கூடாது.
ஒப்புரவு : உலகத்தோடொ ப்பவொழுகுதல்.
ஒருங்கே : ஒன்றாகக்கூடி.
ஒளித்தல் : பிரகாசித்தல்.
ஒற்றர் : தூதர்.
ஓடை : யானை நெற்றிப் பட்டம்.
ஓதை : ஓசை.
ஓம்புதல் : பாதுகாத்தல்
ககனம் : ஆகாயம்.
கச்சை : யானைகட்டுங் கயிறு; அரைக்கட்டு.
கஞ்சம் : வெண்கலம்.
கடப்பாடு : கடமை.
கடிய : வேகமுள்ள.
கடுவன் : ஆண்குரங்கு.
கண்டம் : பாகம், துண்டம்.
கண்ணி : மாலை.
கண்ணோட்டம் : தாக்ஷண்யம்.
கண்ணுதல் : நோக்குதல்.
கணம் : கூட்டம்.
கணிகை : பொதுமகள்.
கதம் : கோபம்.
கமழ்தல் : வாசனை வீசுதல்.
கயம் : குளம்.
கல்லணை : ஜேணம்.
கலாபம்: மயிலினது தோகை.

கலினம் : கடிவாளம்.
கலுழன் : கருடன்.
கவரி : சாமரை.
கவான் : தொடை.
கவின் : அழகு.
கவுள் : கன்னம்.
கழல் : கழற்சிக்காய்.
களத்திரம் : மனைவி.
களபம் : சந்தனச் சேறு.
களிற்றினம் : ஆண்யானைக் கூட்டம்.
கறங்குதல் : ஒலித்தல்.
காப்பு : காவல்.
காரிகையார் : அழகுடைய மகளிர்.
கால் : காற்று.
காவணம்: நடைவானப் பந்தல்.
காழ் : வைரம்.
கான்று : கக்கி.
கிங்கரர் : வேலைக்காரர்.
கிளர்தல் : எழுதல்.
குசலம் : யோகக்ஷேமம்.
குஞ்சி : ஆண் மயிர்.
குடதிசை : மேற்றிசை.
குணத்தொனி : நாணியிலெழும்புமொலி.
குதூகலம் : சந்தோஷம்.
கும்பி :நரகத்தி லொரு பாகம்.
குரவர் : பெரியோர்.
குரோதம் : கோபம்.
குலம் : சிரேஷ்டம்.
குவால் : கூட்டம்.
குழாம் : கூட்டம்.
குறங்கு : தொடை.
குறிப்பு : உட்கருத்து.
குறுமுறுவல் : புன்னகை.
கூளி : பேய்.
கைம்மலை : யானை.
கையற்று : செயலற்று.
கோங்கு : வாசனை.
கொடிஞ்சி : தேர்மொட்டு.
கொண்மூ : மேகம்.
கொத்தளம் : மதிற்புறம்.
கொற்றம் : வெற்றி.
கொன்னே : வீணாக.
கோட்டம் : கோவில்.
கோடிகம் : பூந்தட்டு; அணிகலச்செப்பு.
கோடு : கொம்பு.
கோதை : மாலை.
கோலம் : அழகு.
கோள் : கிரகம்; ஞாயிறு, திங்கள் முதலிய ஒன்பது கிரகங்கள்.
கோளரி : சிங்கம்.
சகடம் : வண்டி.
சங்கற்பித்தனள் : தீர்மானித்தனள்.
சங்கிரணம் : கலப்பு.
சங்கை : சந்தேகம்.
சசிதேவி : இந்திராணி.

சதம் : நித்தியம்.
சந்திரகாந்தம் : சந்திரனொளியால் தண்ணீரைக் கக்கும் ஒரு கல்.
சப்ததாதுக்கள் : தோல், இரத்தம், என்பு, மூளை, தசை, மச்சை, சுவேதநீர்.
சரற்காலம் : மாரிகாலம்.
சஸ்திரம் : கைவிடாப் படை.
சாகை : கிளை.
சாந்து : சந்தனம், கலவைச் சாந்து.
சாம்பூநதம் : மேரு மலையிலுள்ள ஒருயாறு; தீண்டியதைப் பொன்னாக்கும் தெய்வத்தன்மையுடையது.
சால்பு : பெருமை.
சிகை : குடுமி.
சிலம்பு : பாதசரம், மலை.
சிலாதலம் : சாரணர் இருந்து தருமோபதேசஞ் செய்தற்பொருட்டுச் சமணர்கள் அமைக்கும் வட்டக் கற்பாறை.
சிலீமுகம் : அம்பு
சிலை : வில்.
சிவிகை : பல்லக்கு.
சிறை : தடை.
சிறைவீடு : சிறைச்சாலையினின்று நீக்குதல்.
சினகரம் : ஜினக்கிரகம்; ஆலயம்; அருகன் கோவில்.
சீயம் : சிங்கம்.
சுண்ணம் : வாசனைப் பொடி.
சுரும்பு : வண்டு.
சூரியகாந்தம் : சூரியனொளியால் தீப்பொறிகளைக் கக்கும் ஒரு கல்.
சூழ்ச்சி : ஆலோசனை.
சூழியம் : யானை முகபடாம்.
சூள் : சபதம்.
சூளாமணி : சூளம்—சிகை, மணி—இரத்தினம்; சிகாரத்தினம். சூடாமணி (சூடம்—சிகை). இஃது சிந்தாமணிபோல நினைத்தவற்றினைத் தரவல்லதோர் தெய்வமணி.
சூறைக்காற்று : பெருங்காற்று.
சூன்று : தோண்டி.
செகுத்தல் : அழித்தல்.
செம்மல் : செம்மைக்குணமுடையான்.
செயலை : அசோகமரம்.
செரு : யுத்தம்.
செல்லுதும் : செல்லுவோம்.
செவ்வி : அழகு.
செற்றலர் : பகைவர்.
செறுது : கோபியாமல்.

செறிந்தவர் : நெருங்கினவர் ; அன்பு மிக்கவர்.
சென்னி : தலை.
சேடி : தோழி.
சேய் : புதல்வன்.
சேறல் : செல்லுதல்.
சோவை: சோபை, பிரகாசம்.
சோணமேகம் : மழைமேகம்.
சௌபாக்கியம் : மங்கலம்.
ஞான்று : தினம், பொழுது.
தகர்ந்து : உடைந்து.
தகைந்து : எதிர்த்து, தடுத்து.
தடிதல் : கொல்லுதல், வெட்டுதல்.
தண்டம் : தண்டனை.
தமம் : இருள்.
தமர் : சுற்றத்தார்.
தமனியம் : பொன்.
தமாலம் : பச்சிலைமரம்.
தரணி : பூமி.
தலைக்கண் : முதலில்.
தனு : வில்.
தாது : மகரந்தப்பொடி.
தாபதமகள் : தவப்பெண்.
தாம்பத்தியம் : இல்லறம்.
தாமரைச் செல்வி : இலக்குமி.
தாராகணம் : நக்ஷத்திரக்கூட்டம்.
தாராபதி : சந்திரன். நக்ஷத்திரங்களுக்குத் தலைவன்.
தாழ்த்து : தாமதித்து.
தாழி : பெரும்பானை.
திகந்தம் : திசையினெல்லை.
திகழ்தல் : விளங்குதல்.
திகிரி : சக்கிரம்.
திங்கள் : சந்திரன், மாதம்.
திட்டிவிடம் : கண்ணில் விடமுடையவோர் கொடுநாகம்.
திண்ணிய : வலிய.
திப்பியம் : தெய்வத்தன்மை.
திரு : இலக்குமி, சந்நிதானம்.
திருவன் : செல்வன்.
திலகம் :
திலதம் : } நெற்றிப்பொட்டு.
திவளுதல் : அசைதல்.
திளைத்தல் : அனுபவித்தல்.
திறல் : பராக்கிரமம்.
திறை : கப்பம்.
தினகரன் : சூரியன், தினத்தைச் செய்பவன்.
துகள்படுத்தும் : அழிக்கும்.
துகில் : வஸ்திரம்.
துஞ்சினார் : இறந்தார்.
துதைதல் : நெருங்குதல்.
துயில் உணர்ந்து : நித்திரை நீங்கி.
துல்லியம் : பரிசுத்தம்.
துன்னி : நெருங்கி.
தூரியம் : வாத்தியம்.
தூற்றுதல் : சொரிதல்.

தெரியல் : மாலை.
தெருள் : அறிவு.
தேர்தல் : ஆராய்தல்.
தேஜஸ் : ஒளி.
தோக்கு : கூடி.
தொந்தயுத்தம் : கைகலந்த சண்டை.
நகுதல் : விளங்குதல்; மலர்தல்.
நஞ்சு : விடம்.
நடுவண் : நடுவிடம்.
நதம் : மேற்றிசை யோடும் யாறு.
நலம் : நன்மை,
நவநவமாய் : புதிதுபுதிதாய்.
நறவம் : தேன்.
நாஞ்சில் : கலப்பை.
நாட்டம் : கண்.
நாமகரணம் : பெயரிடுஞ்சடங்கு.
நாமஞ்சூட்டி : பெயரிட்டு.
நாராசம் : இருப்புக்கம்பி.
நாலுதல் : தொங்குதல்.
நாவாய் : கப்பல்.
நாள் : நக்ஷத்திரம்.
நானம் : புழுகு.
நானிலம் : பூமி; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு வகையான நிலங்களை யுடையது, காரணப் பெயர்.
நிமித்திகன் : சோதிடன்.
நிருபம் : கடிதம்.
நிருபர் : அரசர்.
நிருமாலியம் : பூசித்துக் கழித்தபொருள்.
நிலாவுதல் : பொருந்துதல்.
நீத்தோர் : துறவிகள்.
நீர்மை : தன்மை.
நீராஞ்சனம் : ஆலத்தி.
நேமி : சக்கிரம்.
நோக்கம் : உட்கருத்து.
நோன்பு : விரதம்.
பகுவாய் : பிளந்தவாய்.
பசலை : பசுமைநிறம்.
படமாடம் : கூடாரம்.
படர்ந்து : சென்று,
படலம் : கூட்டம்.
பண்ணுறுத்தல் : அலங்கரித்தல்.
பணி : தொழில்.
பணிலம் : சங்கு.
பரத்தை : பொதுமகள்.
பரதசாஸ்திரம்:நாட்டியநூல்.
பாரை : அடிமரம்.
பரிந்து : வருந்தி.
பருஉத்தடங்கை : பருத்த நீண்டகை.
பல்லாண்டு : வாழ்த்து.
பவனி : நகருலா.
பழனம் : வயல்.
பழுநிய : நிறைந்த.

பற்கடித்து : பல்லைக்கடித்து.
பன்னகம் : பாம்பு.
பாங்கன் : தோழன்.
பாணவர்ஷம் : அம்புமழை.
பாலனம் : காப்பாற்றுதல்.
பாலித்தல் : காப்பாற்றுதல்.
பரவுதல் : பொருந்துதல்.
பாஷ்பம் : கண்ணீர்.
பிலிற்றும் : சொரியும்.
பின்னர் : பின்பு.
பீழை : துன்பம்.
புகர் : யானைமுகப்புள்ளி.
புகல்வான் : சொல்லுவான்.
புச்சம் : வால்.
புடை : பக்கம்.
புறஞ்செய்தல் : வெளியலங்காரஞ் செய்தல்
புரவலன் : அரசன்.
புரவி : குதிரை.
புராதனம் : பழமை.
புரோகிதன் : முன்வைக்கப்படுபவன் என்னும் காரணப் பொருளை யுடையது.
புல்லுதல் : தழுவுதல்.
புளகாங்கிதம் : மயிர்க்கூச்செறிதல்.
புறங்கண்டு : வென்று.
புனைந்து : சூடி ; அலங்கரித்து.
புனைவன : சூடிக்கொள்ளப்பட்டவை.
பெற்றி : தன்மை.
பேழ்வாய் : பெரியவாய்.
பேழை : பெட்டி.
பொருப்பு : மலை.
பொருவிலா : நிகரற்ற.
பொலிவு : அழகு.
பொழில் : சோலை.
பொறித்த : எழுதின.
போதம் : அறிவு.
போது : மலராம் பக்குவமடைந்த அரும்பு.
போனகம் : உணவு.
மகட்கொடை : கன்னிகாதானம்.
மகரிகை : கிம்புரிப்பூண்.
மஞ்சம் : ஆசனம்.
மஞ்சு : மேகம்.
மடங்கல் : சிங்கம்.
மடவரல் : பெண்.
மண்மகள் : பூமாதேவி.
மத்தகம் : யானையின்தலை.
மத்தமா : மதயானை.
மதுப்பெருக்கு : தேன்வெள்ளம்.
மந்தி : பெண்குரங்கு.
மந்திரம் : இரகசியாலோசனைவீடு.
மந்திரக்கிழவன் : மந்திரி.
மருங்கு : பக்கம்.
மருப்பு : தந்தம்.
மலிதல் : மிகுதல்.
மன்றல் : மணம்.

மனோபாவம் : கருத்து.
மாட்சி : பெருமை (மாண், பகுதி ; சி, விகுதி).
மாண்பு : பெருமை.
மாற்சரியம் : பொறாமை.
மாற்றலன் : பகைவன்.
மாறு : விரோதம்.
மானவர் : மனிதர்.
மானும் : போலும்.
மிளிர்தல் : விளங்குதல்.
முகமன் : உபசாரவார்த்தை.
முகவாசம் : இலவங்கம், முதலிய வாசனைத் திரவியம்.
முகில் : மேகம்.
முகை : அரும்பு.
முண்மரம் : கருவேலமரம்.
முதியர் : வயோதிகர்.
முறுவல் : புன்னகை.
முன்னுணர்ச்சி : எதிர்கால வுணர்ச்சி.
மூப்பு : கிழத்தனம்.
மெல்லியல் : மென்மைத் தன்மை யுடையாள்; மென்மைத் தன்மை.
மேகசாலம் : மேகக்கூட்டம்
மேம்பாடு : பெருமை.
மைவரை : நீலமலை.
மொய்ம்பு : வலிமை.
மோதகம் : கொழுக்கட்டை
யாத்து : கட்டி.
யாழ் : வீணை.
ரமணீயம் : சந்தோஷத்தைத் தருவது.
வண்ணம் : நிறம்.
வதியும் : தங்கும்.
வதுவை : மணம்.
வயம் : வெற்றி.
வயவு : கருப்ப நோய்.
வயின் : வயிறு, இடம்.
வருணம் : சாதி.
வரையாது : நீக்காது.
வலம்புரி , வலப்புற முழுக் கோடிய சங்கு.
வள்ளுகிர் : கூரியநகம்.
வனப்பு : அழகு.
வாகுவலயம் : தோள்வளை.
வாகை : வெற்றிமாலை.
வாதுவர் : குதிரைப் பாகர்.
வாதை : துன்பம்.
வாம்புரவி : தாவுங்குதிரை.
வாய்ப்பு : இடம்.
வாய்வாளாமை : மௌனம்.
வாயில் : வழி.
வாராணசி : காசி.
வாரி : கடல்.
வானமீன் : நக்ஷத்திரம்.
விகசித்து : மலர்ந்து.
விசும்பாறாக : ஆகாயமார்க்கமாக.
விசும்பு : ஆகாயம்.
விசுவரூபம் : பேருருவம்.
விஞ்சுதல் அதிகப்படல்.

விஞ்சையர் : வித்தியாதரர்.
விட்டேறு : வேல்.
வித்தியாதரர்: மாலிகாஞ்சனம் முதலிய மாயவித்தையையுடைய ஒரு தேவசாதியார்.
விந்தை : விநோதம், ஆச்சரியம்.
விபுதர் : தேவர்.
விருந்து : புதுமை.
விலங்கல் : மலை.
விளித்து : அழைத்து.
விளைவு : பயன்.
வீரவாதம் : வீரப்பேச்சு.
வெகுளி : கோபம்.
வெங்கிடல் : முறுகுகாட்டல்.
வெய்யவன் : சூரியன்.
வெருட்டி : அச்சுறுத்தி.
வெருவுதல் : அஞ்சுதல்.
வெள்ளிடை : வெளியிடம்.
வெளிறு : அறிவின்மை.
வெற்பு : மலை.
வேட்கை : ஆசைப்பெருக்கம்.
வேதிகை : மேடை.
வேழம் : யானை.
வேனில்வேள் : மன்மதன்.